## தமிழ்ப்போராளி

# பேராசிரியர் சி.இலக்குவனார்

(1910 - 1973)



### இலக்குவனார் திருவள்ளுவன்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் எனும் கொள்கை அடிப்படையில், உறுபசியும் ஓவாப்பிணியும், செறு பகையும் நீங்கிய மக்களினத்தை உருவாக்கவும் மொழிவழி மாநிலங்கள் முழுத் தன்னாட்சி பெற்று முழு உரிமையுடன் சாதி மத வருக்க வேறுபாடு அற்ற மக்களாட்சிச் சமநிலைக் குடியரசுகளாய் இணைந்து வாழும் வன்மைமிக்க பாரதக் கூட்டரசை உருவாக்கவும், அந்தந்த மாநிலங்களில் அந்தந்த மாநில மொழிகட்கே முதன்மை என்ற அடிப்படையில் மொழிகளின் சமஉரிமையை நிலைநாட்டவும், தமிழ்நாட்டில் தமிழுக்கே முதன்மை தமிழில்தான் எல்லாம் என்ற நிலையை விரைவில் உண்டாக்கவும், தமிழர் பங்குபெற உரிமையுள்ள இடங்களில் எல்லாம் தமிழும் இடம் பெறவும், காலத்துக்கேற்ப, மரபு கெடாது, தமிழை எல்லா வகையாலும் வளப்படுத்தவும் ஒல்லும் வகையால் அயராது உழைப்பதே இனி எனது வாழ்நாட் பணியாகும்.

- சி.இலக்குவனார்

திரு மு.வாசுதேவன் -
திருவாட்டி வா.அனந்தலட்சுமி

ஆகியோர் திருமகன்

திருநிறை செல்வன் பொறி. வா.பாலாசி

திரு இ.திருவள்ளுவன் -
திருவாட்டி தி.அன்புச்செல்வி

ஆகியோர் திருமகள்

திருநிறை செல்வி பொறி. தி.ஈழமலர்

ஆகியோர் திருமண விழாவிற்கு வருகை தந்து

வாழ்த்தி மகிழ்வித்த அனைவருக்கும்

நன்றி.



தமிழ்க்காப்புக்கழகம்

இலக்குவனார் இலக்கிய இணையம்

செம்மொழிச்சுடர் மின்னிதழ்
(http://semmozhichutar.com)

இலக்குவனார் இணையதளம்
(http://www.ilakkuvanar.org)

நட்பு இணைய இதழ் (http://natpu.in)

மாசி 7, தி.பி.2043
பிப். 19, கி.பி.2012

# தமிழ்ப்போராளி பேராசிரியர் சி.இலக்குவனார்

இலக்குவனார் திருவள்ளுவன்

## 1.முன்னுரை

நாட்டு விடுதலைக்காக ஆயுதம் ஏந்திப் புரட்சி நடத்திய போராளிகளை உலகம் அன்று முதல் இன்று வரை கண்டு வருகிறது. ஆயுதம் ஏந்தாமல் மக்கள் உள்ளங்களில் தம் எண்ணங்களை விதைத்துப் புரட்சி ஏற்படுத்தும் போராளிகளையும் உலகம் சந்தித்து வருகிறது. ஏட்டில் எழுத்தாலும், நாட்டில் உரையாலும் செயலாலும் களத்தில் நின்றும், மக்கள் நலனுக்காகப் போராடிய சிந்தனையாளர்கள் சிலரே உள்ளனர். அத்தகையோருள் எண்ணத்தக்க ஒருவரே தமிழ்ப்போராளிப் பேராசிரியர் சி.இலக்குவனார். தத்தம் பகுதி அளவில் சிந்தனையாளராகத் திகழ்ந்து இலக்கியவாதிகளாக மிளிர்ந்து புரட்சியாளராக ஒளிர்ந்தவர்களையும் உலக அளவில் மதித்துப் போற்றுவதே உலக வழக்கு. தமிழ்நாட்டின் அறிஞர்களையும் புரட்சியாளர் களையும் மன்னர்களையும் தலைவர்களையும் நாம் சுருங்கியக் கண்ணோட் டத்தில் பார்க்கின்றோம். அவ்வாறில்லாமல் உலக அளவிலேயே பார்க்க வேண்டும். அத்தகைய உலக ஆன்றோர்கள் தமிழ் நாட்டில் எண்ணற் றோர் இருந்துள்ளனர். அவர்களுள் குறிப்பிடத்தகுந்த கடந்த நூற்றாண்டுப் புரட்சிப் போராளியே பேராசிரியர் சி.இலக்குவனார் ஆவார்.

"என் வாழ்க்கையே தமிழ்நலம் நாடிய போராட்டக் களம்தான்" எனப் பேராசிரியரே 'என் வாழ்க்கைப்போர்' என்னும் தம் வாழ்க்கை வரலாற்று நூலில் குறிப்பிட்டுள்ளார். புகழ் வாய்ந்த தமிழறிஞர்களையும் நாட்டுத் தலைவர்களையும் கண்டுள்ள தமிழ் உலகில் மொழிகாக்கும் போராளியாகத் திகழ்ந்த ஒரே பேராசிரியர், பேராசிரியர் முனைவர் சி.இலக்குவனார் அவர்கள்தாம். கட்டுக்கடங்காத் தமிழார்வமும் பொங்கி எழும் பைந்தமிழ் எழுச்சியும் பேராசிரியரின் மாணவ வாழ்க்கையையே போர்க்களமாக அமைத்தது.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பேராசிரியரைப் பற்றிப் பின்வருமாறு தெரிவித்துள்ளார் (வீ.முத்துச்சாமி : இலக்குவனார் ஆய்வுப்பண்பு):

> "மொழியில் தமிழின் தூய்மையையும் தலைமையையும் கடுமை யாய்ப் பேணுபவர். குலவியலில், வெளிப்படையாகவேனும் மறைவாகவேனும் வெறியற்றவர். மதவியலில் நடுநிலையானவர், சமநிலையுணர்வினர்.
>
> அன்பு, அடக்கமுடைமை, செருக்காமை, ஆரவாரமின்மை, அழுக்காறின்மை, உள்ளொன்று வைத்து புறம் ஒன்று பேசாமை,

கொள்கையுறைப்பு, அஞ்சாமை, ஊக்கமுடைமை, பணத்தினும் பண்பாட்டைப் பெரிதாகக் கொள்கை, தலைசிறந்த தமிழ்ப்பற்று, ஆகியன அவரிடம் நான் கண்ட பண்புகள்."

தலைவனுக்கும் போராளிக்கும் இருக்கவேண்டிய இப்பண்புகள் பேராசிரியரிடம் குடிகொண்டிருந்தமையால் அவரால் பிறரை வழிநடத்திச் செல்லும் போராளியாகத் திகழ முடிந்தது.

முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள் மேற்குறித்த நூல் வழியாகப் பின்வருமாறு பேராசிரியரின் புலமைச் சிறப்பையும் நாடு தழுவித் தனித்தமிழ் இயக்கம் நடத்திய மேன்மையையும் குறிப்பிட்டுள்ளார்:

"ஆங்கிலக்கடல் நீந்தித், தமிழ்க்கரை ஏறிய அறிஞர் பெருமக்களில் ஒருவர். தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த புலமையும் இலக்கண நூல்களில் நுணுகிய ஆராய்ச்சியும் உடையவர்.

உள்ளத்தில் கபடம் இன்றி, எதையும் வெளிப்படையாகவும் துணிவாகவும் கூறும் ஆற்றல் படைத்தவர்.

தமிழ் வளரவும் தமிழகம் செழிக்கவும் தமிழ்மக்கள் நல்வாழ்வு வாழவும் தம் வாழ்நாள் முழுவதும் தன்னலமின்றிப் பெரிதும் உழைத்து வந்தார்... தமிழ்க்காப்புக் கழகத்தை அவர் தோற்றுவித்து மாவட்டங்களிலும் சிற்றூர்களிலும் அதன் கிளைகளை நிறுவிப்பெருந்தொண்டு புரிந்தவர். அவ்வியக்கத்தின் நோக்கம் பிற மொழிகள் கலப்பின்றித் தனித்தமிழ் மொழியில் எழுதவும் பேசவும் வேண்டும் என்பது. இது பெரும்பாலும் மறைமலை அடிகளின் வழியைப் பின்பற்றியது. இது தமிழகத்தில் ஓரளவு வெற்றிபெற்று வளர்ச்சியடைந்து கொண்டு வருகிறது."

பன்மொழிப் புலவர் கா.அப்பாத்துரையார்,

"ஆரவாரமும் சார்பும் அற்ற அவரது திறனாய்வுரைகள் நாம் விரும்பும் இடத்திலும் சீரியது, நாம் விரும்பாத இடத்தில்கூடச் சீரியதேயாகும். நான் அவரிடம் கருத்து வேற்றுமை அற்ற நிலையில்கூட, கருத்து வேறுபாடுடையவர்கள் நலக்கூறுகளை அவர் உணர்ந்து பாராட்டுமிடங்களில் இவ்வுண்மை கண்டு வியந்துள்ளேன்.

பெரியாரிடம் அசைக்கமுடியாத உறுதியான பற்றுடையவர். அவர் குறிக்கோள் வழியைத் தம் ஆராய்ச்சியால் கண்டு உறுதி கொண்டு விளக்குபவர்.

எவ்வளவு பெரியவரையும், எவ்வளவு நண்பரையும், குற்றங்காணின் மழுப்பாது இடித்துரைத்துக் கண்டனக் குரல் எழுப்பும் நக்கீர மரபினர். இதனால் பலதடவை பதவிக்கே ஊறு நேர்ந்ததுண்டு."

என்று பேராசிரியரின் நடுநிலைத் திறனாய்வையும் குற்றம் கண்டவிடத்து இடித்துரைக்கும் துணிவையும் பாராட்டி உள்ளார்.

தேவை உறுநருக்கு உதவுவதும் கடமை தவறுநர்க்கு இடித்துரைப்பதும் போராளியின் கடமைதானே. மாணாக்கர்களிடையேயும் பொதுமக்களிடையேயும் அவர் பரப்பிய தமிழுணர்வு தமிழ் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது. பரப்புரைகளில் இலக்கியச் சிறப்புகளுடன் தமிழுக்கு ஏற்பட்டுள்ள தீங்கையும் காக்கும் கடப்பாடு ஒவ்வொருவருக்கும் உள்ளதையும் விளக்கினார் பேராசிரியர்.

**“தமிழ், தமிழினம், தமிழிலக்கியம் இவற்றில் ஒன்றுபோம் எனில் மற்றவும் ஒழியும்.” (பாவேந்தர் பாரதிதாசன்) என்பதையே எல்லா இடங்களிலும் தொடக்கம் முதலே வலியுறுத்தினார் பேராசிரியர்.**

**“வண்டமிழ் நைந்திடில் எது நம்மைக் காக்கும்?” (பாவேந்தர் பாரதிதாசன்) என்பதைப் பொதுமக்களிடம் ஆழமாக விதைத்தார் பேராசிரியர்.**

**“நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும் நான் நான் நான்” (பாவேந்தர் பாரதிதாசன்) என ஒவ்வொருவரும் எண்ண வேண்டும் என்பதற்கேற்ப பேராசிரியர் செந்தமிழாய்த் திகழ்ந்தார்.**

இவ்வாறு தமிழுக்காக வாழ்ந்து தமிழாய் வாழ்ந்த பேராசிரியரின் பல்துறைப் புலமையையும் பன்முக ஆளுமையையும் தமிழ்ப்பகைக்கு எதிரான போராட்டச் செயல்பாடுகளையும் தமிழுலகம் போற்றத் தவறவில்லை. பேராசிரியரைக் குறித்த மதிப்பீடுகளே பேராசிரியரைத் தமிழுலகம் அடையாளம் தெரிந்து வணங்கியதற்குச் சான்றாகும். சான்றுக் குச் சில பார்ப்போம்.

அளப்பரிய தொண்டாற்றிய பெருமகனார்,
ஆற்றல் களஞ்சியம்,
இருபதாம் நூற்றாண்டு இளங்கோ அடிகள்,
இருபதாம் நூற்றாண்டுத் தொல்காப்பியர்,
இருபதாம் நூற்றாண்டுத் திருவள்ளுவர்,
இருபதாம் நூற்றாண்டு நக்கீரர்,
இலக்கணப் புலமையும் இலக்கியப் புலமையும் மிக்கவர்,
இலக்கணச் செம்மல்,
உத்தமர்,
உயர் பண்பாளர்,
உழைப்பால் உயர்ந்தவர்,
எழுத்துலகின் இளங்கோ,
எளியநடையும் புதிய நோக்கும் கொண்ட படைப்பாளர்,
குறள்நெறி பரப்பும் கொள்கைவீரர்,
குறள்நெறிக் காவலர்,

சங்கத்தமிழ் வளர்த்த சான்றோர்,
செந்தமிழ்மாமணி,
செந்தமிழ் நலம் பேணும் செல்வர்,
தமிழே மூச்சென உயிர்த்து வாழ்ந்தவர்,
தமிழர்மாண்பு பேணும் மாண்பினர்,
தமிழாக்கத் தொண்டினர்,
தமிழுலகு போற்றும் தலைவர்,
தமிழுக்காக வாழ்ந்து தமிழாய் வாழ்ந்தவர்,
தமிழுக்காக உழைத்தவர்,
தமிழுக்கும் தமிழர்க்கும் பாடுபட்டவர்,
தமிழ் வாழ்விற்காக வாழ்ந்தவர்,
தமிழ் ஞாயிறு,
தமிழ் மொழியின் தனிச்செல்வர்,
தமிழ்க் கொண்டல்,
தமிழ்க்கென வாழ்ந்து தமிழாய்ச் சிறந்தவர்,
தமிழ்க்காப்பினை இலக்காகக் கொண்டவர்,
தமிழ்த்தாயின் தவப்புதல்வன்,
தமிழை நினைந்து தம்மை மறந்தவர்,
தன்மானப் பெரும் புலவர்,
தொல்காப்பியச்செல்வர்,
தொல்காப்பியத்தையும் திருக்குறளையும் இரு கண்களாகக் கண்டவர்,
பண்பாட்டின் காவலர்,
பயிற்சிமொழிக்காவலர்,
பழமைக்கும் மறுமலர்ச்சிக்கும் பாலமாய் இருந்தவர்,
பழுத்த தமிழ்ப் புலமை வாய்ந்தவர்,
புலவர்சீர் பரவுவார்,
புதுமைப் பார்வை கொண்டவர்,
பைந்தமிழ் வளர்த்த ஐந்தமிழ்ப் புலவர்,
பைந்தமிழ்த்தாய் ஈன்றெடுத்த பாவலன்,
மன்பதைக்கு எடுத்துக்காட்டானவர்,
முத்தமிழ்க்காவலர்,
முத்திரை பதித்த இதழாளர்,
முதுபெரும் புலவர்

என்றும் இவை போன்று மேலும் பல்வகையாகவும் பேராசிரியரை ஆன்றோரும் சான்றோரும் குறிப்பிடுவன பேராசிரியரின் பண்பு நலன்களுக்கும் புலமைத் திறத்திற்கும் தமிழ் நல வாழ்க்கைக்கும் எடுத்துக் காட்டாவன. பொதுவாகப் பிற அறிஞர்களைப் பற்றியும் பல்வகைப் பாராட்டுரைகள் அமைந்திருக்கலாம்; எனினும் பேராசிரியர் மக்களுக்கான அறிஞர் என்ற சிறப்பில் மிகுதியாக அடையாளப்படுத்தப்பட்டுள்ளார்.

இவை தவிர, பேராசிரியரின் போர்க்கள வாழ்வைப் படம்பிடிப்பன போன்று அமைந்த பின்வரும் தகைமை மொழிகள் வேறு யாரையும் குறித்துச் சொல்லப்படவில்லை:

இந்தி எதிர்ப்புப் படைத்தளபதி,
இந்தி எதிர்ப்புப் போருக்கு மூலவர்,
எதிர்நீச்சலில் எரிகதிர் நித்திலம்,
கிளர்ச்சியாளர்,
கூண்டிலே அடைக்க முடியாத சிங்கம்,
சிறையே தவம் செய்த சீமான்,
செந்தமிழ்ப் படையின் மானச்செம்மல்,
தமிழ் இயக்கத்தின் ஆணிவேர்,
தமிழ் எழுச்சியின் உருவம்,
தமிழ் காத்தத் தானைத் தலைவர்,
தமிழ்க்காப்புத் தலைவர்
தமிழ்காக்கச் சிறை சென்றவர்,
தமிழ்த்தாய்,
தமிழ்ப்போராளி
தமிழர் தளபதி,
தமிழியக்கம்,
தமிழுக்காகத் தன் வாழ்வைப் பணயம் வைத்த அஞ்சா நெஞ்சர்,
தலைமைத் தலைவர்,
திராவிட இயக்க வெற்றிகளுக்கு வித்திட்டவர்,
புரட்சிக் கவிஞரின் தமிழ் இயக்கத்திற்குச் செயல் வடிவம் கொடுத்தவர்,
புரட்சிப் பேராசிரியர்,
புரட்சியாளர்,
போர்க்குணம் கொண்டோர்களின் வழிகாட்டி,
முத்தமிழ்ப் போர்வாள்,
மொழிக்காக வாழ்வை ஈந்த புரட்சிப்புயல்,
போர்க்குணம்கொண்டவர்,
வீரத் தமிழ்த் திருமகன்

இவ்வாறு வெற்றியையும் தலைமையையும் புரட்சியையும் குறிப்பன புரட்சிப் போராளியாகப் பேராசிரியர் வாழ்ந்தமையை அடையாளப்படுத்துவனவே.

இத்தகைய மொழி இனம் காத்த பெரும்போராளி பேராசிரியர் சி.இலக்குவனார் வாழ்க்கைப் பாதையில் சிலவற்றை நாம் பார்ப்போம்.

## 2. போர்முகம் நோக்கிய இளமைப்பாதை

பேராசிரியர் தந்தை மு.சிங்காரவேலர் பத்து மா நிலங்களும் கறவை மாடுகளும் உழவு மாடுகளும் மளிகைக்கடையும் உடைய செல்வத்தில் திளைத்தவரே. தாய் அ.இரத்தினம்மாள் நாட்டாண்மைப் பெருமை பெற்றிருந்த குடும்பத்தைச் சேர்ந்தவரே. இரு வாசல் இருப்பின் செல்வச் செழிப்பின் அடையாளமாகக் கருதப்பட்ட அக்காலத்தில் அத்தகைய இரு வாசல் உடைய மிகச் சில வீடுகளில் இவர்களின் வீடும் ஒன்று. என்ன இருந்து என்ன? தந்தையின் இழப்பால் எல்லாம் இழந்த நிலைக்கு ஆளாயினர். இதனை அறிந்தால்தான், பேராசிரியர் எத்தகைய சூழலில் தமிழ்நலன்நாடும் போராளியாக வாழ்ந்துள்ளார் என்பதை நாம் உணர முடியும்.

கவி வல்ல முத்து அவர்களின் மகனான சிங்காரவேலர் பேராசிரியரையும் அவரின் தமையனான நல்லபெருமாளையும் கல்வியில் உயர்நிலை யடையச் செய்ய வேண்டும் என எண்ணிக் கல்வி வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தார். தொடக்கத்தில் வீட்டிலேயே ஆசிரியர் ஒருவரை வரவழைத்துக் கற்பிக்கச்செய்தார். பிற பிள்ளைகளும் இங்கே வந்து கற்றுக்கொண்டனர். அவருக்கு ஒவ்வொரு வேளை ஒவ்வொரு வீட்டில் உணவு எனத் திட்டமிட்டபடி உணவு கிடைக்கவில்லை என வேறிடம் சென்று விட்டார். அதனால் பக்கத்து ஊரான பஞ்சநதிக்குளத்தில் உள்ள சுப்பையாவாத்தியார் என்பவர் வந்து நடத்திய திண்ணைப் பள்ளிக்கூடம் சென்று பயின்றார். நன்றாகக் கற்பிக்கப்பட்டாலும் இத் திண்ணைப்பள்ளிக்கூடமும் நிலைக்கவில்லை. பின்னர் வைத்தியலிங்க(த் தேவ)ர், சீனுவாச(த்தேவ)ர் ஆகியோர் வீட்டுத் திண்ணைகளில் நடைபெற்ற பள்ளிக்கூடம் சென்று பயின்றார். இவர் தந்தையாரைப் போன்று பிள்ளைகளைக் கல்வியில் வல்லவர்களாக ஆக்குவதில் நாட்டம் கொண்ட கு.சி.அமிர்தலிங்க(த் தேவ)ர் என்பவர் தம் வீட்டையொட்டியே பள்ளிக்கூடம் ஒன்று அமைத்தார். அங்கு ஆசிரியர் கண்ணுசாமி(பிள்ளை) அனைவருக்கும் பாடங்கள் கற்பித்தார். இங்கே பேராசிரியர் தம் 7 ஆம் அகவைக்குள்ளாகவே ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நீதிசாரம், கிருட்டிணன் தூது, நிகண்டுகள், கீழ்வாய் இலக்கம், மேல்வாய்இலக்கம், கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் என அனைத்தும் கற்றார். மாலையில் விளையாட்டு, இரவில் நாடகப்பயிற்சி, கலைநிகழ்ச்சிகள், வழிபாட்டுப் பாடல் பயிற்சி ஆகியவையும் அளிக்கப்பட்டமையால் முழுமையான கல்வியாக இப்படிப்பு அமைந்தது எனலாம்.

ஆனால், பிள்ளைகள் தொடக்கக்கல்வி பயிலும் சிறு பருவத்திலேயே, மார்கழித்திங்கள் ஒன்றில், திருவிழா ஒன்றிற்குச் சென்ற தந்தையார்

- பிள்ளைகள் பிற குழந்தைகள் போல் தின்பண்டங்கள் கேட்காமல் புத்தகங்கள் கேட்டதால் மகிழ்ந்து, கேட்ட புத்தகங்களை வாங்கி வந்த தந்தையார் - உடனே வயிற்றுப் போக்கு(காலரா) நோயையும் அல்லவா காசில்லாமலே வாங்கி வந்து விட்டார். போதிய மருத்துவ உதவி இல்லாமல் அல்லலுற்ற அக்காலச்சூழல், இளமையிலேயே தந்தையாரின் உயிரைப் பறிக்க வழி வகுத்து விட்டது; மருத்துவர் வந்தும் காலம் கடந்த நிலையால் அன்பு மனைவியையும் அருமை மக்களையும் தவிக்க விட்டு இயற்கை எய்தினார். குடும்பத் தலைவரை இழந்தபின் குடும்பம் மாலுமி இல்லாத கப்பல்போல் தடுமாறத்தானே செய்யும். கடன்பெற்றோர் திருப்பித் தராததாலும் மளிகைக்கடைக்கு வரவேண்டிய வருவாய் நின்று போனதாலும் அன்றாடக் குடும்பச் செலவிற்கு மாறி மாறி மாடுகள், உடைமை மாற்றம் ஆயின. வாழ்க்கைப் பயணத்தில் ஏற்படும் தடைகளை உடைக்கக் கடன்; கடன்சுமையில் இருந்து தப்பிக்க ஒவ்வொரு நிலமாக விற்பனை என நிலப்பரப்பும் சுருங்கியது. கூலிக்குப் போதிய ஆட்கள் அமர்த்த இயலாமையால், பேராசிரியரே களையெடுத்து, நாற்று நட்டு, அறுவடை செய்து, அனைத்து உழவு வேலைகளையும் சிறு அகவையிலேயே பார்த்துள்ளார். எனினும் உழுவதற்கு உரிய மூத்தோர் இன்றி நிலமகளும் புறக்கணிக்க வறுமை ஆட்கொண்டது. இருப்பினும் தாயாரின் பேரார்வமும் பேராசிரியரின் கல்வி நாட்டமும் நின்று போன பள்ளி வாழ்க்கையைத் தொடரச் செய்தது. தந்தையார் இருந்தவரை கட்டணம் செலுத்திப் பயின்றவர் தமையனுடன் சேர்ந்து வாய்மேட்டுக்கடைத் தெருவில் தொடங்கப்பட்ட அரசு தொடக்கப்பள்ளியில் மூன்றாம் வகுப்பில் சேர்ந்தார்.

தமையனார் ஓராண்டிலேயே படிப்பை நிறுத்திக் கொண்டாலும் பேராசிரியர் கல்வியைத் தொடர்ந்தார். தலைமை ஆசிரியர் சோம சுந்தரம்(பிள்ளை) அவர்களின் இனிய பண்பும் அன்பும் மாணவர்களைக் கவர்ந்தன. ஆசிரியர் வீரபுரம் குமாரசாமி நகர்ப்புற மாணவர்கள் போல் தோற்றப்பொலிவான உடைஒழுங்கையும் மிடுக்கான நடையையும் ஏற்படுத்தினார். இப்பள்ளிக்கு வந்த கல்விக்கூடக் கண்காணிப்பாளர் ஒருவர்,

"மகன்தந்தைக்காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்லெனும்சொல்"

என்னும் திருக்குறளை விளக்கி ஆற்றிய உரை பேராசிரியரின் இளம் உள்ளத்தில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. சிறந்த சொற்பொழிவாளராக வேண்டும்; உலகம் போற்றும் உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என்னும் உயர்வான எண்ணத்தை விதைத்தது; எண்ணிய எண்ணியாங்கு எய்தும் முயற்சியில் ஈடுபடச் செய்தது.

ஆனால், ஐந்தாம் வகுப்பு முடிந்த பின்னர் மீண்டும் சிக்கல்.

கல்விக்கு முற்றுப்பள்ளி இட்டுக் குடும்பச் சுமையைத் தமையனுடன் பகிர்ந்துகொள்ளும் நிலை. கல்விக்கு ஏற்பட்ட முற்றுப்புள்ளியைத் தொடர்புள்ளியாக மாற்ற வேண்டும் என்பது பேராசிரியரின் பேரவா. அன்னையாருக்கும், மூத்தவன்தான் குடும்பச்சுமையை ஏற்றுப் படிப்பை இழந்தான் என்றால் இளையவனும் இழக்க வேண்டுமா என்ற எண்ணம்; தன் கணவர் எண்ணத்திற்கேற்ப இளைய மகனாவது கல்வியில் உயர வேண்டும் என்ற தளராத ஆசை.

குடும்ப வருவாய்க்காகத் தமையன் மளிகைக்கடை நடத்தவும் பண்ணையாளை நீக்கிவிட்டமையால், இவர் மாடுமேய்க்கும் பணியில் ஈடுபடவும் வேண்டியதாயிற்று. நன்கு படிக்கும் இவர் மாடுமேய்த்தது கண்டு, 'ஐந்தாம் வகுப்பு முடித்துவிட்டு மாடு மேய்க்கின்றானே' என்ற வருத்த உரைகள் ஊராரிடம் ஏற்பட்டன; கல்வியால் உயரவேண்டியவன் கழனியில் உழல்கின்றானே என ஆசிரியர்களுக்கும் வருத்தம்.

"யாதானும் நாடாமல் ஊராமல் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு"

என்கிறார் அல்லவா தெய்வப்புலவர் திருவள்ளுவர். தெய்வப்புலவரால் பெரிதும் ஈர்க்கப்பட்டு அவர் நெறியை வாழ்நாள் முழுவதும் பின்பற்றிப் பரப்பிய பேராசிரியர் தொடக்கத்திலேயே தொடர்ந்து கற்க வேண்டும் என்னும் எண்ணப் பிடிப்பில் இருந்தார். பேராசிரியரின் விடாப்பிடியான எண்ணமும் மகன் கல்வியாளராக வேண்டும் என்ற அன்னையாரின் துடிப்பும் நான்காண்டுகளில் பயனை அளித்தன.

தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள (இன்று ஒரத்தநாடு என்றும் சொல்லப்படுகின்ற) உரத்தநாட்டிலும் அரசர்மடம் (இராசாமடம்) என்னும் ஊரிலும் உண்டுறைப் பள்ளிகள் உள்ளன. அரசர் மடத்தில் பேராசிரியரின் மாமா வீரபத்திரர் அவர்களின் இரு மக்கள் பயின்று வந்தனர். அங்குச் சென்று கல்வி கற்கும் தணியா ஆர்வத்தில் பேராசிரியர் இருந்தார். பேராசிரியரின் தொடக்கப்பள்ளி ஆசிரியரான தமையன் முறையினரான சதாசிவம்(பிள்ளை) அவர்கள் விண்ணப்பம் அனுப்ப வழி காட்டிச் சேர்க்கைக்கு வழி வகுத்தார்; மாமாவே அழைத்துச் சென்று அங்கே சேர்த்தார்; தொடக்கப்பள்ளி 5 ஆம் வகுப்பில் ஆங்கிலப்பாடம் இருக்காது என்றும் தரம் குறைந்திருக்கும் என்றும் சொல்லி 5ஆம் வகுப்பில்தான் அவரைச் சேர்த்தனர்.

அனைத்து மாணாக்கர்களினும் மேம்பட்ட நிலையில் அனைத்துப் பாடங்களிலும் முதன்மையாகத் தேர்ச்சி பெற்றமையால் ஆசிரியர்கள், பிற மாணாக்கர்கள் என அனைவரின் அன்பிற்கும் போற்றுதலுக்கும் உரியவராகப் பேராசிரியர் திகழ்ந்தார்; மாணவர் தலைவர் என்ற நிலைமை இல்லாத அக்காலத்திலேயே பேராசிரியரைத் தங்கள் தலைவராகப் பிற மாணவர்கள் போற்றினர்; சொல்வன்மை பெற வேண்டிச் "சொல்லாடல்

கழகம்" ஒன்றை அமைத்துப் பேராசிரியரையே அதற்கும் தலைவராக ஆக்கினர். விடுமுறை நாட்களில் அருகில் உள்ள பெரிய பனங்காட்டில் கூட்டங்கள் நடத்தியமையால் பெரியோர்களும் வந்து கேட்டு உற்சாகப்படுத்தினர்.

கல்வி என்பது புத்தகங்கள் மூலம் அறிவது மட்டும் அல்ல. வாழும் சூழலும் ஒரு புத்தகம்தான். இப் புத்தகம் பேராசிரியரைப் பண்படுத்தியது; சாதி வேறுபாட்டிற்கு எதிரான எண்ணத்தை விதைத்தது; பகுத்தறிவை ஊட்டியது; மனித நேயத்தை வளர்த்தது; உழைத்து உயர வழி காட்டியது. பள்ளிக்குத் தலைமை ஆசிரியராக வந்த சோமசுந்தரம்(பிள்ளை) அவர்கள், மாணாக்கர்கள் நலனுக்கும் சுவைக்கும் ஏற்ற சுவையான உணவினை அளிக்கச் செய்தார்; காய்கனி வாங்கும் பொறுப்பை மாணாக்கர்களிடமே ஒப்படைத்தார்; உணவுச் செலவைக் கூட்டாமலேயே பத்து விழுக்காட்டு மாணக்கர்களைக் கூடுதலாகச் சேர்க்கச் செய்தார்; காய்கனிச் செலவில் மிஞ்சும் தொகையில் சிறப்பு உணவு வழங்கச் செய்தார்; தத்தம் வீட்டு நினைவு நாட்களில் பிராமணர்களுக்கு மட்டும் விருந்தும் காசும் அளித்து வந்த செல்வர்களை மாணாக்கர்களுக்கு விருந்தும் காசும் கொடுக்கச் செய்தார். அதே போல் நாட்டாண்மைக்கழகத் தலைவர் பன்னீர்செல்வம் அவர்கள், சாதிக்கொரு பந்தி என்பது போன்ற சாதிவேறுபாட்டு நிலையை மாற்றி அனைவருக்கும் ஒரே பந்தி என்ற சமநிலையைச் கொணர்ந்தார். இவை யெல்லாம் பேராசிரியரிடம் நேர்மை, ஒழுங்கு, கட்டுப்பாடு, தன்மான உணர்வு முதலியவை மலர்ந்து மணம் வீசக் காரணம் ஆயின எனலாம். இறையருள் நம்பிக்கையும் தன்மதிப்பு இயக்க ஈடுபாடும் உடைய சிலருள் ஒருவராகப் பேராசிரியர் மாறினார்.

பெண்களைப்போல் ஆண்களும் தலைமுடியை வளர்க்கும் அக்கால வழக்கப்படி பேராசிரியரும் நீண்ட கூந்தலைப்போல் முடி வளர்த்திருந்தார். இதனால் பேன்கள் பெருகித் தலையில் சிரங்குகள் தோன்றிவிட்டன. மருந்து தடவினாலும் சிரங்குத் தொல்லை பொறுக்கமுடியாமல் இருந்துள்ளது. ஆனால், தலைமுடியோ, ஒரு முறை நோய்வந்தபொழுது அவரின் அன்னையார் வேண்டியதற்கு இணங்கத் திருப்பதி வேங்கட மலையானுக்கும் வைத்தீசுவரன் கோயில் அப்பனுக்கும் உரியதாய் இருந்தது. ஆகவே அவ்விடங்களில்தான் முடியிறக்க வேண்டும் என்ற நிலைப்பாடு இருந்தது. ஆனால், பேராசிரியர் உடல்நலனுக்கு முதன்மை அளித்தார். இது பற்றி அவர் எழுதி உள்ளது வருமாறு:

> *தலைமயிரைப் போக்குவதற்கும் கடவுளுக்கும் என்ன தொடர்பு? உயிரைக் காத்த கடவுளுக்கு மயிரைக் கொடுப்பது என்பது மூட நம்பிக்கையால் எழுந்ததாகும். சிரங்கு காரணமாக மயிரை அகற்றுவது குற்றமாகாது. கடவுள் சீற்றம் கொள்ள மாட்டார் என்ற எண்ணம் தோன்றியது; சில மாணவர்களும் இக் கருத்தை*

*ஏற்றனர். பின்னர் மயிர் வினைஞரிடம் சென்று தலைமயிரைப் போக்கிக் கொண்டேன். சிரங்கு தொலைந்தது. பின்னர்க் கூந்தலை வளர்க்க விரும்பவில்லை. குட்டையாகக் கத்தரித்துக் கொள்ள விரும்பி முன் பக்கம் பாதியை மழித்தும் பின்பக்கம் இக்கால முறைபோல்(crop) கத்தரித்தும் விட்டுக்கொண்டேன். இது பெரும் புரட்சியாகி விட்டது. என் வகுப்பில் - ஏன் பள்ளிக்கூடத்திலும் - இம்மாதிரி (' கிராப்' ஆக) யாரும் தலைமயிரை வெட்டிக் கொள்ளவில்லை.. . . .*

சில திங்கள் கழித்து முழுமையாகக் கத்தரித்து('கிராப்') வைத்துக் கொண்டாராம். நடுநிலைப்பள்ளியில் படிக்கும் பொழுதே பகுத்தறிவுடன் சிந்தித்துச் செயலாற்றியது அக்காலத்தில் பெரும் புரட்சியாகக் கருதப்பட்டது. மன்பதையின் மூடப்பழக்க வழக்கங்களுக்குத் தன்னை இரையாக்கிக் கொள்ளாமல் பகுத்தறிந்து பாங்குடன் நடந்து கொண்ட இப்போக்கு அவரின் வாணாள் முழுவதும் நின்று நிலைத்து உள்ளது.

பெரும்புலவர் ந.மு.வேங்கடசாமி(நாட்டாரின்) இளவல் ந.மு.கோவிந்தராய (நாட்டா)ர் அவர்கள் அடுத்த தலைமையாசிரியராய் மாறுதலில் வந்தார். இவர் அனைவரையும் சிவநெறிக்கண் திருப்பி ஒழுங்கையும் பண்பாட்டையும் நிலைநாட்டினார். தமிழாசிரியர் நாராயணசாமி(பிள்ளை) ஓய்வு பெற்ற பின் மாறி வந்த தமிழாசிரியர் சாமி. சிதம்பரனார் பேராசிரியர் வாழ்வில் திருப்புமுனையை ஏற்படுத்தினார். அனைவரிடமும் தூய தமிழ்ப்பற்றை வளர்த்த தன்மதிப்புஇயக்கப் பற்றாளரான அறிஞர் சாமி சிதம்பரனார் பேராசிரியர்பால் பேரன்பு கொண்டவர்; 'இலட்சுமணன்' என்னும் பெயரை 'இலக்குவன்' என்று மாற்றியவரும் இவரே. பேராசிரியர், அரசர் மடத்து நடுநிலைக் கல்விக்கூடத்தில் மூன்றாம் படிவத்தில் வெற்றி பெற்றதும் உரத்தநாடு உயர்நிலைக்கல்விக்கூடத்தில் நான்காம் படிவத்தில் சேர்ந்தார்.

நான்காம் படிவம் எனப்படும் ஒன்பதாம் வகுப்பில் பேராசிரியர் விருப்பப்பாடங்களாகத் தமிழையும் ஆங்கில நாட்டு வரலாற்றையும் தெரிவு செய்து படித்தார். பெரியவர் பொன்னண்ணாக் களத்தில் வென்றார் தமிழாசிரியராக மாறி வந்து மேலும் தமிழ் உரம் ஊட்டினார். அடுத்துத் தலைமையாசிரியராகப் பொறுப்பேற்ற சாமிநாத(பிள்ளை) அவர்களும் தன்மான உணர்வினை ஊட்டினார். பொது அறிவியலைக் கற்பித்த ஆசிரியர் சாமி வேலாயுதம்(பிள்ளை) அவர்களும் சிறந்த தமிழறிஞர். பின்னாளில் 'தமிழரசி' என்னும் தமிழ்ப்பாடல் தொகுப்பு நூலையும் 'திருக்குறள் சொல்லடைவு' நூலையும் வெளியிட்டவர். அவர், இவரைப் 'பெரும்புலவராகப் புகழ் பெறுவீர்' என வாழ்த்தியதைப் பெரும் பேறாகக் கருதி மகிழ்ந்தவர் பேராசிரியர்.

வரவேற்புப்பா, வழியனுப்புப் பாடல் என விழாக்களில் பாடல்கள்

பாடியும் தமிழிலும் ஆங்கிலத்திலும் சொற்பொழிவுகள் ஆற்றியும் பேராசிரியர், மாணவர்கள் உள்ளங்களில் மட்டுமல்லாமல் ஆசிரியர் உள்ளங்களிலும் இடம் பெற்றார்.

இத்தகைய சூழலுக்குத் தன்மதிப்பியக்கத் தலைவர் பன்னீர்செல்வம் அவர்களும் பெரியாரின் தொண்டுமே காரணங்கள் என்பதைப் பின்வருமாறு தம் வாழ்க்கை வரலாற்று நூலில் நினைவுகூர்கிறார் பேராசிரியர்.

> "பன்னீர்செல்வம் அவர்கள் சிறந்த ஆசிரியர்களை நியமித்து உரத்தநாட்டு உயர்நிலைக் கல்விக்கூடத்தை ஓர் எடுத்துக் காட்டுக் கல்விக்கூடமாக ஆக்க வேண்டுமென்று விரும்பினார். எல்லா ஆசிரியர்களையும் பிராமணரல்லாதாராகவே நியமித்துப் பிராமணரல்லாதவர்களும் சிறந்த ஆசிரியர்களாக விளங்குவார்கள் என உலகுக்கு அறிவிக்கவேண்டுமென்பதும் அவர் கொள்கை. ஏனெனில், பிராமணர்கள்தாம் ஆசிரியர் தொழிலுக்குரியவர்கள் என்ற நம்பிக்கை வேரூன்றியிருந்த காலம் அது. அன்றியும் படிப்பதற்குத் தகுதியானவர்களும் பிராமணச் சிறுவர்கள்தாம் என்று கூறிவந்த காலமும் அதுதான். 'வயலிலும் வரப்பிலும் வேலை செய்ய வேண்டிய நீங்கள், கல்விக்கூடத்தில் சேர்ந்து கொண்டு எங்களைத் தொல்லைப் படுத்துகின்றீர்களே. சுட்டுப்போட்டாலும் உங்கள் நாவில் கல்வி ஏறாது' என்று பிராமணரல்லாத சிறுவர்களை நோக்கிப் பிராமண ஆசிரியர்கள் கூறி வந்தனர். உழைப்பதற்கே பிறந்தவர்கள் ஓதுவதற்கன்று என்று மனுநீதியில் கூறப்பட்டுள்ளதை ஒட்டி, 'வேளாண்மாந்தர்க்கு, உழுதூண் அல்லது இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி' எனப் பழந்தமிழ் நூலான தொல்காப்பியத்திலும் இடைச் செருகலாக எழுதி வைத்துக் கொண்ட கொடுமை நிகழ்ந்த நாடு அன்றோ இத் தமிழ்நாடு. கல்விக் கூடங்களிலும் கல்லூரிகளிலும் உச்சிக்குடுமி வைத்த பிராமணர்களே ஆசிரியர்களாய் இருந்து வந்துள்ளனர். மாணவர்களிலும் பெரும்பாலோர் பிராமண வகுப்பினரே."

தமிழர்க்குத் தன் மதிப்பை உணர்த்திய பெரியாரால் பள்ளிப் பருவத்திலேயே ஈர்க்கப்பட்டவர்; நீதிக்கட்சித் தலைவர்கள் ஆற்றிய தன்மதிப்பியக்கப் பணிகளால் தமிழர் நலனடைந்ததைக் கண்ணாரக் கண்டவர்; எனவேதான் பேராசிரியர் வாணாள் எல்லாம் தன்மானப் பாதையில் தடம் புரளாமல் வாழ்ந்தார்; பிறரையும் அவ்வாறு தன்மதிப்புடன் வாழ அறிவுறுத்தினார். ஆரியத்தின் தீமைகளை உணர்த்தினாலும் பிராமண மாணவர்கள் கல்வி கற்பதற்கான உதவிகளைச் செய்யத் தவறியதில்லை. சாதி வேறுபாட்டைப் போக்குவதற்காகச் சாதியத்தை எதிர்த்தாரே தவிர, சாதி அடிப்படையில் வேறுபாடு காட்டவில்லை. (பின்னாளில் புதுச்சேரிப் பல்கலைக்கழகத் துணை வேந்த

ராகவும் மத்திய அரசின் திட்டக்குழுவில் உறுப்பினராகவும் திகழ்ந்த) முனைவர் வேங்கடசுப்பிரமணியன் போன்றோர் வாழ்நாள் முழுவதும் பேராசிரியரைப் போற்றியதன் காரணம் அதுதான்.

மேனாடுகளில் படிக்கும் பொழுதே பணியாற்றிக் கல்விச்செலவைத் தம் உழைப்பால் ஈடுகட்டும் நிலையை இக்காலத்தில் பார்க்கின்றோம். ஆனால், அக்காலத்திலேயே அதுவும் பள்ளிமாணவ நிலையிலேயே பேராசிரியர் கல்வி மீதுள்ள ஆர்வத்தினாலும் உழைப்பின் மீதுள்ள மதிப்பாலும் இந்நிலையை மேற் கொண்டார். பிறருக்குக் கல்வி கற்பித்து அதனால் பெறும் வருவாயைக் கல்விச் செலவிற்குப் பயன்படுத்திக் கொண்டார். தம் தமிழாசிரியர் பெரியவர் பொன்னண்ணாக் களத்தில் வென்றார் அவர்களுக்கு ஆங்கிலம் கற்றுத் தந்து அவர் தரும் உதவிகளை ஏற்றுக் கொண்டார். ‘பிச்சை புகினும் கற்கை நன்றே’ என்னும் பொழுது உழைத்து ஈட்டிக் கற்பது மேலானதன்றோ! பேராசிரியர், வாய்ப்பு உள்ள பொழுதெல்லாம் ஊர் மக்களிடையே தமிழுணர்வையும் தமிழ் இலக்கியச் சிறப்பையும் பகுத்தறிவினையும் தன்மானத்தையும் ஊட்டத் தவறவில்லை. தொடக்கத்தில் சிறுவன் பேசுகின்றான், கேட்போம் என வந்தவர்கள் எல்லாம் பின்னர் அவர் பொழிவுத்திறனையும் ஆழ்ந்தகன்ற கல்வியையும் அறிந்து ஈடுபாடு காட்டினர்.

பள்ளி இறுதி வகுப்பில் தேர்ச்சி பெற்றதும் வேலைக்குச் செல்லுமாறு அண்ணனின் தூண்டல். ப.இ.வ. தேர்ச்சி பெற்றிருந்ததால், தொடக்கப்பள்ளி ஆசிரியராகலாம் அல்லது அரசு துறைகளில் எழுத்தராகப் பணியாற்றி மேலும் மேலும் உயர்நிலை அடையலாம் என்பது நண்பர்களின் அறிவுரை. ஆனால், அவர் உள்ளம் அதற்கு இடம் தரவில்லை. தமிழறிஞர்களால் போற்றிப் புகழப்பட்ட தமிழ் உணர்வு தமிழின் பக்கமே அவரைத் திருப்பியது. தம் தமிழாசிரியர் பெரியவர் பொன்னண்ணாக் களத்தில் வென்றார் அறிவுரைக்கிணங்கத் திருவையாற்றிலுள்ள அரசர் கல்லூரியில் தமிழ் பயில விரும்பினார். தன் முயற்சியில் அங்குச் சென்று சேர்க்கைக்காக வேண்டினார்; இடமும் கிடைத்தது; தங்கிப் படிப்பதற்கான ஏற்பாடுகளுக்காக ஊர் திரும்பினார். வந்த இடத்தில் ‘சாம்பவான் ஓடை’ என்னும் ஊரில் தொடக்கப்பள்ளியில் பயிற்சி பெறாத ஆசிரியப்பணி கிடைத்து அங்கே பணியில் சேர்ந்தார். தன் மடியில் தவழ வேண்டிய தவமகன் இங்கே உழல்வதைத் தமிழ்த்தாய் விரும்புவாளா? ஆய்வாளர் ஒருவர் பயிற்சி பெற்றவரையே நியமிக்க வேண்டும் எனக் கூறியதால் இவ்வேலை போயிற்று. எனவே, திருவையாற்றுக்குத் திரும்பி அரசர் கல்லூரியில் உவகையுடன் புலவர் படிப்பில் கவனம் செலுத்தினார்.

இக்கல்லூரியின் பெயர் வரலாறு, தமிழ்ப்பகைவர்கள் விழிப்புடனும் ஒற்றுமையாகவும் செயல்படுவதால் தமிழன்பர்கள் அவர்களினும் மிகுதியாக விழிப்பாகவும் ஒற்றுமையாகவும் இருக்க வேண்டும் என்ற உண்மையை உள்ளத்தில் பதித்தது. உயர்திரு பன்னீர் செல்வம் அவர்களும்

தமிழவேள் உமாமகேசுவரம் (பிள்ளை) அவர்களும் அரசர் கல்லூரியில் தமிழ்ப் புலவர் படிப்பை ஏற்படுத்தினர். இதனால் சமசுகிருதம் பயிலும் பிராமணர்கள் நிறைந்த இக்கல்லூரியில் தமிழ் படிக்கத் தமிழ் மாணவர்கள் சேர்ந்தனர். படிப்படியாகத் தமிழ்மாணவர் எண்ணிக்கை பெருகியது. இதனால் பொறாமையுற்ற பிராமண மாணவர்கள் சிலர் சமசுகிருதக்கல்லூரி என்னும் பெயர் உள்ள கல்லூரியில் தமிழுக்கு இடம் தந்தது தகாது எனப் போர்க்கொடி தூக்கினர். இக்கல்லூரியை நிறுவிய சரபோசி மன்னர் தம் அறக்கட்டளை ஆவணத்தில் என்ன குறித்திருக்கின்றார் என ஆராய்ந்து தமிழ் கற்பிக்க நிறுவப்பட்ட கல்லூரி எனக் கண்டறிந்தனர். உடனே சமசுகிருதப் பற்றாளர்கள் உள்ளதும் போய்விடும் என்ற அச்சத் தில் தமிழ், சமசுகிருதம் என இரண்டுமே கற்பிக்கப்படட்டும் என மன்றாடினர். இரக்கமுற்றுத் தமிழ்த் தலைவர்கள் உடன்பட்டாலும் இதே பெயர் இருந்தால் என்றேனும் ஒருநாள் மீண்டும் தொல்லை தருவர் என உணர்ந்தனர்; எனவே, தமிழ், வடமொழி கற்பிக்கும் அரசர் கல்லூரி எனப் பெயர் மாற்றினர். இதனைப் பேராசிரியர் தம் வாழ்க்கை வரலாற்று நூலிலேயே குறிப்பிட்டுள்ளார். பெயரில் என்ன இருக்கின்றது என இளக்காரமாகக் கருதுவது தவறு என்பதற்கு இதுவும் ஒரு சான்று அல்லவா?

பெரும்புலவர் உலகநாதர்(பிள்ளை), கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் (பிள்ளை) முதலான அருந்தமிழ்ப்புலவர்கள் ஆசிரியர்களாக வாய்த்த காரணத்தால் பேராசிரியரின் தமிழ்ப் புலமை சுடர்விடலாயிற்று. கல்லூரி நூலகத்தில் இருந்த, அறிஞர் கால்டுவெல் அவர்களின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் முதலான மொழியியல் பற்றிய ஆங்கில நூல்கள் அனைத்தையும் கற்று மொழி ஆராய்ச்சி அறிவையும் அதனை ஆங்கிலத்தில் புலப்படுத்தும் திறனையும் வளர்த்துக் கொண்டார். கவிதைகளிலும் சொற்பொழிவுகளிலும் கருத்து செலுத்தி வந்தவர் தமிழ் இலக்கியம் தொடர்பான கட்டுரைகளை இலக்கிய இதழ்களில் எழுதினார். எனவே, தஞ்சாவூரில் மணம் வீசிய அவர் புகழ்ப்பூ தமிழகமெங்கும் மணம் வீசத் தொடங்கியது.

கல்லூரியின் முதல்வராக இருந்த வேதாந்த(ம் ஐயங்கா)ர் ஓய்விற்குப் பின்பு பி.சா.சுப்பிரமணிய(சாசுதிரி) முதல்வராக வந்தார்; ஆராய்ச்சி ஆர்வம் மிக்கவராக இருந்தாலும் சமசுகிருதப் பற்றால் தவறான கருத்துகளையும் வெளிப்படுத்துவார். ‘இலக்குவன்’ என்னும் பேராசிரியரின் தமிழ்ப் பெயரையே விரும்பாத முதல்வர் இவரைச் சமசுகிருத வெறுப்பாளராக எண்ணினார். தமிழின் தொன்மை, தூய்மை முதலான பற்றிய தவறான கருத்துகளை அவர் தெரிவிக்கும் பொழுதெல்லாம் சான்றுகளுடன் பேராசிரியர் மறுக்கத் தவறுவதில்லை. “இவ்வாறு எவர் தவறு செய்யினும் துணிவுடன் எடுத்துக் காட்டி எதிர்க்கும் திறன் அன்றே இலக்குவனாரிடம் இயல்பாக அமைந்திருந்தது. கல்லூரி மாணவராக

இருந்த காலத்தில் மட்டுமல்ல. அது பிற்காலத்திலும் ஏன்? வாழ்வின் இறுதிவரை இந்த நெஞ்சுரம் இருந்தே வந்தது..” இவ்வாறு, பேராசிரியர் இலக்குவனார் புலவர் கல்லூரியில் பயின்ற காலத்தில் ஒன்றாகப் பயின்ற முதுபுலவர் சி.இராமசாமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். (புலவர்மணி இரா.இளங்குமரன்: செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்: பக்கம் 27)

வகுப்புகளில் மாணவர்கள் ஐய வினா தொடுப்பது இயற்கையே. சிலர் கிண்டலாகக் கேள்வி கேட்பதும் தன்னலம் சார்ந்து ஆசிரியர்களை எதிர்த்துப் பேசுவதும் உண்டு. ஆனால், பேராசிரியரின் வினாக்கள் தமிழ் எதிர்ப்பைச் சாய்க்கும் கணைகளாகும். தமிழாசிரியர்களே தொல்காப்பியத்தைப் பற்றி முழுமையாக அறிந்திராத அக்காலத்தில் நன்கு அறிந்து முதல்வரின் தமிழ்ப்பகைக் கருத்துகளை வீழ்த்துவனவே அவை. உடன் பயிலும் மாணவர்கள் தவறாக உருவானால் பின்னர் அவர்களால் உருவாக்கப்படும் மாணவர்களும் திசைமாறித்தானே போவர். வகுப்பு நடைபெறும் முன்னரே பாடக் கருத்துகளை நன்கு படித்திருந்ததால்தான் அவரால் தெளிவாகப் பேச முடிந்தது. தமிழின் உயர்வையும் சிறப்பையும் மறைத்தும் இழித்தும் பழித்தும் வகுப்பு எடுக்கப்படும் பொழுது, வெறும் வினாக்கள் எழுப்பினால் மழுப்பலான விடைகளால் அமர்ந்து அமைதி காக்கும் நிலை வரலாம். எனவே, கேள்வியுடன் நில்லாமல், தக்க சான்றுகளுடன் மறுத்து விளக்கி உள்ளார். இதனால் முதல்வரின் மறைமுக எதிர்ப்புகளுக்கும் இன்னல்களுக்கும் ஆளானாலும் பேராசிரியர் மனங்கலங்காமல், துணிவுடன் தமிழ் காக்கும் அறிவுப் பணியில் ஈடுபட்டார். இவ்வாறு, ‘கெடல் எங்கே தமிழின் நலம், அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்’யும் போராளியாகப் படிக்கும் பொழுதே பேராசிரியர் திகழ்ந்துள்ளார்.

களத்தில் போராடுபவர்கள் கல்வித்தளத்தில் காலூன்றத் தவறி விடுகிறார்கள். கல்வியில் கரைகாண எண்ணுபவர்கள் கல்வி மக்களுக்காக என்பதை உணராமல் களத்தை மறந்து விடுகிறார்கள். பேராசிரியர் கல்வியிலும் கருத்து செலுத்தினார். களத்திலும் நின்று வென்றார். எனவேதான் பள்ளி வாழ்க்கையில் அவ்வப்பொழுது சொற்பொழிவாற்றியதை விரிவாக்கினார். தம் அன்பு நண்பர்கள் அ.கிருட்டின மூர்த்தி, அன்பு கணபதி, முருக இலக்குவன் ஆகிய மூவருடனும் இணைந்து தூயதமிழ்ப்பரப்புரை மேற்கொண்டார். இதனால் தமிழ்க்குரவர் என இந்நால்வரும் அழைக்கப் பெற்றனர். ஊர் ஊராகத் தெருத் தெருவாகச் சென்று மேற்கொண்ட பரப்புரை நற்பயனையே விளைவித்தது. படித்த முதியவர், படிக்கும் இளையர் என எல்லாத் தரப்பினரும் கேட்டு உணர்வு பெற்றனர். தன்னைப் பற்றி எண்ணாமல் நாட்டு மக்களைப்பற்றி எண்ணிச் செயல்படுபவன்தானே போராளி. அந்த வகையில் பேராசிரியரின் பரப்புரைப் பணியும் அவரின் போராட்ட வாழ்க்கையின் ஒரு பகுதிதான் எனலாம்.

படிப்பு, பரப்புரை ஆகியவற்றுடன் படைப்புப் பணியிலும் பேராசிரியர் ஈடுபட்டார். பண்டைநலம், புதுப்புலமை, பழம்பெருமை அனைத்தையும் நல்கிய படைப்புப் போராளியாகவும் பேராசிரியர் தம்மை வெளிப்படுத்தி உள்ளார். கல்விக்கூட அளவில் கவிதைகளும் இதழ்கள் வழிக் கட்டுரைகளும் படைத்த பேராசிரியர் வித்துவான் தொடக்கநிலை மாணவராக இருந்த பொழுதே சிறந்த நூலாசிரியராகவும் மொழிபெயர்ப்பு வல்லுநராகவும் திகழ்ந்துள்ளார்; 'எழிலரசி அல்லது காதலின் வெற்றி' என்னும் கதைப்பாடலை இயற்றினார். தனித்தமிழ்க் குறும்பாவியமாகவும் பெண்களுக்குச் சொத்துரிமை, கூட்டு உழைப்பு முதலானவற்றை வெளிப்படுத்தும் சீர்திருத்தக் காவியமாகவும் மொழிபெயர்ப்புப் படைப்பாகவும் இலக்கிய மேற்கோள்கள் நிறைந்த இலக்கியமாகவும் பாவியல் புதினமாகவும் சிறந்து அனைவரின் வரவேற்பையும் பெற்றது இந்நூல். எளிய இனிய தூய தமிழில் படைத்ததால் படிப்பவர்கள் உள்ளத்தில் இவை நன்கு பதிந்தன. பாவேந்தர் பாரதிதாசன் தனித்தமிழ்ப்படைப்பாளராக விளங்கும் முன்னரே பேராசிரியர் முன்னோடியாகத் திகழ்ந்ததைக் கவிஞர் சுரதா முதலானவர்களும் ஆய்வாளர்களும் பாராட்டி உள்ளனர்; இப்போதைய ஆய்வாளர்களும் பாராட்டி வருகின்றனர். தமிழ்க்கடல் மறைமலை அடிகளாரின் தனித்தமிழ் இயக்கத்தால் ஈர்க்கப்பட்டுத் தூய தமிழ் போற்றும் ஆசிரியர்களால் கற்பிக்கப்பெற்ற பேராசிரியர் தம் கொள்கை வழியில் தூய தமிழ் இலக்கியம் படைத்ததில் வியப்பில்லை.

இக்குறுங்காவியத்தில் இருந்து சில பாடலடிகளைப் பார்ப்பது உலக நலனில் ஈடுபாடு கொண்ட பேராசிரியரின் பொதுமைப் பண்பை விளக்குவதாக அமையும்.

"பிறந்தோர் இறப்பது பெரிது மறிவாய்
இறந்தோர் பொருட்டு ஏங்கிப் புலம்பி
உடலும் உளமும் ஒருங்கே வாடி
மாளும் வரையில் மகிழ்வு மற்று
இறந்தோர் பலரும் எய்திய தென்னோ?
இன்னும் சிலநாள் இருந்து மறைவோன்
இன்னே மறைந்தனன் இதுவும் வியப்போ
உலகிற் பிறந்த ஒவ்வொரு வருமே,
ஒவ்வொரு தொண்டு செவ்விதி னாற்றக்
கடப்பா டுடையர்; இடர்ப்பட நேரினும்
அண்மையி லிறப்போர், அவர்க்குள தொண்டை
இந்நில வுலகை இருந்ததில் உயர்த்த
இயற்றும் பெற்றியை இழந்தோ ராவர்
அன்னவர் பொருட்டு அழுது, மாய்வரும்

அன்னோர் போல ஆற்றா திழப்பர்
இறந்தோர் இழப்பதும் இயல்பே; இருந்தும்
இழப்பின் எள்ளற் குரித்தே; எவர்க்கும்
இன்பமும் துன்பமும் இதயமே யளிக்கும்
வருந்துவ தொழித்துத் திருந்திய வுளத்துடன்
இல்லிற் கேக எழுவாய் தோழீஈ"

*(எழிலரசி அல்லது காதலின் வெற்றி : அடிகள் 382-401)*

முன்னோர் வழியில் நிலையாமையை உரைக்கும் பேராசிரியர் தம் வழியில், உலகில் பிறந்த ஒவ்வொருவரும் தொண்டாற்றுவதே கடமை எனக் கொண்டு வாழ வலியுறுத்தியும் இக்கடமையை ஆற்றாமல், இறப்பைத் தாமே தேடிச் செல்வது தவறு என்றும் வாழ்வின் பயனையும் தற்கொலை எண்ணம் உடையோருக்குத் தன்னம்பிக்கையையும் சிறப்பாகத் தெரிவிக்கின்றார். செல்வத்துப் பயன் ஈதல் என்பதைச் செல்வர்களால்தானே பின்பற்ற இயலும். ஆனால், பிறப்பின் பயன் தொண்டாற்றுதல் என்பதை உலகில் பிறந்த யாவரும் எச்சூழலிலும் பின்பற்ற இயலும் அல்லவா? மாணவ நிலையிலேயே மிகச் சிறந்த சிந்தனையாளராக இருந்தார் என்பதைப் பார்க்கும் பொழுது கருவிலே திருவுடையராகப் பேராசிரியர் திகழ்ந்துள்ளார் என உணரலாம்.

இக்குறுங்காவியத்தில் ஆய்வாளர்கள் அனைவராலும் போற்றப்படுகின்ற வேறு சில பாடலடிகளையும் பார்ப்போம்.

காணார் கேளார் கால்முடப் பட்டோர்
பிணிநடுக் குற்றோர் புகலிடம் அற்றோர்
ஆடை யின்றி வாடையின் மெலிந்தோர்
உண்டி யின்றி ஒட்டிய வயிற்றினர்
குடிசை யின்றிக் குரங்கென வதிவோர்
வேலை யற்று வீணராய்த் திரிவோர்
முதலிய மக்களை இதமுடன் கூட்டி
"உலகை யியக்கும் ஒருபெரும் கடவுள்
பசியே என்பதைப் பகர்தலும் வேண்டா
அப்பசி வெல்லும் ஆற்றலும் அற்றோம்;
எம்முடைச் செல்வம் நும்முடைத்தாகச்
செய்து அன்புடன் சேர்ந்தே உழைப்போம்
உழைப்பின் பயனையும் ஒருங்கே துய்த்து
எஞ்சிய பகுதியை எய்ப்பில் வைப்பாய்க்
கொண்டு வாழக் கூடுவீ ராக"

*(எழிலரசி அல்லது காதலின் வெற்றி : அடிகள் 542-557)*

என்கிறார் பேராசிரியர். பொதுவுடைமைக் கருத்துகள் மிகுதியும் பரவாத அக் காலத்திலேயே, கூட்டுடைமை பற்றி யாரும் எண்ணியிராத

பொழுதே, பசியே கடவுள் எனக் கூறிப் பசியை வெல்ல சேர்ந்தே உழைத்து ஒருங்கே துய்த்து எஞ்சியதைச் சேமித்துக் கூடி வாழ அவர் கூறும் அறிவுரை, மிகச் சிறந்த சிந்தனை வளத்தை வெளிப்படுத்துகின்றது அல்லவா?

இவ்வரிகள் இலக்குவனாரின் தொலைநோக்கைக் காட்டுவதாக இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் சி.இலக்குவனார் குறித்து எழுதியுள்ள நூலில்(பக்கம் 50) பேராசிரியர் முனைவர் இ.மறைமலை பின்வருமாறு கூறுகிறார்:

> "வறியோர்க்கு உணவு, முதியோர்க்கு உணவு, கோயிலில் உணவு என்று பல்வேறு இலவச உணவுத் திட்டங்கள் இன்று நடைமுறைப்படுத்தப் படுகின்றன. இவை யனைத்தும் பெரும் நிதியையும் கரைக்கும் செலவினங்களாகவே அமைந்துள்ளன. ஆனால், இலக்குவனார் கனவு காணும் திட்டத்தின் மூலம் உணவைப் பெறுவோர் உடல் ஊனமுற்றோரே ஆயினும் தம்மால் இயன்ற அளவு உழைக்க வேண்டும். இங்ஙனம் உழைத்துப் பெற்ற விளைவினால் கிடைக்கும் வருவாய் மீண்டும் இத்திட்டத்திலேயே முதலீடு செய்யப்படும். இதன் விளைவாகச் செலவினம் ஒருவழிப் போக்குவரத்தாக அமையாமல், வருவாய் வழங்கித் தொடர்ந்து இத்திட்டம்நடைமுறைப்படுத்த வழிவகுக்கிறது. இன்றைய சூழலில் நடைமுறைப்படுத்தக்கூடிய திட்டங்களுக்கு வழிகாட்டும் வகையில் இலக்குவனாரின் தொலைநோக்கு அமைந்துள்ள தன்றோ?"

மொழிபெயர்ப்பு நூல் நேரடி உருவாக்கம் போல் அமையாமல் புத்தாக்கமாக அமைய வேண்டும் என்பர் அறிஞர் பெருமக்கள். ஆங்கிலக் கவிஞர் கீட்சு என்பாரின் 'இசபெல்லா' என்னும் குறுங்காப்பியத்தைத் தமிழில் புத்தாக்கமாகப் படைத்துத் தந்துள்ளார் பேராசிரியர். இதன் மூலம் அவரின் ஆங்கிலப் புலமையும் மொழிபெயர்ப்புத் திறமையும் நன்கு பளிச்சிடுகின்றன. தமிழகச் சூழலுக்கேற்ற வகையிலும் தாம் பின்பற்றும் பகுத்தறிவு இயக்கக் கோட்பாடுகளுக்குப் பொருந்தும் வகையிலும் பெண்கல்வி, பெண்ணுரிமை, பெண் விடுதலை ஆகிய கருத்துகளைச் சங்க இலக்கிய நடையில் கண்ணகி, மணிமேகலை முதலான பெருமைமிகு பெண்டிரை நினைவுகூர்ந்து மகிழும் வகையில் இலக்கிய மேற்கோள்களை இனிதே இயம்பி எழிலரசி மூலமாகப் போர்க்குணத்தைப் படிப்போருக்கு ஏற்றி விடுகிறார். மாணவப்பருவத்திலேயே பல புதுமைகள் நிறைந்த படைப்பை உருவாக்கித் தாம் படைப்புலகிலும் கால் பதித்த ஒரு போராளி என்பதை மெய்ப்பிக்கின்றார்.

படிக்கும் பொழுதே சிறந்த புலமையாளர் எனப்(பெரும்புலவர்களைப்

போட்டி மூலம் தேர்ந்தெடுத்துச் சிறப்பிக்கும்) புதுக்கோட்டை அரசரால் சிறப்பிக்கப் பெற்றார். ஒன்பான் இரவு (நவராத்திரி) விழாவில் ஒவ்வொரு நாளும் நடைபெற்ற - பெரும் புலவர்கள் பலரும் பங்கேற்ற - புலமைப் போட்டிகளில் வென்றார்; விழா நிறைவில் அரசர் நாளோலக்கத்தில் பண்டிதர் என்ற விருதும் பொற்கிழியும் அளித்துச் சிறப்பு செய்தார். பொதுவாகப் பிராமணர்களும் சமசுகிருதப் புலவர்களும் அகவையில் மூத்தோரும் பாராட்டு பெற்ற நிலையில் தமிழ் ஆயும் தமிழ் உணர்வாளரான இளந்தமிழருக்கு இவை கிடைத்ததில் அனைவருக்கும் மகிழ்ச்சி. கற்றவர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்புதானே. படிக்கும் பொழுதே புலமை மிக்கவராக இருந்த சிறப்பு மன்னர் வரை அறிந்து போற்றப்பட, அவரை அங்கு அனுப்பிய கல்லூரியினரும் மகிழ்ந்தனர்.

புறநிலைச் செயல்பாடுகளில் முதன்மை பெற்றதுபோல் புலவர் படிப்பிலும் முதன்மை பெற்றார் பேராசிரியர். ஆனால், தேர்ச்சி அறிவிப்பு அனைவருக்கும் அதிர்ச்சியைத் தந்தது. மாநில முதல்மாணவராக மதிப்பெண் பெற்றிருந்தும் இதே மதிப்பெண்ணைப் பெற்றிருந்த மற்றொருவர் அகவை மூப்பின் அடிப்படையில் அத்தகுதியைப் பெற்றார்; அவர் முன்னரே பண்டிதர் பட்டம் பெற்றவர் என்பதால் அவர்வெற்றி பெற்றதில் வியப்பில்லை. ஆனால், பேராசிரியருக்குக் கிடைக்க வேண்டிய சிறப்பு அகவைக்கு முதலிடம் என்னும் கொள்கை அடிப்படையில் கிடைக்காமல் போனது பிற மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஆறாப் புண்ணாய் வாட்டியது. பேராசிரியருக்கும் பெரிதும் ஏமாற்றமாக இருந்தாலும் மீண்டும் இயல்பாகிப் பணி நாடலுக்கும் களப்பணிக்கும் ஆயத்தமாகி விட்டார்.

புலவர் தேர்ச்சியைத் தொடர்ந்து, ஆசிரியப்பணித் தகுதிக்காக அண்ணாமலைப் பல்கலைக்கழகம் சென்று ஆசிரியப்பயிற்சி பெற்றார். பின்னர்ப் பணியில் இருந்தே படித்தும் ஆய்வேடுகள் அளித்தும் முதுகலை, கீழ்த்திசை இலக்கிய முதுகலை இயல் (எம்.ஓ.எல்/ M.O.L.), மெய்யியல் அறிஞர் (முனைவர்-பி.எச்.டி/Ph.d.) முதலான பட்டங்களைப் பெற்றார். கீழ்த்திசை இலக்கியத்தில் முதுகலை பெற்ற சிலருள் பேராசிரியரும் ஒருவர்.

வசதி நிறைந்தவர்களுக்குக் கல்வி பொழுது போக்குபோல் அமைந்து விடுகிறது. அல்லது எச் சிக்கல் குறித்தும் கவலையின்றிப் படிப்பில் மட்டும் கவனம் செலுத்த முடிகின்றது. ஆனால், வசதி குறைந்தவர்களுக்குப் படிப்பது என்பதே ஒரு போராட்டம்தான். அப் போராட்ட வாழ்க்கையிலும் தமிழ் காக்கும் போர்க்களப் பணியில் கருத்து செலுத்தியவர் பேராசிரியர். தூய தமிழ் பற்றிய பரப்புரை என்பது நமக்கு இன்றைக்கு மிகவும் எளிதாகத் தோன்றும். ஆனால், மாணவ நிலையில் இருந்தே போராட்டங்கள் இடையேதான், தமிழின் தூய்மையைக் காக்கவும்

தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், திருக்குறள் சிறப்பைப் பற்றியும் கட்டுரைகள் எழுதியுடன் நில்லாது பரப்புரையும் மேற்கொள்ளவும் தம் வாணாளைச் செலவிட்டுள்ளார். பேராசிரியரின் எதிர்காலப் போராட்ட வாழ்வின் அடிக்கல் பள்ளி வாழ்க்கையிலேயே நாட்டப்பட்டு விட்டது. பேராசிரியருக்கு அமைந்த ஒத்துழைப்பும் ஊக்கமும் நல்கிய அருமையான ஆசிரியர்கள், நீதிக்கட்சி ஆட்சியால் தன்மதிப்பினை வளர்க்கும் தஞ்சாவூர் மண் முதலானவை பேராசிரியரின் எண்ணங்களுக்கு அரண் செய்தன. எனவே வறுமைப் போரிலும் சாதிப்போரிலும் எதிர்நீச்சல் போட அவரால் முடிந்தது; எத்தனையோ இடையூறுகள் வந்தபோதும் இடைவெளி விட்டேனும் கல்வியைத் தொடர அவரால் இயன்றது; வேறுதுறைக்கோ பிற பணிக்கோ செல்லும் வாய்ப்பு இருப்பினும் தமிழின்பால் அவர் கொண்ட காதல் தமிழையே படிக்கச் செய்தது; தமிழ்ச்சிறப்புகளைப் பிற மொழியினர் அறியச் செய்ய வேண்டும் என்னும் பேராவல் பிற மொழிகளையும் நன்கு கற்கச் செய்தது; மொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டு மேலும் மேலும் தமிழின் மேன்மைகளை வெளிவரச் செய்யும் புலமையைத் தந்தது; எழுத்துப்பணி, சொற்பொழிவுப் பணி என்பனவற்றில் அமைதி கொள்ளாது மக்களிடையே மக்களாக இருந்து போராடி மக்களுக்கு வழிகாட்டி மக்களையும் போராட்டத்தில் ஈடுபடுத்தச் செய்தது. தமிழுக்காகத் தன்னை ஈந்த போராளியாகவே பேராசிரியர் பிறரால் மதிக்கப் பெறும் நிலை வந்தது.

★

## 3. தமிழ்நலப் போராளி

புலவர் பட்டம் பெற்ற பின்னர்த் திருவாரூர், குடவாசல், நன்னிலம் ஆகிய ஊர்களில் உள்ள அரசு (நகராண்மைக் கழக) உயர்நிலைப்பள்ளிகளில் தமிழாசிரியராகவும் அடுத்துத் திருவையாற்றில் தாம் படித்த அரசர் கல்லூரியில் விரிவுரையாளராகவும் சிறப்பாகப் பணியாற்றினார். படிக்கும் பொழுதே பரப்புரைப் பணியில் ஈடுபட்ட பேராசிரியர் இவ்விடங்களிலும் அப்பணியைத் தொடர்ந்தார். கல்லூரிகளில் உள்ளவர்களே தொல்காப்பியரை அறியாக்காலத்தில் தாம் பணியாற்றிய பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தொல்காப்பியருக்கு விழா எடுத்துச் சிறப்பித்தார். தொல்காப்பியருக்கு மட்டும் அல்லாமல், திருவள்ளுவர், இளங்கோ அடிகள், ஔவையார், எனப் புலவர்கள் புகழ் போற்றும் விழாக்கள் நடத்துவதைத் தம் கடமையாகக் கொண்டு ஒழுகினார்.

பேராசிரியர் தாம் பணியாற்றிய கல்வி நிலையங்களில் புலவர் விழாக்களுடன் ஆண்டுதோறும் தமிழ் மறுமலர்ச்சி விழா என இயல், இசை, கூத்து என வகுத்து மூன்று நாட்கள் நடத்தினார். இது குறித்துப் பேராசிரியர்,

> *“தமிழ் மறுமலர்ச்சிக்குக் காரணமான புலவர்களைப் பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படும். இருபதாம் நூற்றாண்டுப் புலவர்கள் பற்றி இவ்விழாவில் உரைகள் நிகழும். இவ் விழாக்கள் மாணவர்களிடையேயும் மற்றவர்களிடையேயும் தமிழ் மறுமலர்ச்சி யை உருவாக்கப் பயன்பட்டன. தமிழ்ப் பற்றுடையோர் உள்ளங்கள் தழைத்தன”*

எனக் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு விழாக்கள் மூலம், தமிழ் இலக்கியச் சிறப்பையும் தமிழ் எழுச்சி உணர்வையும் ஊட்டினார். விழாக்களுக்குப் பெற்றோர்களையும் வரவழைத்துப் பெற்றோர் ஆசிரியர் சந்திப்புகளுக்கும் ஏற்பாடு செய்தார். அக்காலத்திலேயே பெற்றோர் ஆசிரியர் மாணவர் சந்திப்புகளை மிகுதியாக நிகழ்த்திய முன்னோடிக் கல்வியாளராகவும் திகழ்ந்தார்.

“மக்களை வருத்தும் மூடநம்பிக்கைகளை ஒழிப்பதும் தமிழை மாய்க்கும் வேற்றுமொழிச் சொற்களின் நுழைவைத் தடுத்தலும் தமிழ் மறுமலர்ச்சியைத் தழைக்கச் செய்தலும் தமிழ் ஆசிரியர்களின் தவிர்க்கலாகாக் கடன்” (என் வாழ்க்கைப் போர்: கையெழுத்துப்படி) என முழங்கும் பேராசிரியர் தாம் அவ்வாறே முன் எடுத்துக்காட்டாகப் பணியாற்றி வந்தார். ஆதலின் தந்தை பெரியாரால் அனுப்பப்பட்ட தன்மதிப்பியக்கத் தொண்டராகப் பலர் கருதினர். இதனாலேயே

சீர்திருத்தக் கருத்துகளையும் தனித்தமிழையும் விரும்பா மறு சாராருக்கு இவர் வேண்டாதவரானார். இது குறித்துப் பொருட்படுத்தாத பேராசிரியர், இலக்கியப் பரப்புரையுடன் "தமிழ்ச் சொற்களிருக்க வேற்றுச் சொற்களை விரும்புவதேன்?" எனக் கேட்டுத் "தமிழிலே உரையாடுக! தமிழிலே எழுதுக! தமிழிலே பெயர்களிடுக! தமிழ் தமிழ் என்று முழங்குக!" என மக்களிடையே வலியுறுத்தித் தமிழராய் வாழ உணர்த்தினார்.

"தீங்கனியைச் செந்தமிழைத் தென்னாட்டின்
பொன்னேட்டை உயிராய்க் கொள்வீர்.
ஏங்கவைக்கும் வடமொழியை, இந்தியினை
எதிர்த்திடுவீர் அஞ்ச வேண்டா.
... ... ...
கடல்போலும் எழுக!கடல் முழக்கம்போல்
கழறிடுக தமிழ்வாழ் கென்று!
கெடல்எங்கே தமிழின்நலம் அங்கெல்லாம்
தலையிட்டுக் கிளர்ச்சி செய்க!"

*(பாவேந்தர் பாரதிதாசன்: தமிழியக்கம்)*

என அறிவுறுத்தி வந்தார்; தாமும் தமிழ் காக்கும் கேடயமாகத் திகழ்ந்தார்.

நன்னிலத்தில் பணியாற்றும்போது, 'தமிழ் கற்பிக்கும் முறை' என இக்காலத்திற்கேற்றவாறு மரபார்ந்த தமிழைக் கற்கும் முறை குறித்துப் பேராசிரியர் நூல் எழுதினார். இது குறித்து அவரது கருத்து வருமாறு:

"மாணவர்கள் சிறந்தோராக உருவாதல் ஆசிரியர்களையே சார்ந்துள்ளது. நல்ல தமிழ்ப்பற்றாளராக மாணவர்கள் வெளிவருதல் தமிழாசிரியர்களையே சார்ந்துள்ளது. தமிழாசிரியர்களில் பலர் மாணவர்கள் உள்ளங்களில் தமிழ்ப்பற்றை விதைக்க வேண்டும் என்ற கருத்தில்லாதவராகவே காலம் கழித்தனர். மாணவர்க்கும் தமிழார்வம் உண்டாகும் வகையில் தமிழைக் கற்பிக்கும் வழிமுறையை மேற்கொள்ளாது இருந்தனர். அப்பொழுது தோன்றிய இந்தியெதிர்ப்பு இயக்கத்தால் மாணவர்களிடையே தமிழ்ப்பற்று கனல்போல் பரவத் தொடங்கியது. மாணவர்கள் தமிழாசிரியர்களை மதிக்கத் தலைப்பட்டனர்.

தமிழ் மறுமலர்ச்சி கொள்ளத் தொடங்கியது. சூழ்நிலைக்கு ஏற்பத் தமிழாசிரியரும் நடந்து கொள்ள வேண்டும் என்று கருதி தமிழாசிரியரின் பொறுப்பினை வலியுறுத்திக் கூறும் நோக்குடன் 'தமிழ் கற்பிக்கும் முறை' என்ற நூலொன்றினை எழுதி வெளியிட்டேன். கற்பிக்கும் முறை பற்றிய ஆங்கில நூல்களைப் படித்து ஆங்கில நாட்டில் ஆங்கில மொழியின் நிலையை அறிந்து, தமிழ்நாட்டில் தமிழ் எவ்வாறு கற்பிக்கப்பட வேண்டும் என்று எழுதினேன். இந்நூலுக்கு அணிந்துரை தருமாறு

தலைமையாசிரியர் சாமிநாத(ப்பிள்ளையைக்) கேட்டபோது, இதனைப் படித்து விட்டுத் தமிழாசிரியர்களில் பலர் உங்கள்மீது கல் வீசுவார்கள் என்று கூறி, அதன் புரட்சித்தன்மையை வெளியிட்டார். இந்நூலுக்கு 'இந்து'வில் நல்ல மதிப்புரை வெளிவந்திருந்தது. அதன் பின்னர் நாட்டில் அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. பல கல்வி நிலையங்கள் அஞ்சல் வழியாகப் பெற்றன."

இந்நூலைத் தொடர்ந்து தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள், மொழியியல் குறித்த தமிழ், ஆங்கில ஆராய்ச்சி நூல்களைப் பேராசிரியர் எழுதி உள்ளார். ஒவ்வொரு நூலிலும் பேராசிரியரைப் புரட்சிப் போராளியாக அடையாளப்படுத்தும் கருத்துகளைக் காணலாம்.

அழுக்கு படிந்த ஒன்றினைத் துடைத்துத் தூய்மையாக்கினால் புதிய ஒன்றாகப் பொலிவுடன் காட்சி அளிக்கும். இதுதான் அதன் உண்மைத் தோற்றம் எனினும் அழுக்கையே பார்த்துப் பழகியவர்களுக்கு இது புதிய ஒன்றாகத் தோன்றும். அதுபோல்தான் தமிழ் இலக்கியம் மீது படிந்த ஆரியக் கறையைப் போக்கி அதன் தூய்மையைப் பேராசிரியர் வெளிப்படுத்திய பொழுதெல்லாம் எதிர்ப்பையே சந்திக்க வேண்டி வந்தது. இதனால் பேராசிரியர் ஆய்வு முறையிலும் ஒரு போராளியே என முதுமுனைவர் இரா.இளங்குமரனார் படம்பிடித்துக் காட்டுகிறார். பேராசிரியரின் தொல்காப்பிய ஆங்கில மொழிபெயர்ப்பு-ஆய்வுரைகள் பற்றிய கருத்தாகப் பின்வருமாறு அவர் தெரிவிக்கிறார்(செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்: பக்கம் 4):

"தொல்காப்பியம், வடமொழிச் சார்புடையது என்னும் நோக்கிலேயே வடமொழி ஆர்வலர்களால் உலகுக்கு அறிமுகப் படுத்தப்பட்டிருந்தது. முற்றிலும் அது தமிழ் நெறியே எனக் கண்ட இலக்குவர், தம் கண்டுரையை எழுதினால் அதனை உடனே ஏற்றுவிடுவரோ? அதனால் தடைகள் சில கிளத்தித் திருப்பினர். அத்தடைகளை எல்லாம் தம் நுண்மாண் நுழைபுல ஆய்வுக் கோடரியால் உடைத்துத் தொல்காப்பிய நெறி தமிழ் நெறியே என மெய்ப்பித்து அரிமாவெனத் திகழ்ந்தார் இலக்குவனார். அதனால், அவர் ஆய்வியல் பட்டப் பேறு வகையாலும் தமிழ் மொழிப் போராளி என்னும் நிலையையே நாட்டினார்."

என்பதே புலவர்மணியாரின் கணிப்பு.

தனித்தமிழ் என்றால் இப்பொழுதும்கூடப் பிராமண எதிர்ப்பாகக் கருதுவோர் பெரும்பான்மையர் உள்ளனர். அக்காலத்தில் அத்தகைய போக்கு மிகுதியாகவே இருந்துள்ளது. இதனால் பிராமண வகுப்பினர் தமிழ் அன்பர்களைப் பகைவர்களாகக் கருதி நடந்து கொள்ளும் போக்கும் இருந்துள்ளது. அக்காலப் போக்கு குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்:

“ஓய்வு நேரங்களிலும் விடுமுறை நாட்களிலும் எல்லோரும் ஒன்று சேர்ந்து உரையாடுவதும் பார்ப்பனரல்லாதார் நலம் குறித்துத் தருக்கம் செய்வதும் சேர்ந்தே மாலை நேரங்களில் உலாவச் செல்வதும் வழக்கம். அப்பொழுது மாவட்டக் கழகத் தலைவராயிருந்தவர் பேராயக்கட்சியைச் சேர்ந்தவர். ஆகவே, நாங்களெல்லாரும் அரசுக்கெதிராக நடந்து கொண்டிருப்பதாக மொட்டைக் கடிதங்கள் மாவட்டக்கழகத்தலைவர்க்கு எழுதப்படும். இந்திமொழி கட்டாயப்பாடமாக்கப்பட்டுவிட்டது. அதனை எதிர்த்துக் கிளர்ச்சி நடந்து கொண்டிருந்தது. தமிழாசிரியர்கள் இந்தியை எதிர்த்தனர். இந்தி முதன்மை பெற்றால் தமிழ் அழியும் என்பதை எல்லாத் தமிழாசிரியர்களும் அறிந்திருந்தனர். ஏனை யாசிரியர்களில் பார்ப்பனரல்லாதாரில் ஒருவர் இருவரைத் தவிர எல்லோரும் இந்திக் கட்டாயத்தை எதிர்த்தனர். இந்திக் கட்டாயத்தை எதிர்ப்போரை ஆட்சி எதிர்ப்பாளராகவே கருதினர். பார்ப்பனர்கள் இந்தியை வரவேற்றனர்; ஆர்வமுடன் அதனைப் படித்தனர். பார்ப்பன மாணவர்கள் இந்தியைப் படித்து அதிகத் தேர்ச்சி பெறுவதை இன்பப் பொழுது போக்காகக் கொண்டனர்.

பார்ப்பனர்கள் வேலைவாய்ப்புக்காகவும் உரிமைகளைப் பெறுவதற்காகவும் தம்மைத் தமிழர்கள் என்று கருதிக் கொள்வர். ஆனால், தமிழைத் தமது மொழியாகவோ, திருக்குறளைத் தமது மறையாகவோ தமிழ்நாட்டைத் தமது நாடாகவோ ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். தமிழர்களுடன் இரண்டறக் கலந்து வாழமாட்டார்கள். வெளிநாடுகளில் உள் நாட்டவர் உயர்ந்தவர்; வெளிநாட்டவர் தாழ்ந்தவர். ஆனால், தமிழ்நாட்டிலோ, தமிழ்நாட்டுக்கு உரியவர், தொன்றுதொட்டு இங்கே வசித்து வருபவர் தாழ்ந்தவர்; எங்கிருந்தோ வந்து குடியேறியவர் உயர்ந்தவர். இந்நிலை என்று மாறுமோ?

பார்ப்பனர்கள் தம்மை உயர்ந்தோராக ஆக்கி ஏனையோரைத் தாழ்ந்தவராகச் செய்து சாதிமுறையை வலுப்படுத்தி விட்டனர். இக்கொடுமையை எதிர்த்தே பெரியார் அவர்கள் போராடத் தொடங்கி ஓரளவு வெற்றியும் பெற்றனர். ஆட்சித்துறையில் பார்ப்பனரல்லாதார் உயர்வுக்காக நீ திக்கட்சி பாடுபட்டுவந்தது. ஆதலின் பார்ப்பனர் அல்லாத படித்தவர்களில் பெரும்பான்மையினர் தன்மதிப்பு இயக்கம், நீ திக்கட்சி ஆகியவற்றின்பால் பற்றுடையராகவே இருந்தனர். படித்த பார்ப்பனரல்லாதார்க்கும் பார்ப்பனர்க்கும் இடையே உட்பகை வளர்ந்து வந்தது. பார்ப்பனர்கள் பேராயக்கட்சி யைப்போற்றினர். கல்வி நிலையங்களிலும் அலுவலகங்களிலும்

இருசாராரிடையேயும் பிரிவு மன்பான்மை வளர்ந்தே வந்தது.

தூயதமிழில் உரையாடுவதும் பெயர் வைத்திருப்பதும் மொழிவெறியாகக் கருதப்பட்டது. என்னை மொழி வெறியனாகவே கருதினர். ஆயினும் மாணவரிடையேயும் மற்றவர்களிடையேயும் தூய தமிழ்ப்பற்றை உண்டாக்குவதில் யான் தவறிலேன். வடமொழிச் சொற்களை மிகுதியாகக் கலந்து பேசுகின்ற பிராம ணர்க்குத் தூயதமிழ்க்கொள்கை பிராமணர் வெறுப்பாகவே தோன்றியது.”

இதன் மூலம் பேராசிரியர் இந்திமுதன்மை எதிர்ப்பு உணர்வைத் தாம் பணியாற்றத் தொடங்கிய பொழுது இருந்தே மாணவர்களிடமும் மக்களிடமும் விதைத்து வந்துள்ளார் என்பதை உணரலாம். பேராசிரியரின் அரும்பணிகளால் தமிழ்ப்பற்றும் தன்மான உணர்வும் மாணாக்கர்களிடையேயும் பொது மக்களிடையேயும் கால்கொண்டன. சிலர் படிக்கும் பொழுது ஒரு நிலையிலும் பணியில் சேர்ந்த பின் வேறு நிலையிலும் இருப்பர். தமிழ் நலனையே எப்போதும் நாடும் பேராசிரியர் நிலை மாறாமல் தொண்டினைத் தொடர்ந்தார். பேராசிரியரின் தனித்தமிழ் உணர்வூட்டமும் பகுத்தறிவு வித்தும் இந்தி எதிர்ப்பும் தந்தை பெரியாரிடம் கொண்டிருந்த தொடர்பும் தமிழ்ப்பகைவர்களால் தாங்கிக் கொள்ள இயலவில்லை. பேராசிரியர் வகுப்பிலும் வெளியிலும் ஆற்றும் தமிழ்க் காப்பு உரைகளாலும் தமிழ் விழாக்களாலும் தமிழ் வகுப்புகளாலும் தமிழ் வெறுப்பாளர்கள் பேராசிரியரைப் பகைவராகக் கருதி எதிர்த்தனர். அவர்கள் பல்வேறு வகைகளில் பேராசிரியருக்கு ஊறு விளைவித்தனர். பேராயக் கட்சியினரில் பெரும்பான்மையர் இன்றுபோல் அன்றும் தமிழ் என்று சொல்வதையே விரும்பாதவராக இருந்தனர். எனவே, பேராசிரியருக்கு எதிராக மொட்டை மடல்கள் அனுப்புவது, சுவரொட்டிகள் ஒட்டுவது, துண்டறிக்கைகள் அடிப்பது, பொதுக் கூட்டங்களில் தாக்கிப் பேசுவது, இதழ்களில் எதிர்த்து எழுதுவது அரசிற்கு எதிரான கருஞ்சட்டைப்படையினர் எனக் குற்றம் சுமத்துவது முதலான பல்வேறு தொல்லைகளுக்கு ஆளாக்கினர். தமிழுக்குக்கேடு செய்யும் பெரு மலையும் தூள் தூளாகும் என்னும் நம்பிக்கையால் அவற்றைத் துணிவுடன் எதிர்கொண்டார்.

அரசர் கல்லூரியில் 1933-34 ஆம் ஆண்டு வித்துவான் இறுதி வகுப்பு பயின்றவரான முனைவர் கு.தாமோதரன் பேராசிரியர் பாடம் நடத்தும் முறை குறித்தும் கொள்கை உறுதி குறித்தும் பின்வருமாறு கூறுகிறார் (வீ.முத்துச்சாமி: இலக்குவனார் ஆய்வுப்பண்பு):

“மிக்க முயற்சி எடுத்துக் கொண்டு மாணவர் புலமைக்கும் ஊக்கத்திற்கும் ஆக்கம் தரும் வகையில் பாடம் பயிற்றிய நல்லாசிரியர். எத்தனை ஐயக் கேள்விகட்கும் விடை தருவார்.

மாணவர் நலங்கருதும் மாண்பினர்; ஆசிரியர் என்ற முறையில் பொறுமை மிக்கவர்; வகுப்பறையில் மட்டுமின்றி மற்றபடியும் நல்ல மாணவர்க்கு உதவும் பண்பு அவர்பால் மிகுதியும் இருந்தது.

மாறுபட்ட அரசியல் கருத்தினராகவும் சமுதாயக் கொள்கை யினராகவும் இருப்பினும் நன்மாணாக்கரை மதித்து நடத்திய பான்மை பாராட்டத்தக்கது. தம் கொள்கையில் மிக்க உறுதியுடை யவர். தனித்தமிழ்ப் பற்று மிக்கவர் - வருணாசிரமத் தருமம் போன்றவற்றை வெறுப்பவர்."

இத்தகைய தமிழ்நல நற்கொள்கைகளில் மாறாமல் வாணாள் முழுவதும் பேராசிரியர் உறுதிப்பாட்டுடன் வாழ்ந்தார்.

பேராசிரியர் திருவையாற்று அரசர் கல்லூரியைத் தொடர்ந்து இராமநாதர் கல்விக்கூடம், குலசேகரப் பட்டினம்*(16.04.44-30.10.19)*, ம.தி.தா.இந்துக்கல்லூரி, திருநெல்வேலி *(01.11.44-08.08.47)*, வி.இ.நா. செந்திற்குமார கல்லூரி, விருதுநகர்*(10.08.47-மே1952)*, முக்குலத்தோர் உயர்நிலைப் பள்ளி, திருவெறும்பூர்*(30.11.52-30.09.53)*, சிக்கயநாயக்கர் கல்லூரி, ஈரோடு *(01.07.1954-07.06.1956)*, தெ.தி.இந்துக்கல்லூரி, நாகர்கோயில் *(11.06.56-30.04.59)*, தியாகராசர் கல்லூரி, மதுரை *(05.07.59-01.06.1965)*, மாநிலக்கல்லூரி, சென்னை *(19.06.67-18.04.68)*, உசுமானியப் பல்கலைக்கழகம், ஐதராபாத்து (சூன் 1968-மே 1970), தெ.தி.இந்துக்கல்லூரி, நாகர்கோயில் *(01.06.70-25.12.1970)* எனப் பல இடங்களில் பணியாற்றினார்.

பேராசிரியர், தாம் பணியாற்றிய இடங்களில் எல்லாம் தமிழ் அமைப்புகள் ஏற்படுத்தி அவற்றின் மூலம் மக்களுக்கும் மாணவர்களுக்கும் தமிழ் வகுப்புகள் நடத்தினார்; இவை தவிர, தமிழ் இலக்கியச் சிறப்புகளை உணரவும் அறியவும் காக்கவும் தமிழ்த்தேசியரே நாம் என்பதை வலியுறுத்தவும் இந்தித் திணிப்பை எதிர்க்கவும் எல்லாத் துறைகளிலும் தமிழே தலைமை நிலையில் இருக்கவும் சொற்பொழிவுத் திட்டத்தை வாழ்நாளெல்லாம் மேற்கொண்டார். வார விடுமுறை நாட்களில் வெளியூர்களிலும் வாரநாட்களில் புறநகர்களிலும் தம் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். இது குறித்துத் திருவாட்டி து.சுசீலா அவர்கள், தம் நிறைகலைஞர் ஆய்வேட்டில் (எம்.ஃபில்) பின்வருமாறு குறித்துள்ளார்:

"அக்காலத்தில் சங்க இலக்கியங்களைப் புலவர்களிற் பெரும் பான்மையானவர்கள் முழுமையாக அறியாதிருந்தனர் எனில் பொதுமக்கள் நிலைபற்றிக் கூற வேண்டியதில்லை. இந்நிலையில் சங்க இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தித் தமிழர் தலைநிமிர்ந்து தன்னுரிமை பெற்றுத் தன்னாண்மையுடன் வாழ்ந்த அப்பொற்காலத்தை எடுத்துரைத்துத் தமிழ் மறுமலர்ச்சிக்கு வழி

கோலினார். அந்நாட்களில் வேறு எந்தப் பேராசிரியரும் இத்தகைய தொண்டினை ஆற்றவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சங்க இலக்கியச் சொற்பொழிவுகளைப் பட்டிதொட்டி எங்கும் சென்று நிகழ்த்தித் தமிழின் தொன்மையையும் சங்க இலக்கியச் சால்பினையும் தமிழர் பண்பாட்டுச் சிறப்பையும் தமிழ்கூறு நல்லுலகம் எங்கும் பரப்பிய தனிப் பெருமை தமிழ்ப் பேராசிரியர்களுள் இலக்குவனார் ஒருவருக்கே உரியது. எடுத்துக்காட்டாக *1.1.1949* ஆம் நாளிட்ட குடியரசு இதழைக் காண்போம். பதினைந்தாம் பக்கத்தில் பின்வரும் செய்தி வெளியிடப் பட்டுள்ளது.

## சங்க இலக்கியப் பேச்சுகள்

தோழர் சி.இலக்குவனாரின் தனி முயற்சியால் கீழ்க்காணும் இடங்களில் கீழ்க்காணும் நாட்களில் நடைபெற்றன.

| | |
|---|---|
| *26.12.48* | திருநெல்வேலி |
| *27.12.48* | வீரவநல்லூர் |
| *28.12.48* | கல்லிடைக்குறிச்சி |
| *29.12.48* | கீழ்ப்பாவூர் |
| *30.12.48* | தென்காசி |
| *31.12.48* | விக்கிரசிங்கபுரம் |

இனி நடக்க இருப்பவை

| | |
|---|---|
| *1.1.49* | சிவகிரி |
| *2.1.49* | மம்சாபுரம் |
| *3.1.49* | சிவகாசி |
| *4.1.49* | விருதுநகர் |
| *5.1.49* | ஆலங்குளம்(சாத்தூர்) |
| *7.1.49* | புதுவயல் |
| *8.1.49* | இராங்கியம் |
| *10.1.49* | பெரியகுளம் |

போக்குவரத்து வசதி குறைந்திருந்த அந்நாட்களில் படிப்பறிவுற் றோர் குறைந்திருந்த சமுதாயச் சூழலில் கல்லூரிப் பணியாற்றியதே போதும் என நிறைவடைந்துவிடாமல் ஊர் ஊராகச் சென்று சங்க இலக்கியச் சொற்பொழிவு ஆற்றிய இலக்குவனாரின் தமிழ்த்தொண்டு தன்னிகரற்றது. சொற்பொழிவாற்றினார் எனக் கூறுவதைக் காட்டிலும் தமிழ்மொழி, தமிழின மறுமலர்ச்சிக்கு அடித்தளம் அமைத்தார் என்றே கூறவேண்டும்." (பேராசிரியர்

டாக்டர் சி.இலக்குவனார் மொழிப்போர் தந்தை - ஓர் ஆய்வு : பக்கம்23-24)

ஆய்வாளர் குறிப்பிட்டுள்ளது போன்று பேராசிரியர் அமைத்துத் தந்த தமிழின மறுமலர்ச்சிக்கான அடித்தளமே தமிழ்க்காப்புப் போர்க்களத்தை வடிவமைத்தது. அஃதாவது, பேராசிரியரின் பேருரைப்பணிகூட போராளியின் போருரையாக அமைந்தமையால் ஏற்பட்டனவே, 1965 ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போரின் வெற்றியும் 1967 இல் நடைபெற்ற ஆட்சி மாற்றமும்.

பேராசிரியரின் பொழிவுகள், கட்டுரைகள், நூல்கள், இதழ்கள் முதலான யாவுமே தமிழ்நலம் சார்ந்தவையே. மறைக்கப்பட்ட தமிழின் சிறப்பைப் புலப்படுத்துவனவே. ஆரியப் பற்றாளர்களும் அதனை அறியாமல் ஏற்றவர்களும் ஏற்படுத்திய மாசினை அகற்றிய போராட்ட உணர்வினவே. தமிழ்த்தாய் ஆரியக் கடனால் பிழைத்து வருவதாகத் தவறாக உரைப்போர்க்கு நுண்மாண்நுழைபுலத்துடன் ஆராய்ந்து அறிந்து தமிழின் தொன்மையையும் தூய்மையையும் தமிழ் வரிவடிவத்தால் வரிவடிவம் பெற்றுத் தமிழின் சொல்வளத்தால் சொற்பெருக்கம் பெற்ற ஆரியத்தின் தமிழ்ச்சார்பு நிலையையும் தெளிவாக எடுத்துரைத்தார். திருக்குறளில் உள்ள சொற்கள் யாவுமே தனித்தமிழ்ச் சொற்கள் என நிறுவினார்; சங்க இலக்கியங்கள் தமிழ்ப்பண்பாட்டை, தமிழர் வரலாற்றை உணர்த்தும் தனித்தமிழ்ப் படைப்புகள் என்பதை மெய்ப்பித்தார்; தொல்காப்பியம் முதல் நூலே எனவும் கி.மு.7ஆம் நூற்றாண்டைச் சிற்றெல்லையாகவும் கி.மு.10ஆம் நூற்றாண்டைப் பேரளவாகவும் கொண்டது என்றும் உணர்த்தினார்; மலைபடுகடாஅம் தொல்காப்பியத்திற்கும் முற்பட்ட தனித்தமிழ் இலக்கியம் என்பதை வெளிப்படுத்தினார்; ஆரியத்தால் தமிழுக்கு நேர்ந்து வரும் தீமைகளைப் புலப்படுத்தினார்; தமிழ் வாழத் தமிழர் சிறந்து வாழ வேண்டும் என்றும் தமிழர் வாழத் தமிழ் நிலைத்து வாழ வேண்டும் என்றும் வேண்டினார்; இவற்றை எல்லாம் மக்க ளிடையே பரப்புவதற்காகத் தன்னலம் கருதாப் போராளியாக வாழ்ந்தார்.

தமிழ்நாட்டில் முதன் முதலில் அஞ்சல்வழிக் கல்வியை அறிமுகப்படுத்தியவர் பேராசிரியரே.(முனைவர் மறைமலை: பக்கம் 83 : இந்திய இலக்கியச்சிற்பிகள்: சி.இலக்குவனார்) தமிழ் இலக்கியத்திற்கான தனிப்பயிற்சிக் கல்லூரியை நிறுவிய முதலாமவரும் பேராசிரியரே ஆவார். பணியாற்றும் இடங்களில் எல்லாம் தமிழ்க்கல்விக்கான மாலைநேரப் பயிற்சியை அளித்த பெருந்தகையும் அவர்தாம். 'தாம் பெற்ற கல்வி பெறுக இவ்வையம்' என மக்களின் கல்வி நலனுக்காக வாழ் நாளெல்லாம் உழைத்த போராளி அவர்.

கற்பித்தல் என்பது தாம் அறிந்தவற்றை மாணவர்க்கு மட்டுமல்லாமல் அனைவர்க்கும் உணர்த்துதல் என்பதே பேராசிரியரின் அழுத்தமான

கருத்து. இவ் வடிப்படைக் கொள்கையும் இக்கொள்கை வழி நின்று நிலைத்ததுமே பேராசிரியரின் வாழ்வைப்போர்க்களமாக்கியது. கற்பித்தல் குறித்த பேராசிரியரின் பின்வரும் விளக்கம் இதனை உணர்த்தும்:

> "தொல்காப்பியத்தையும் சங்க இலக்கியங்களையும் பயின்றவர்கள் இன்றுள்ள தமிழின் நிலையை எண்ணி வருந்தாமல் இருக்க மாட்டார்கள். வருந்துகின்றோர் தமிழைக் காக்கத் தம்மால் ஆனதைச் செய்ய முற்படுவதுதான் இயல்பு. யானும் தமிழைக் காக்கும் தொண்டில் ஈடுபட்டேன்.
>
> கல்லூரி ஆசிரியர்கள் வகுப்பறையில் மாணவர்களோடு தொடர்பு கொள்ளுதல் மட்டும் போதாது. வகுப்புக்கு வெளியிலும் பொதுமக்களோடு தாம் கற்ற பரந்த கல்வியின் பயனால் ஆழ்ந்த ஆராய்ச்சியின் தொடர்பால் பெற்றுள்ள அறிவை மக்களுக்கு வரையாது வழங்க வேண்டும். இக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டே பல்கலைக்கழகங்கள் ஆங்காங்கே பெருநகரங்களில் மக்கள் தொடர்புச் சொற்பொழிவுகள் பேராசிரியர்களைக் கொண்டு நிகழ்த்துவிக்கின்றனர். பேராசிரியர் எனும் பொருளைத் தரும் 'புரபசர்' என்னும் ஆங்கிலச்சொல்லுக்குப் பொருள், 'தாம் அறிந்ததைக் காய்தல் உவத்தல் அகற்றிப் பிறர்க்கு வெளிப்படுத்துதலைத் தொழிலாக உடையவர்' என்பதாகும்." *(பேராசிரியர் சி.இலக்குவனார்: செந்தமிழ்க் காப்பு தந்த சிறை வாழ்வு **குறள்நெறி**:1.1.66)*

இதன் தொடர்ச்சியாக இவற்றிற்கிணங்கத் தாம் ஆற்றிய பணிகளைப் பேராசிரியரே மேற்குறித்த கட்டுரைத் தொடரில் பின்வருமாறு குறித்துள்ளார்:

> "ஆகவே, யான் ஆராய்ந்து கற்றறிந்தவற்றைச் சொற்பொழிவு வாயிலாக வெளிப்படுத்தினேன். விடுமுறைக் காலங்களில் வெளியூர்கட்குச் சென்று சொற்பொழிவுகள் ஆற்றும் திட்டங்களை யானே மேற்கொண்டேன். பணிபுரிந்த ஊர்களில் தமிழோடு தொடர்புடைய கழகங்கள் ஏற்படுத்தி ஞாயிறு தோறும் சொற்பொழிவுகளும் வகுப்புகளும் நடத்தும் திட்டங்களை உருவாக்கினேன். மதுரையிலும் தமிழ்க்காப்புக் கழகம் எனும் ஒன்றினை ஏற்படுத்தினேன்."

சொற்பொழிவுகள் என்றால் இன்றைக்கு உள்ளதுபோல பெருந் தொகைகளைப் பெற்றுக் கொண்டு சிறப்பான ஊர்தி வசதிகளையும் தங்குமிட வசதிகளையும் கேட்டு எய்தி மக்கள் நலன் பற்றி எண்ணாமல், துணுக்குத் தோரணங்களை அள்ளிவீசிவிட்டு வருவதல்ல. தம் சொந்தச் செலவில் பயணங்களை அமைத்துக் கொண்டு தமிழ் நெறிபரப்பும் பணிகளைப் பல் வேறு இடர்ப்பாடுகளுக்கிடையே மேற்கொண்டமையாகும். அன்றைய

நிலையில் தமிழ்நாட்டுக் கல்லூரிகளில் முதுநிலைத் தமிழ்ப்பேராசிரியர், பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களே. அப்போது துணை வேந்தர்களாக வந்த தமிழ்ப்பேராசிரியர்கள் எல்லாம் பிற துறைகளில் இருந்து தமிழ் ஆசிரியராக வந்து அரசியல் செல்வாக்கால் பதவி அடைந்தவர்களே. ஆனால், வேறு பணிக்கும் வேறு துறைக் கல்விக்கும் வாய்ப்பு இருந்தபோதும் அவற்றை உதறிவிட்டுத் தமிழ்க்கல்வியையும் தமிழ்ப்பணியையும் தேர்ந்தெடுத்த பேராசிரியர், கூடுதல் ஊதியம் பெற்றாலும் அவற்றைக் குடும்பத்திற்காகச் செலவிடவில்லை. அவ்வாறு அவர் நடந்து கொண்டிருந்தால் பெரும் செல்வந்தர் ஆகி இருப்பார். ஆனால், - ஆசிரியர் வேலை என்பது பொழுதுபோக்கிற்காக என்பதுபோல் வேறுவகையில் வருவாய் திரட்டும் சிலர் போல் அல்லாமல் - ஏதோ வேலை பார்க்கிறோம் என்ற அளவில் ஒப்புக்கு வேலைபார்ப்போர்போல் அல்லாமல் - பயிற்றுவிக்கும் கடமையைச் செவ்வனே செய்தால் போதும் எனக் கற்பிப்பதில் கருத்து செலுத்தும் சிலர் போல் அல்லாமல் - ஆசிரியர்களின் வேலை மன்பதைக்குக் கற்பிப்பது எனக் கொண்டு வாழ்ந்த பேராசிரியர், தம் வருவாயைத் தமிழ் விழிப்புணர்வுப் பணிகளுக்காக மேற்கொண்டார். அன்றைக்கு அவர் நான்கு சுவர்களுக்குள் அல்லது கல்விநிலைய வளாகத்திற்குள் தம் பணியை அடைத்து இருந்தார் எனில் செல்வர் பட்டியலில் வேண்டுமானால் இடம் பெற்றிருக்கலாம். அவ்வாறு இல்லாமல் தம் கல்விப்பணிப் பரப்பைக் கல்விக்கூடங்களுக்கு வெளியேயும் விரிவாக்கியமையால், பரந்த தமிழ் உலகத்தவர் உள்ளமெங்கும் இன்று இடம் பெற்றிருக்கின்றார்.

"ஆற்றலுக்கேற்ற உழைப்பு தேவைக்கேற்ற ஊதியம்" என்பதே பேராசிரியர் கொள்கை (என் வாழ்க்கைப் போர்: இளமைப்பருவம்) எனவே ஒல்லும் வகையெல்லாம் தமிழ் பரப்பலுக்கும் உரிமைக்கும் என உழைத்தார். பொருள் ஈட்டுவதற்கான பணியில் பெற்ற வருவாயில் அடிப்படைத் தேவைகளைச் சுருக்கிக்கொண்டு அவற்றிற்கென மட்டும் செலவழித்து விட்டு எஞ்சியதைத் தமிழ் மன்பதைக்காகச் செலவிட்டார். இப்படி ஒரு பேராசிரியரை இனி உலகம் காணாது என அவர் மாணாக்கர்களும் தமிழன்பர்களும் சொல்லிய வண்ணம் பிறருடன் ஒப்பிட இயலாத அளவிற்குத் தம் உடல், பொருள், ஆவியைத் தமிழுக்குத் தந்தார்.

பாவேந்தர் பாரதிதாசன் அவர்களும் பேராசிரியர் இலக்குவனாரும் தமிழ் காக்கும் எண்ணங்களில் ஒன்றுபட்டவர்கள். பாவேந்தரின் தமிழியக்க எண்ணங்களுக்கு வடிவம் தந்தவர் பேராசிரியர்; பாவேந்தர் வகுத்த தமிழ்ப்போராளி இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் பேராசிரியர் எனத் தமிழ் உணர்வாளர்கள் உரைப்பர். அதே நேரம் மூத்த தலைமுறையினர் பேராசிரியரின் வாழ்வுப்பாதையைக் குறியீடாகக் கொண்டு தமிழ்உணர்வுப் பாடல்களைப் படைத்தவர் பாவேந்தர் என்பர். இரண்டிலும் உண்மைகள் உள எனவும் ஆன்றோர் எண்ணத்தால்

ஒருவரே எனவும் கொள்ளலாம். இதற்குச் சான்றாகப் பேராசிரியரின் தமிழ் வருகைப் பதிவு குறித்த பாவேந்தரின் பதிவு குறித்துக் காண்போம். நெல்லையில் பேராசிரியரிடம் அப்பொழுது பயின்ற எளிமை ஏந்தல் தோழர் நல்லக்கண்ணு அவர்கள், பேராசிரியர் வருகைப்பதிவின் பொழுது 'உள்ளேன் ஐயா' என்று சொல்ல அறிவுறுத்தியது ஓர் இயக்கமாகத் தமிழ்நாடெங்கணும் பரவியது என்கிறார். இதற்குச் சில ஆசிரியர்களிடம் இருந்து எதிர்ப்புகளும் வந்தன. 'உள்ளேன் ஐயா' என்று சொல்வதை மறுக்கும் ஆசிரியர்களை மாணவர்கள் எதிர்த்ததுண்டா என்று கேட்டுப் பாவேந்தர் பாரதிதாசன்,

"ஆரிய ஆசான் பேரைச் சொல்லி
அழைக்க அதற்குத் தமிழ்மா ணாக்கன்
'உள்ளேன் ஐயா' என்றே உரைத்தான்
அப்படிச் சொல்லல் தப்படா என்ற
இழிஞனை எதிர்த்த துண்டா மாணவன்?"

எனப் பாடிப் பேராசிரியரின் தொண்டினை ஆவணமாக்கி உள்ளார்.

இக்காலத் தலைமுறையினர் சிலருக்கு ஐயம் வரலாம். பேராசிரியர் சி.இலக்குவனார் கல்வியாளராகத் தம் கடமையை ஆற்றினார்; மாணவர்களை நன்னிலை அடைய உருவாக்கினார்; சில புதிய திட்டங்களை அறிமுகப்படுத்திச் செயல்படுத்தி இருக்கிறார்; இவற்றில் என்ன பெரிய சிறப்பு உள்ளது என்றுகூட அறியாமையால் எண்ணலாம். பேராசிரியர் தம் பணிகளை எளிதில் ஆற்றும் வாய்ப்பான சூழல் இல்லாதபோதும் தன்னலம் நாடாமல் தமிழ்நலம் நாடி ஓயாது அருந்தொண்டுகள் ஆற்றினார் என்பதும் ஒவ்வொன்றையும் போராடியே செய்து முடித்தார் என்பதும்தான் அவரது போராண்மைக்குச் சான்றாகும். பள்ளியில் தமிழாசிரியராகச் சேர்ந்தது முதலே மாணவர்களுக்குப் பாடம் நடத்தும் பொழுது பாடத்தோடு தொடர்புடைய வேர்ச்சொல் விளக்கங்களை அளித்துத் தமிழின் தூய்மையை விளக்குதல்; பாடங்கள் அடிப்படையில் சீர்திருத்தக் கருத்துகளை உள்ளத்தில் பதிய வைத்தல்; தமிழ்க்காப்பு உணர்வினை விதைத்தல் என அரும்பணியாற்றினார். எனவே, தமிழ்ப்பகைவர்கள் இவருக்கு எதிராகத் தொடக்கம் முதலே செயல்பட்டு வந்துள்ளனர். பணி விலக்கலையும் காவல்துறை நடவடி க்கையையும் வலியுறுத்தி முதலில் குறிப்பிட்டவாறான தொல்லைகள் மூலம், மன உளைச்சலிலாவது தள்ளி அவரின் தமிழ்ப்பணிக்கு முற்றுப்புள்ளி இட வைக்க முயன்றனர். போராளிகளுக்கு எதிர்ப்புகள்தாமே ஊட்டமாக அமையும். எது கண்டும் அஞ்சாமல் பேராசிரியர் தம் பணியை முன்னிலும் விரைவு படுத்தினார்; தமிழ் உரிமை உணர்வை மாணவர்களிடம் மட்டுமல்லாமல் பொது மக்களிடமும் உண்டாக்கிய போராளியாகத் திகழ்ந்தார்.

தமிழில் பேசுவதாலும் பிறரைத் தமிழில் பேச ஆற்றுப்படுத்துவதாலும் தம் வருவாயைத் தமிழ்ப்பணிக்கென செலவிடுவதாலும் தமிழாசிரியர் கூட்டமே அவரைப் பிழைக்கத் தெரியாத அப்பாவி என்று கூறி வந்தது. இது குறித்துப் பேராசிரியரே பின்வருமாறு எழுதி உள்ளார்:

> "தமிழரை ஒழிந்த ஏனையோர் எல்லாரும் தம் மொழியாளரைக் காணுங்கால் தம் மொழிலேயே உரையாடுகின்றனர். தமிழர் மட்டும்தான் தம் மொழியை மறந்து ஆங்கிலத்தில் உரையாடுகின்றனர் என்று கூறும் பழிச்சொல் நீங்கிலது. தமிழால் வாழுகின்ற - தமிழைக் காக்க வேண்டிய தமிழாசிரியர்களை இன்னும் இந் நோய் விட்டபாடில்லை. ஆங்கிலேயர் ஆட்சியகன்றும் ஆங்கில மொழிச் செல்வாக்கு தமிழாசிரியர்களையும் ஆட்டிப் படைப்பது விந்தையினும் விந்தை. ஆகவே, தமிழ்ப் பேராசிரியனாகிய யான் தமிழுரிமை நாடித் தொண்டாற்ற முற்படுகின்றபோது, அவர் ஓர் அப்பாவி! பிழைக்கத் தெரியாதவர் என்று பிறர் கூறும் எள்ளல் உரைக்கு இலக்காக நேரிடுகின்றது."

தமிழாசிரியர் நிலை குறித்துப் பேராசிரியர் தெரிவித்த கருத்தின் மூலம், எத்தகைய சூழலில் அவர் தமிழாசிரியர்களையும் எதிர்த்தே அவர்களின் நலனுக்காகவும் தமிழக நலனுக்காகவும் போராடி வந்துள்ளார் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

தமிழ்ப்பகைவர் என்போர் தமிழ்த்துறையுடன் தொடர்பற்றவர்கள் எனக் கருதினால் அதுவும் தவறாகும். எடுத்துக்காட்டிற்கு ஒன்று. திருநெல்வேலி ம.தி.தா.இந்துக் கல்லூரியில் பேராசிரியர் சேரும் முன்பு தமிழ் வகுப்பிலும் ஆங்கிலம்தான் தவழ்ந்தது. ஆங்கிலம் மூலம் தமிழை விளக்குவதில் பெருமை கண்டனர் தமிழ்த்துறையினர். ஆங்கிலத்தில் பேசுவதே தம் உயிர் மூச்சு எனக் கொண்டனர் அவர்கள். ஆனால் பேராசிரியர் அங்குத் தமிழ்த்துறைத் தலைவராகச் சென்ற பின்பு தமிழ்த்துறை மட்டுமல்ல கல்லூரியே தமிழ்மணத்தில் மணந்தது. "இந்துக் கல்லூரியின் கருங்கல்லும் செங்கல்லும்கூட இலக்குவனாரால் கன்னித்தமிழ் பாடுகிறது" என அவர் மாணவர் வேலுச்சாமி (பக்கம் மு8 : செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்) கூறியது நெல்லை மக்களின் ஒருமித்த கருத்தாகும். அக்காலத் தமிழாசிரியர் நிலை குறித்தும் பேராசிரியர் தொண்டினால் பரவிய தமிழ் உணர்வு குறித்தும் ஆரியக் காதலர்கள் எதிர்ப்பு குறித்தும் பேராசிரியரே 'என் வாழ்க்கைப் போர்' நூலில்(கையெழுத்துப்படி) பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

> அங்குத் தமிழ்த் துறையாசிரியர்கள் தூய தமிழைப் போற்றும் கொள்கையை வெறுத்துள்ளனர்.வேற்றுமொழிச் சொற்களைக் கலந்து பேசுதலே தமிழில் புதுமலர்ச்சி என்று முழங்கி வந்தனர். ஏன் தமிழ்ப் பாடங்களை - பாட்டுகளை - ஆங்கிலத்தில்

விளக்குவதைப் பெருமையாகக் கருதினர். தமிழ் வகுப்பில் ஆங்கிலம் கலவாது உரையாடுதலே அவர்கட்கு இழுக்கெனக் கருதி வந்தனர். ஆங்கில ஆசிரியர்களுடன் போட்டியிடுவது போன்று ஆங்கிலத்தை அளாவிப் பேசி வந்தனர். ஆங்கிலம் அறியாத புலவர்கள் ஒன்றும் அறியாத கட்டுப் பெட்டிகள் என மாணவர்களை நம்ப வைத்தனர்.

ஆங்கிலம் ஒன்றையே கற்று, அதற்கே ஆக்கையும் ஆவியும் விட்டு, தாங்களும் அயலவராகித் தமிழின் தொடர்பற்றுப் போகும் இழிநிலைக்கு மாணவர்களை இட்டுச் சென்றனர்.

தேசியப் பெரும்புலவர் பாரதியார் பயின்றது இக்கல்லூரியின் தொடர்பாயுள்ள உயர்நிலைக் கல்விக் கூடத்தில்தான் என்பது அறியத்தக்கது. ஆங்கிலக் கல்வியால் வரும் தீமையை அவர் அழகுறக் கூறியிருப்பதை அறிந்திருந்தும் அறியாதவர் போன்று நடந்து கொண்டு வந்தனர்.

யான் ஆங்கிலத்தை வெறுத்தவனல்லன். ஆங்கிலத்தால் அடைய இருக்கும் நன்மைகள் அளப்பில. அதனை இரண்டாவது கட்டாயமொழியாகப் பயில வேண்டியது தமிழர்களின் தவிர்க்கலாகாக் கடனே என்று அன்றும் கூறினேன்; இன்றும் கூறுவேன். ஆனால் அதற்கு அடிமையாகித் தமிழைப் புறக்கணிக்காலாகாது என்பது தான் எனது கொள்கை.

அன்று தமிழ் தவிர்த்து அனைத்துப் பாடங்களும் ஆங்கிலத்தில்தான் கற்பிக்கப்பட்டன. தமிழையும் ஆங்கிலத்தில் கற்பித்தால் தமிழ்ச் சொற்களைச் செவி குளிர மாணவர்கள் எங்குச் சென்று கேட்பர். 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' என்பதனை மாணவர்கள் எப்படி அறிவர்?

தமிழ் ஆசிரியர்கள் தங்கள் ஆங்கிலப் புலமையை வெளிப்படுத்தி மாணவர்களின் பாராட்டுதலைப் பெறவிரும்பினர். ஆனால் மாணவர்களில் பலர் இதனை உள்ளூர வெறுத்துக் கொண்டிருந்தனர். "ஆங்கிலத்தைக் கேட்பதற்கு ஆங்கில வகுப்புகள் உள்ளனவே. தமிழ் வகுப்புகளில் ஆங்கிலம் எற்றுக்கு? அன்றியும் ஆங்கில ஆசிரியர்களை விடத் தமிழாசிரியர்கள் ஆங்கிலத்தை அழகுறு நடையில் பொழிய இயலுமா?" எனத் தமக்குள்ளே கூறிப் புழுங்கினர். 'தமிழ்நாட்டில் எல்லாம் தமிழில்; எங்கும் தமிழ்' என்ற நிலை ஏற்பட வேண்டும் என்ற கொள்கையை யான் வெளிப்படுத்தியவுடன் மாணவர்கட்கு ஊக்கம் உண்டாகி விட்டது. தமிழைப் போற்றத் தொடங்கி விட்டனர். வகுப்பில் வருகைப் பதிவுக்குத் தமிழில் விடையளித்தனர். 'உளேன் ஐயா' என உள்ளன்புடன் உரைத்தனர். விளையாடுமிடங்களில் வியன்

தமிழ் புகுந்தது. 'Love all' என்பதனை விடுத்து 'அன்பே கடவுள்' என ஆர்வமுடன் மொழிந்தனர். மாணவரிடையே தமிழ்ப் புரட்சி மலர்ந்து விட்டது.

"விளையாட்டுத்துறை ஆசிரியர் 'உங்கள் தமிழைத் தமிழ் வகுப்புகளில் மட்டும் வைத்துக் கொள்ளச் சொல்லுங்கள்; வேறு வகுப்புகளில் புகுத்தவேண்டா' என்று வேண்டினார். தமிழ்த் துறை ஆசிரியர் ஒருவர் தம் வகுப்பில் மாணவர்கள் நோக்கி 'ஆங்கிலத்தை வெறுத்தல் கூடாது; 'Touch me not; See me not' என்ற கொள்கை இக்காலத்துக்கு ஏலாது. ஆங்கிலம் தான் வாழ்வளிக்கும்" என்று கூறியதாக அறிந்தேன்.

யான் அவ்வகுப்புச் சென்ற போது "ஆங்கிலத்தை வெறுத்தல் வேண்டா. ஆனால் தமிழைப் புறக்கணித்தல் தவறு ('Drive me not; kill me not') என்று தமிழன்னை கூறுகின்றார். தமிழ்ச் சொல் இருக்கும் போது ஆங்கிலச் சொல்லைப் பயன்படுத்துவது தமிழைக் கொல்லுவதற்கு ஒப்பாகும்" என்று கூறத் தொடங்கினேன். மாணவர்களிடையே தமிழ்க்கனல் கொழுந்து விட்டெரியத் தொடங்கி விட்டது. ஆங்கிலத்துக்கு அடிமையாய் இருந்த தமிழ் ஆசிரியர் தம் அழுகைக் கண்ணீரால் தமிழ்க் கனலை அகற்ற முயன்றார். வருகைப் பதிவின் போது மாணவர்கள் தமிழில் கூறத் தொடங்கியவுடன், கண்ணீர் வடித்த வண்ணம் "நான் இன்னும் சில நாட்கள் தான் இங்குப் பணிபுரிவேன்; ஆகவே தமிழில் கூறும் மாறுதலை நிறுத்துங்கள். என்பால் அன்பே காட்டுங்கள்" என்று வேண்டினராம். மாணவர்கள் இரக்கம் காட்டவில்லை. பின்னர் முதல்வரிடம் சென்று முறையிட்டனராம். முதல்வர், "மாணவர்கள் விருப்பப்படிச் செல்லுதலே மேல்" என்று கூறிவிட்டனராம்.

தூய தமிழ்ப் பற்று வளரத் தொடங்கியதும் பிராமண மாணவர்கள் - வடமொழி பயின்றவர்கள் - என்னை வடமொழி வெறுப்பாளன் என்று கருதி விட்டனர்.

யான் அங்குப் பணியேற்ற செய்தி பரவியவுடன் அவ்வூர் வழக்கறிஞர்கள் கூட்டத்தில் பிராமணர்கள் என் பெயரை அறிந்தவுடன் "இவர் ஒரு வடமொழி வெறுப்பாளர்; பெயரே அறிவிக்கின்றது" என்றனராம். யாம் மாலையில் நெல்லைப் பெரு வழியில் தனியாக உலாவச் செல்வதுண்டு. பெருவழியை ஒட்டி, கைப்பந்து மட்டைப் பந்து விளையாடுமிடங்கள் இருந்தன. அவை, பிராமணர்கள் மிகுதியாய் உறைந்த தெருக்களை ஒட்டியிருந்தன. பிராமண மாணவர்களே தாமே அமைத்துக் கொண்ட விளையாடுமிடங்கள். அங்கு விளையாடுகின்ற அவர்கள் என்னைக் கண்டதும் 'Sanskrit Zindabad' என்று முழங்கத் தொடங்கினர். சில நாட்கள் பொறுத்தேன்.

ஒருநாள் அவர்கள் முழங்கத் தொடங்கியதும், அவர்களை நோக்கி நடந்தேன். மட்டைகளைப் போட்டு விட்டு ஓடிவிட்டார்கள். பிறகு அம் மாணவர்களில் சிலரையழைத்து அவ்வாறு முழங்குவது நன்றன்று என்று அறிவுரை கூறியவுடன் அதனை நிறுத்திக் கொண்டு விட்டனர்.

பேராசிரியர், கல்லூரி நிலத்தில் தமிழ் உணர்வு விதையைத் தூவினாலும், பயன் தமிழ் மண் எங்கும் விளைந்தது. மன்பதை நிலையைப் புரட்டிப் போடுபவன்தானே போராளியாக இருக்க முடியும். தாம் வாழ்ந்த காலத்தில் தமிழுக்கு எதிராக இருந்த மன்பதைச் சூழலைத் தம் நெறியுரையால், வாதுரையால், தொண்டினால், புரட்டிப் போட்ட போராளி பேராசிரியர் இலக்குவனார்போல் வேறு ஒருவரைக் கூற இயலுமோ?

தருமையருள் பெறு நெல்லை அருணகிரி இசைக்கழகம் ஒன்று நெல்லையில் அமைக்கப்பட்டது; ஞாயிறுதோறும் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டன. இதன் வாயிலாகப் பேராசிரியர் ஆற்றிய தமிழ்ப்பணி நெல்லைக்குப் புகழ் சேர்த்தது. இவ்வமைப்புடன் இணைந்து பேராசிரியர் ஆற்றிய பணிகளை அவரே பின்வருமாறு குறித்துள்ளார்:

"என் ஆய்வுரையை-அறிவுரையைக் கேட்டு நிகழ்ச்சிகளை அமைப்பது வழக்கம். யானும் அவ்வப் போது பல தலைப்புகளில் சொற்பொழி வாற்றுவதுண்டு. சிறப்பு நிகழ்ச்சிகளின் போது முன்னுரையும் நன்றியுரையும் கூறுவதுண்டு. தூயத் தமிழ்க் கொள்கையைப் பரப்புவதற்கு இக் கழக மேடை நன்கு பயன்பட்டது. எனது தொடர்பு இக்கழகத்திற்கு இருந்ததனால் இதனைக் கருஞ் சட்டைக் கழகம் என அழைத்தனர் தமிழ்ப் பகைவர்கள். அவ்வாறே கருதித் தருமபுர மடாதிபதிக்கும் கடிதம் எழுதினர். கழக நிகழ்ச்சி நடை பெற்ற இடம் தருமபுர மடத்துக்கு உரிமையான இடம். மடாதிபதி அவர்களும் தமக்குரியோர் மூலம் உண்மையறிய முயன்றனர். வறிதே மூடப்பட்டிருந்த மடம், இவ்வாறு தமிழும் சைவமும் வளரப் பயன்படுவது கண்டு பேருவகை கொண்டனர். தமிழ்ப் பகைவர் தம் எண்ணம் ஈடேறாது வருந்தினர்.

இவ்விசைக் கழகச் சார்பாகத் தமிழ்த் திருநாள் பொங்கல் விழா நடாத்தினோம். ஒரு நாழிகைச் சொற்பொழிவும், சிவப்பு விளக்கால் சொற்பொழிவைக் கட்டுப்படுத்தும் முறையும் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டன. தெருவெல்லாம் செந்தமிழ் முழக்கம் செ ழிக்கச் செய்யப்பட்டது. தனித் தமிழ் வெற்றி கொண்டு விட்டது. தமிழ் அன்னை வீறுடன் வீற்றிருந்தாள்."

எதிலும் புதுமை காணும் பேராசிரியர், மேடைப்பேச்சில் கால வரையறையை நடைமுறைப்படுத்திய புதுப்பாங்கு, இன்றைய பட்டிமன்ற உரைகளில் மணி அடித்து உரையை முடிக்கச் செய்யும் பழக்கத்திற்கு அடிகோலியது.

# 4. இதழாயுதம் ஏந்திய போராளி

போராளிப் பணி ஒரு துறையுடன் முடிவடைவதில்லை. போராளிக்கு ஓய்வேது? ஒழிவேது? பேராசிரியரும் கல்விநிலையம் சார்ந்த பணியுடன் நின்று விடவில்லை. இதழ்ப்பணி மூலமாகத் தம் தொண்டினைத் தமிழ் உலகம் முழுவதும் விரிவு படுத்தினார். தமிழை வளர்ப்பதாகச் சொல்லிக் கொண்டே தமிழைச் சிதைக்கும் பல அமைப்புகள் போன்ற ஒரு குழு (வட்டத்தொட்டி) நடத்திய கூட்டத்தில் 'சங்க இலக்கியத்தைத் தூக்கி வங்கக் கடலில் எறிவோம்' என்று முழங்கினர். இதை அறிந்த பேராசிரியர், தமிழ் இலக்கியத்தை அழிப்பது என்பது தமிழ்க்கலையை - தமிழ்ப் பண்பாட்டை - தமிழ் நாகரிகத்தை - அழிப்பதன் மூலம் தமிழ் மொழியையும் தமிழ் இனத்தையும் அழிப்பது என்ற உணர்வின்றி முழங்குகின்றனரே என உள்ளம் நைந்து கொதித்து எழுந்தார். ஏதோ பேசுகிறார்கள்; பேசட்டும் என்று விட்டுவிடவில்லை. அல்லது மறுப்பு சொல்லிவிட்டு வாளா இருப்போம் என அமைதி காக்கவில்லை. சங்க இலக்கியப் பகைவர்களால் ஏற்பட்ட மாசினைத் துடைக்க வேண்டும் எனப் பேராசிரியர் விழைந்தார்; 'சங்கத் தமிழ் பாடித் தமிழர் புகழ் வளர்ப்போம்' என முழங்கிச் சங்க இலக்கியப் பரப்புரையைத் தொடர்ந்தார். 'சங்க இலக்கியம்' என்னும் வார ஏட்டினைத் தொடங்கிச் சங்க இலக்கியங்களை எளிமையாக விளக்கினார். கதை கூறும் முறையில் புதுமையாக அவர் சங்க இலக்கியப்பாடல்களை விளக்கியமைக்கு மக்களிடையே பெரும் வரவேற்பு இருந்தது. கதைகளைப் படிக்கும் ஆர்வம் மிகுந்தவர்களுக்குக் கதை வடிவில் இலக்கியத்தைச் சுவைப்பது இன்பமாக இருந்தது. சங்க இலக்கியம் பெரும் புலவர்களுக்கு மட்டுமே என்ற எண்ணம் மாறி மக்களுக்கான இலக்கியம் என்ற எண்ணம் வேரூன்றியது. 'இரும்புக்கடலை என இகழப்பட்ட பாடல் இன்சுவை அமுதமாகக் கருதப்பட்டது' எனப் பேராசிரியரே இது குறித்துக் கூறி உள்ளார்.

தாம் மட்டும் சங்க இலக்கியத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டால் போதாது எனக் கருதினார் பேராசிரியர். எனவே, பிற எழுத்தாளர்கள், பேச்சாளர்கள், ஆசிரியர்கள், அறிஞர்கள் என அனைவருக்கும் "சங்க இலக்கியக் காலம் நம்பொற்காலம். சங்கஇலக்கியங்களை மக்களிடையே பரப்பவேண்டும்" எனக் குறிப்பிட்டுச் சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு பேசுமாறும் எழுதுமாறும் மடல்கள் எழுதினார். அதன் பயனாக அறிஞர் மு.வ. முதலான பிற படைப்பாளிகள் சங்க இலக்கிய அடிப்படையில் புதினங்கள் எழுதிய நிகழ்வுகளும் விளக்க ஓவியங்கள் அமைத்த நேர்வுகளும் சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. அன்றைக்குப் பேராசிரியர் அந்த முயற்சியை மேற்கொண்டிராவிட்டால் சங்க இலக்கியம் மறைந்து போயிருக்கும். அறிஞர்கள் சி.வை.

தாமோதரனார், உ.வே.சாமிநாதனார் ஆகியோர் மீட்டுக் கொடுத்த சங்க இலக்கியங்களைத் தமிழ்ப் பகைவர்கள் புதைகுழிக்குள் அனுப்பி இருப்பர். பழந்தமிழ் இலக்கியங்கள் யாவுமே மக்கள் நலனுக்கானவையே என்பதை மெய்ப்பித்து இலக்கியப்போராளியாக வாகை சூடினார் பேராசிரியர்.

சங்க இலக்கியம் வார ஏட்டின் மூலம் இலக்கியப்பணி ஆற்றுவ தோடு நின்றுவிடவில்லை பேராசிரியர். 'தமிழர்களின் தேசிய மொழி தமிழே' என்பதை உரைத்து வந்த பேராசிரியர் 'சங்க இலக்கியம்' இதழ் வாயிலாகவும் அதனை உணர்த்தினார். இந்தியம் என்றும் திராவிடம் என்றும் இல்லாத இயங்களைப் பிறர் இயம்பப் பேராசிரியரோ தமிழ்த் தேசியம் என்பதை வலியுறுத்தினார்.

இந்திய விடுதலைக்கு ஈராண்டுகளுக்கு முன்பிருந்தே

"உரிமை ஞாயிறு தோன்றுகின்றது. உறங்காதே தமிழா!
உன்றன் நாடும் உரிமை பெற்றிட உழைத்திடு தமிழா!"

என்று தமிழக விடுதலை உணர்வைப் பரப்பினார்.

"தமிழரின் அரசை ஆக்குவோம்! - இனித்
தமிழகம் சிதைவதைத் தாக்குவோம்!
தமிழகம் உலகத்தின் தாயகம்! - இதைத்
தரணியோர் மதித்திடச் செய்குவோம்!"

என்று தமிழகமே உலகத்தின் தாயகம் என்பதை உலகோர்க்கு உணர்த்த வேண்டும் என வலியுறுத்தினார். அதனை நம்மில் பெரும்பான்மையர் உணரத் தவறியதால்தானே தாய்மண்ணில் ஈழத்தமிழர்கள் கொத்துக் கொத்தாகச் சாகடிக்கப்பட்ட அவலம் நிகழ்ந்தது.

"தமிழா சிந்தனை செய்! வீரத்தமிழா வீறிட்டெழு! முன்னை நிலையை உன்னிப் பார்!
நாடு - பரந்த தமிழகம் குறைந்ததேன்?
மொழி - உலகாண்ட உன் மொழியை ஒடுக்குவதேன்?
வீரம் - இமயம் கொண்ட ஏற்றம் எங்கே?
ஆட்சி - பாவலனைப் போற்றிய காவலனெங்கே?
வாணிகம் - கப்பலோட்டிய கண்ணியம் எங்கே?
கொடை - பெருந்சோறளித்த பெருமைதான் எங்கே?
தாய்மொழி உயரத் தாய்நாடு உயருமே!"

என மொழி, இனம், நாடு, பண்பாடு, கொடை, வணிகம், ஆட்சி எனப் பலவகையிலும் தனித்து விளங்கிய தமிழர்களின் பெருமையை நினைவுறுத்தித் தமிழ்த்தேசிய உணர்வைத் தட்டி எழுப்புகிறார்.

"அமுதம் ஊறும் அன்பு கொண்டு அரசு செய்த நாட்டிலே
அடிமை என்று பிறர் நகைக்க முடிவணங்கி நிற்பதோ?
இமயம் தொட்டு குமரி மட்டும் இசைபரந்த மக்கள் நாம்

இனியும் அந்தப் பெருமை கொள்ள ஏற்றம் யாவும் செய்குவோம்!"

என இமயம் முதல் குமரிவரை வாழ்ந்த நாம் மீள்பெருமை பெற உழைக்க வேண்டுகின்றார்.

> "தமிழ் ஆய்ந்த தமிழர்களே தமிழ்நாட்டின் தலைவர்களாய் விளங்கும் காலம்
>
> இமிழ்கடல் சூழ் இவ்வுலகில் எவர்க்கும் நாம் பின்னடைந்து வாழ்தலில்லை!"

எனத் தமிழர்களைத் தமிழர்களே ஆள வேண்டும் என்னும் தமிழ்த் தேசிய உணர்வை மலரச் செய்கிறார்.

இந்தியவிடுதலைக்கு முன்னரே தமிழக விடுதலையை வலியுறுத்திய பேராசிரியர் அதற்குப் பின்னரும் மொழிவழித் தேசியக் கூட்டமைப்பையே வலியுறுத்தி வந்துள்ளார். தொடர்ந்து அவர் நடத்திய இதழ்களில் அதனை வலியுறுத்தி வந்ததற்குச் சான்றாக ஒன்றை மட்டும் பார்ப்போம். 'திராவிடக் கூட்டரசு' இதழில் *(31.10.52)* 'மொழி வழி நாடுகள் முன்னின்று அமைப்போம்' என்னும் தலைப்பில் பின்வருமாறு தெரிவித்துள்ளார்:

> "மொழி வழியாக நாடுகள் அமைய வேண்டுமென்று கூறுகின்றோம். மாகாணங்கள் அல்ல. இன்று சிலர் மொழிவழியாக மாகாணங்கள் அமைந்து தில்லி ஆட்சியின் அடிமை யுறுப்பாய் இயங்க வேண்டுமென்று முயல்கின்றனர். ஆந்திரப் பிரிவினைக் கிளர்ச்சிக்காரர்கள்கூட ஆந்திர மாகாணம்தான் வேண்டுமென்றும் தில்லித் தலைமைக்குக் கட்டுப்பட்டுக் கிடப்போம் என்றும்தான் கூறி வருகின்றார்கள். அதை நாம் வெறுக்கின்றோம். தனி உரிமையுள்ள மொழி வழி நாடுகள் அமைய வேண்டுமென்றுதான் நாம் கூறுகின்றோம். எங்கேயோ உள்ள தில்லிக்கும் நமக்கும் தொடர்பு எதற்காக?... ஆகவே, மொழிவழி நாடுகள் அமைய முன்னின்று உழைப்போம். ஆனால் அந்நாடுகள் ஆரிய நாட்டாட்சியின் அடிமை மாகாணங்களாய் இருத்தல் கூடாது"

இன்றைய தமிழ்த்தேசியவாதிகள் உரைப்பதை அன்றைக்கே தொலைநோக்குடன் பேராசிரியர் உணர்த்தி உள்ளார்.

இந்தவகையில் தமிழ்த்தேசிய முன்னோடிப் போராளியாகத் திகழ்கிறார் பேராசிரியர் எனலாம்.

போராளிகளுக்கான முதன்மை ஆயுதம் எழுத்து. எழுத்தினை ஒரே நேரத்தில் பலர் அறிய உதவும் கருவி இதழுலகம். தமிழுலகைச் செதுக்கப் பேராசிரியர் எடுத்த கூராயுதமே இதழ்ப்பணியாகும். தமிழ் நலன் காக்கத் தொடர்ந்து இதழ் நடத்திய ஒரே பேராசிரியராகப் பேராசிரியர் இலக்குவனார் திகழ்கிறார்.

இசைத்தமிழ் வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடுடையவர் பேராசிரியர்.

> தெலுங்குதமிழ் நாட்டினிலேன்? செத்தவட மொழிக்கிங்கே என்ன ஆக்கம்?
>
> இலங்கும் இசைப் பாட்டுக்கள் பிறமொழியில் ஏற்படுத்த இசைய லாமோ? *(பாவேந்தர் பாரதிதாசன்)*

என இசை என்றால் தமிழ்நாட்டில் தமிழிசைதான் என எழுதியும் பேசியும் வந்தார். இசைப்பாடல்கள் இயற்றிச் சிலவற்றைச் சங்க இலக்கிய இதழ்களில் வெளியிட்டும் பிறவற்றை இசைமணி சங்கரனார் பண்ணமைப்பில் மேடைகளில் பாடச்செய்தும் பேராசிரியர் தாமும் முன்முறையாகத் திகழ்ந்து தமிழிசை எழுச்சிக்கு உதவினார்.

நெல்லையில் பணியாற்றிய பேராசிரியர் அடுத்து விருதுநகர் செந்திற்குமாரநாடார் இந்துக்கல்லூரியில் (10.08.47 அன்று) தமிழ்த்துறைத் தலைவராகப் பணியில் சேர்ந்தார்; இக்கல்லூரியில் தமிழ் இலக்கியத்தில் பட்டப் படிப்பின்மையால் இளங்கலையில் தமிழ் இலக்கியத்தை அறிமுகப்படுத்தினார். கல்லூரியிலும் தமிழ் அமைப்புகள் மூலமாக நகரிலும் தம் தமிழ்த் தொண்டினைத் தொடர்ந்தார் பேராசிரியர்.

> "பேராசிரியர் சென்ற இடங்களில் எல்லாம் தமிழ்த் தொண்டே நிகழ்ந்தது. தமிழுக்கு மறுமலர்ச்சி என்பதை அவ்வவ் வட்டாரங்கள் உணர்ந்து போற்றவே கல்வி வளாகங்களிலும், புறப்பகுதிகளிலும் பணிசெய்தார். அவர் சென்ற இடங்களில் எல்லாம் புதிய அமைப்புகள், மன்றங்கள், கழகங்கள் உருவாயின. இருந்த பழைய அமைப்புகளும் புதுப்பொலிவு கொண்டன. ஏழைமை நோக்குக்கு இடமாகி இருந்த தமிழ்த் துறையும், தமிழ் வகுப்பும் ஏறுநடையிட்டு எவரையும் ஏறிட்டுப் பார்க்க வைத்தன. பணிக்களமும் பக்கத் திடமும் செய்தி இதழ்களில் விளக்கமுற்றன."

எனப் புலவர்மணியார் (செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்: பக்கம்:மு11-12) கூறுவது போல் இங்கும் தொடர்ந்த பேராசிரியரின் பணித்தொண்டுகளால் விருதுநகரில் தமிழ் மணம் பரவியது; பகுத்தறிவும் வளர்ந்தது.

தனித்தமிழ் என்றாலே பிராமணர்கள் சமசுகிருத எதிர்ப்பாகவும் பிராமண எதிர்ப்பாகவும் கருதுவதுதானே இயற்கை. இது குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு கூறுகின்றார்:

> சொற்களில் வேரை(roots)க் கொண்டு தூய தமிழ்ச் சொற்களை அறியலாம். ஆதலின், வகுப்பில் சொற்களின் வேர் பற்றியும் அறிவித்து தமிழ் வளத்தை எடுத்துக் காட்டினேன். இதனால் மாணவர்களிடையே தூய தமிழ்ப் பற்று வளர்ந்தது. பிராமண மாணவர்கள் இதனை விரும்பினாரிலர்.

அறிவார்வமும் பேராசிரியர் மீது மதிப்பும் கொண்ட பிராமண மாணவர்கள் சிலர் இருப்பினும் பலர் எதிராக இருந்தமையால் பெற்றோர்கள் மூலம் பேராசிரியர் மீது கல்லூரியில் அரசியல் புகுத்துவதாக முறையிட்டனர். இவ்வாறு ஒரு புறம் சாதியின் அடிப்படையிலும் மறுபுறம் கட்சிஅரசியல் அடிப்படையிலும் பேராசிரியருக்கு எதிர்ப்புகள் வந்தன; அதே நேரம் பேராசிரியரின் பாடம் நடத்தும் திறனாலும் சொற்பொழிவுப் பாங்காலும் பகுத்தறிவுச் சிந்தனையாலும் பெரும்பான்மையர் அவர் பக்கம் நின்றனர்.

பேராசிரியர் இங்கு 'இலக்கியம்' என்னும் திங்களிருமுறை இதழை நடத்தி வந்தார். 'இலக்கியம்' விடுதலைநாள் மலரில், தமிழுக்கு விடுதலை, கல்விக்கு விடுதலை, மக்களுக்கு விடுதலை, கலைக்கு விடுதலை என்னும் தலைப்புகளில் பலரின் கட்டுரைகளைப் பெற்று வெளியிட்டார். இதன்மூலம் தமிழர்க்கு ஏற்பட்டதாகக் கூறும் அரசியல் விடுதலையால் பயனில்லை. தமிழ் முழு விடுதலையடைந்தாலன்றித் தமிழர்க்குப் பயனில்லை என்பதை உணர்த்தினார்.

"தூயதமிழ்ப் பற்றை மக்களுடையே வளர்த்தலும் சங்க இலக்கியத்தைப் பரப்பலும் தன் கடமைகளாகக் கொண்டு 'இலக்கியம்' தமிழ் மக்க ளிடையே செல்வாக்குப் பெற்று வந்தது" எனப்பேராசிரியரே இவ்விதழ் வளர்ச்சி குறித்துத் தம் வாழ்க்கை வரலாற்றில் குறித்துள்ளார். 'இலக்கியம்' இதழ் குறித்துத் தந்தை பெரியாரின் 20.12.47 ஆம் நாளிட்ட 'குடிஅரசு' இதழில் 'எமது தீர்ப்பு' என்னும் நூல் மதிப்பீட்டுப் பகுதியில் பின்வருமாறு செய்தி இடம் பெற்றிருந்தது.

## இலக்கியம்

*(திங்கள் இருமுறை)*

ஆசிரியர் : சி.இலக்குவன்

திருநெல்வேலி

*(புல்சுகேப் 1/8, 42 பக்கங்கள். தனி இதழ் 0-4-0. ஆண்டுக்கட்டணம் 4-0-0)*

*தமிழக மக்களின் பழமைக்கும் பெருமைக்குமுரிய இலக்கியங்களை - தமிழ்ப் பொதுமக்களை நீண்ட நாளாக அச்சுறுத்திக் கொண்டு வந்த இலக்கியங்களை - தமிழ் மக்கள் சுவைக்க வேண்டும்; தமிழர், தம் தனி நாகரிகம்,பண்பு முதலியவற்றை யுணர்ந்து இக்காலப் போலி மயக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்ற சிறந்த நோக்கத்தோடு இவ்விலக்கியம் தோன்றியிருக்க வேண்டும் என மலர் 14, 15 அறிவிக்கின்றது.*

*தாமரையில் தவழும் புலி, வில், கயல் அரசியல் கட்சியைத் தழுவியதா? என்பது இதிலிருந்து அறிய முடியவில்லை.*

*இலக்கியத்திற்கு அடிப்படையான மக்கள் வாழ்வு வளர, 'இலக்கியம்' வளர்வதாக என மனமுவந்து கூறுகின்றோம். திராவிடர்கள்-சிறப்பாகத் திராவிட மாணவர்கள் தவறாது படித்துப் பயனடைய வேண்டும்.*

'குடியரசு' இதழின் வாழ்த்தினைப் போலத் தமிழன்பர்கள், திராவிட இயக்கத்தினர், மாணவர்கள் வரவேற்பைப் பெற்று இலக்கியம் சிறப்பாகப் பணியாற்றியது; தமிழ் இலக்கியங்களை மக்கள் இலக்கியங்கள் என எளிமையாக மக்களிடையே பரப்பும் பணியில் வெற்றி கண்டது.

விருதுநகரில் பேராசிரியர் ஆற்றிய அரும்பணி குறித்து அவரது வரிகளிலேயே நாம் பின்வருமாறு அறியலாம் :

"விடுமுறைக் காலங்களில் வெளியூர்கட்குச் சென்று திருக்குறள் பற்றியும் சங்க இலக்கியங்கள் பற்றியும் சொற்பொழிவு ஆற்றும் திட்டங்களையும் மேற் கொண்டேன். இராமாயணம், பாரதம் முதலிய வடமொழி சார் நூல்களைப் பற்றி மக்கள் அறிந்துள்ள அளவு பண்டைத் தமிழிலக்கியங்கள் பற்றி அறியாதிருந்தனர். மக்கள் வாழ்வுக்கு வழிகாட்டியான தமிழ் மறையாம் திருக்குறளைத் தமிழ் மக்கள் அறியாதிருந்தது மிகமிக இரங்கத்தக்கது அன்றோ? 'வள்ளுவன் தன்னை உலகினுக்குத் தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாடு' திருக்குறளைப் பற்றி அறியாமல் இருந்த அவல நிலையைப் போக்குவதற்குச் சொற்பொழிவுத் திட்டம் அமைத்துச் சிற்றூர்களிலும் பேரூர்களினும் சென்று சொற்பொழிவு ஆற்றினேன். மகிழ் உந்துகளிலும் மாட்டு வண்டிகளிலும் சென்றுள்ளேன். சிறு வீட்டிலும் தங்கினேன். பெருமாளிகைகளிலும் தங்கினேன். கூட்டங்கள் அமைப்பதற்குரிய வேண்டுகோள்களையும் கூட்ட நிகழ்ச்சித் திட்டங்களையும், நிகழ்ந்த கூட்டங்களின் சொற் பொழிவுகளையும், பெரியார் அவர்களால் நடத்தப்பட்டு வந்த 'விடுதலை' இதழ் வெளியிட்டு வந்தது. அப்பொழுது அதன் ஆசிரியராய் இருந்த என் மதிப்புக்குரிய நண்பர் குத்தூசி குருசாமி அவர்களும் பெருந்துணையாய் இருந்தனர். பயன் கருதாமல் இப்பணியைச் செய்து கொண்டு இருந்த எனக்குப் பெரியார் அவர்களும் குத்தூசி குருசாமி அவர்களும் என்னை மேலும் ஊக்கப்படுத்துவதற்காக தமிழ் அன்பு பூண்ட செல்வர் ஒருவரை மாதம் ஐம்பது வெண் பொற்காசுகள் நன்கொடையாக ஓராண்டு கொடுக்கச் செய்தனர். பயன் கருதாப் பணிக்குப் பணம் பெறுவதற்கு என் உள்ளம் இடந்தரவில்லை என்றாலும், பொருள் இழப்பில் நடந்து கொண்டிருந்த 'இலக்கியம்' இதழைத் தொடர்ந்து நடத்த உதவியாகும் என்று கருதியும் அவர்களாகக் கொடுக்க முன் வந்த பெருந்தன்மையை இகழக்கூடாது என்று எண்ணியும் ஏற்றுக் கொண்டேன்."

பேராசிரியரின் இந்தி எதிர்ப்புப் பணிகளும் பெரியார் தொடர்பும் தனித்தமிழ் உணர்வும் பேராயக்கட்சியின் வளர்ச்சிக்கு எதிராகக் கருதி அவருக்குத் தொல்லைகள் கொடுத்துப் பணியிலிருந்து நீக்க அரசு திட்டமிட்டது. மெய்யியல் அறிஞர் சாக்ரட்டீசு இளைஞர்களைக் கெடுப்பதாக அக்காலத்தில் பழமைவாதிகள் அவலக்குரல் எழுப்பினர். இக்காலத்திலோ பேராசிரியரின் தமிழியச் சிந்தனைகள் இளைஞர்களைக் கெடுக்கும் எனக் குற்றம் சுமத்திய பேராயக்கட்சியினரின் ஊதுகுழலான அரசு, 'அவர் கல்லூரியில் தொடர்ந்து நீடிப்பது அஞ்சத்தக்கது; இளைஞர்கள் கெட்டுவிடுவார்கள்' (His Continuance in the college is dangerous; and the youngsters will be spoiled) எனக் கல்லூரிக்கு எழுதியது. இருப்பினும் கல்லூரி ஆட்சிக்குழுவினர் இதை ஏற்கவில்லை.

இது குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு தம் வாழ்க்கை வரலாற்றில் குறித்துள்ளார்:

> எனது உளக் கருத்திற்கேற்பப் பெரியார் அவர்கள் திராவிடர் கழக மாநாட்டுகளுடன் திருக்குறள் மாநாடுகளையும் நடத்தினார்கள். இத் திருக்குறள் மாநாடுகளில் எனக்குச் சிறப்புப் பங்கும் பணியும் அளித்தனர். . . . பெரியார் அவர்களால் சென்னையில் நடத்தப்பட்ட திருக்குறள் மாநாட்டுக்குச் சொற்பொழிவாளராகவும் இந்தி எதிர்ப்பு மாணவர் மாநாட்டுக்குத் தலைவராகவும் சென்று வந்துள்ளேன். உள்ளூர்ப் பேராயக் கட்சியினர் என்னுடைய தொண்டினைக் காரணமின்றி வெறுக்கத் தொடங்கிவிட்டனர். உள்ளூர்ச் சுவர்களில் 'இலக்குவனாரே உஃசார், எச்சரிக்கை' என்றெல்லாம் எழுதி வைத்தனர். நகரில் நடைபெறும் பொதுக்கூட்டங்களில் என்னைப் பற்றித் தாக்கிப் பேசினர். அரசினர்க்கு என் இந்தி வெறுப்பைச் சுட்டிக் காட்டியும், திருக்குறள் வகுப்பில் அரசைத் தாக்கிப் பேசுவதாகக் கதை கட்டியும் கடிதங்கள் எழுதினர். அரசி னரும் அலுவலர்களை அனுப்பி ஆராய வைத்தனர். அப்பொழுது கல்வியமைச்சராயிருந்தவர் அக்கல்லூரிக்கு வந்த ஞான்று என்னைக் கல்லூரியைவிட்டு விலக்கவும் அறிவுரை கூறினார். "நாங்கள் அவரை விலக்கமாட்டோம்; விரும்பினால் நீங்கள் விலக்கி விடுங்கள்" என்று மொழிந்துவிட்டனர் கல்லூரிப் பொறுப்பாளர்கள். யான் இந்தியை எதிர்ப்பதாக சட்டமன்றத்தில் என்னைப் பற்றிக் கேள்விகள் கேட்கப்பட்டன. அரசு என்னைக் கல்லூரியிலிருந்து அகற்றத் திட்டமிட்டது.

1952-ஆம் ஆண்டில் நடைபெற்ற முதல் பொதுத்தேர்தலில் விருதுநகர் நாடாளுமன்றத் தொகுதிக்குப் பெருந்தலைவர் காமராசரும் சி.டி.நாயுடு என அழைக்கப்பெறும் அறிவியல் அறிஞர் கோ.துரைசாமி அவர்களும் போட்டியிட்டனர். பெருந்தலைவர் தமிழ்நாட்டை வழி நடத்த வேண்டும்

எனக் கூறிய பேராசிரியர், அறிவியல் அறிஞர் நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவது நாட்டிற்கே நலம் பயக்கும் என அவருக்காக முனைப்பான பரப்புரை மேற்கொண்டார். சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்ட கல்லூரிச் செயலர் திரு வே.வ.இராமசாமி அவர்களும் கூட்டாதரவு முறையில் அறிவியல் அறிஞரையே ஆதரித்தார். ஆனால், தேர்தல் முடிந்ததும் நாடார் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டே நாடார் தலைவரை எதிர்ப்பதா எனக் கருதிய கல்லூரி ஆட்சிக்குழு பேராசிரியரைப் பணியில் இருந்து நீக்கியது. ஆனால், அதே போல் நாடார் தலைவரை எதிர்த்த கல்லூரிச் செயலர் நாடார் என்பதால் அவரை நீக்க வில்லை. பேராசிரியரைக் கருஞ்சட்டை இயக்கத்தின் தீவிரவாதி எனக் குறிப்பிட்டு வேலை நீக்கம் செய்யுமாறு முன்பு அரசு மடல் அனுப்பிய பொழுது, கல்லூரியில் தம் கடமையைச் செவ்வனே ஆற்றும் அவர் ஓய்வு நேரத்தில் மேற்கொள்ளும் பணிகளுக்காக அவரைக் கல்லூரியை விட்டு நீக்க முடியாது என எந்தக்கல்லூரி ஆட்சிக்குழு அவரை நீக்க மறுத்ததோ, அதே கல்லூரி, சாதிச் சேற்றில் உழன்று மனங் கலங்கியது; நிலை குலைந்தது; அறம் பிறழ்ந்தது; பணியில் இருந்து நீக்கியது.

பணி நீக்கத்திற்காகக் கொடுத்த குற்றச்சாட்டுகளில் குறிப்பிடத்தக்க ஒன்று அவர் தமிழ் விழாக்களை நடத்தினார் என்பதுதான். பேராசிரியர் நடத்திய தமிழ் தழைக்கும் விழாக்களால் புகழ் பெற்று மகிழ்ந்த கல்லூரி ஆட்சிக் குழுவினர் அவரை வேண்டாதவராகக் கருதியதும் அவற்றையே குற்றமாகக் கருதினர். போராளிகளைக் கண்டு அஞ்சுவதுதானே அரசுகளின் இயல்பு. ஒருவரை வேண்டியவராகக் கருதும் பொழுது ஒரு நிலையும் வேண்டாதவராகப் புறக்கணிக்கும் பொழுது மறு நிலையும் எடுப்பதுதானே ஆள்வோர் இயல்பு. அதற்கேற்பவே இக்கல்லூரியினரும் சாதித்திரையால் கண்களை மறைத்துக் கொண்டு பேராசிரியரைப் பணியில் இருந்து நீக்கினர். விருதுநகர் மக்கள் திரண்டு ஊர்வலமாகச் சென்று எதிர்ப்பை வெளிப்படுத்தினர். மாணவர்களும் போராட்டத்தில் ஈடுபட்டனர். பெரியார் முதலான தலைவர்களும் பணி நீக்கத்தைக் கைவிட வேண்டினர். பின்னர்ப் பேராசிரியர் 'துரத்தப்பட்டேன்' என்னும் பாவியத்தையே தம் குமுறலாக எழுதி வெளியிட்டார்.

பேராசிரியர் தஞ்சாவூர் சென்று இலக்கியம் அச்சுக்கூடம், பெரியார்தனிப்பயிற்சிக் கல்லூரி, இலக்கியப்பண்ணை ஆகியவற்றை நிறுவியதுடன், திராவிடக் கூட்டரசு என்னும் தமிழ் இதழையும் Dravidian Federation ஆங்கில இதழையும் நடத்தித் தம் தொண்டினைத் தொடர்ந்தார். உயர் செல்வம், உயர்பதவி உடையவராயினும் தமிழ்ப்பகைவர் எனில் அவரைத் தம் பகைவராகவும் மிகவும் எளியராக இருப்பினும் தமிழ் அன்பர் எனில் அவரைத் தம் உறவாகவும் கருதுபவர் பேராசிரியர். எனவே, தமிழ் நலனுக்கு எதிராக யார் கருத்து தெரிவித்தாலும் கடுமையாக எதிர்ப்பதையே தம் கடமையாகக் கொண்டார்.

சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்பேம்அல்லேம்
மா(த்) தமிழுக்கே அன்பர் அல்லராகில்
எங்குமுள இடமெலாம் சுற்றிஓடி
இரந்துண்ணும் இழிவாழ்க்கை உடையரேனும்
தங்குபுகழ்ச் செந்தமிழ்க்கோர் அன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்கும்கடவுளாரே.

எனப் பேராசிரியரே தமிழன்பர் எத்தகைய இழி வாழ்க்கை நடத்தினாலும் அவரே தாம் வணங்கும் கடவுளர் எனவும் தமிழன்பர் அல்லாதவர் வான்அளவு செல்வம் தந்தாலும் அவர்களை மதியேன் எனவும் கூறியுள்ளார். அவரது இந்நெஞ்சுரத்திற்குப் பல எடுத்துக்காட்டுகளைக் கூறலாம். ஒன்றைப்பார்ப்போம்.

அப்போதைய ஆளுநர் திரு சிரீபிரகாசா அவர்கள், "ஆடவர்கள் வெறித்துப் பார்ப்பதை மறுக்கும் ஒரு பெண்ணைக் கூட நான் இதுவரை சந்தித்ததில்லை" எனப் புதிய மண்டபத்திறப்பு விழா ஒன்றில் பேசினார். இது குறித்த கண்டனைக் கணைகளை விடுக்கப் பேராசிரியர் தவறவில்லை. பின்வரும் பேராசிரியரின் உரையே அவரின் தமிழ்க்காப்பு உணர்வை வெளிப்படுத்தும்.

> "பந்தயம் பார்க்கவும் பதக்கங்கள் வழங்கவும் கட்டடத் திறப்பு விழாக்களில் கலந்து கொள்வதற்கும் அடிப்படைக் கல் நாட்டவும் தவறாது சென்றுவருவதுதான் ஆளுநர் அவர்களுக்குரிய கடமையா? பட்டத்துக்கும் பதவிக்கும் ஆசைப்பட்டு, உல்லாச புரியிலே உலவும் நேரத்தில் தமிழ்நாட்டுப் பெண்களின் தன்மான உணர்ச்சியை மறந்தா அவர் இவ்வாறு உளறினார்? கற்பை உயிரென ஓம்பும் வேறெந்த நாட்டிலுமில்லாத நம் தமிழ்ப் பண்பாட்டை அவர் அறிந்திலர் போலும். வேற்று ஆடவர் வெறித்துப் பார்ப்பதை வடநாட்டுப் பெண்கள் சிலர் ஒரு வேளை விரும்பி வரவேற்கலாம்,... ஆரியப் பரம்பரையில் வளர்ந்து, ஆரியச் சூழலிலேயே பழகிப் பழுத்துப் போயிருக்கும் திரு சிரீ பிரகாசா அவர்களது குண இயல்புகளைத்தானே பறைசாற்றுவார்? அதற்காக அவர் இந்திய நாட்டு எல்லாப் பெண்களையுமே ஏன் இழிவு படுத்த வேண்டும்?
>
> ... ... ...
>
> ஆராயும் திறனற்ற அவரது இந்த மொழிகளை அங்கிருந்த அத்தனை பேரும் விகடமென்று கருதினர் போலும். அவ்வளவு பெரிய கூட்டத்தில் அவர் கூற்றை மறுத்து உண்மையை விளக்கிப் பெண்ணினத்தின் பெருமையை நிலைநாட்ட, ஒரு தமிழன், தமிழச்சிகூட அங்கில்லை. எத்தனை வருந்தத்தக்க செய்தி இது?

அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்ற உயரிய குணங்களை உயிர்நாடியாகக் கொண்டிருந்த தமிழ் உதரத்தில் ஊறி உருவான பெண்களும், அவர் இங்ஙனம் உளறியதைக் கேட்டுச் சிரித்தனராம். ஆம், அதனைக் கேட்டு நாமும் சிரிக்கின்றோம். பண்டைத்தமிழ் மரபுக்கே தலைக்குனிவை ஏற்படுத்தி விட்ட அவர்களது தகாத செயலைக் கண்டு வயிறெறிந்துதான் சிரிக்கிறோம்.

இனிமேலாவது, விகடம் என்றெண்ணி அறிவற்ற இந்த வீண் மொழிகளைத் திரு சிரீபிரகாசா விளம்பாமலிருக்கட்டும். வயது முதிர்ச்சியின் காரணமாக அறிவு நிலை தடுமாறி அவர் இப்படி உளறினாலும் அதனைக் கேட்டுத் தம் தன்மானத்தையும் மறந்து, அங்குக் கூடியிருப்பவர்கள் இருக்க வேண்டா. அதற்கு மாறாக ஆரியப் பண்பாட்டிலே ஊறித்திளைத்து, அவர்கள் குண இயல்புகளைக் கூறும் திரு சிரீ பிரகாசாவுக்கு மற்ற பெண்களின் உயர்ந்த பண்பாட்டுக்களை எடுத்தோதி அவரைத்திருத்துவதுதான் அவர்கள் கடமை. உங்கள் தீர்ப்பென்ன?" (திராவிடக் கூட்டரசு *31.10.52 மலர் 1 இதழ் 7)*

பெண்மையை இழிவுபடுத்தும் வகையிலும் தமிழ்ப்பண்பாட்டிற்கு எதிராகவும் பழித்துக் கூறியவர் ஆளுநரே ஆக இருந்தாலும் தம் எதிர்ப்பைக்காட்ட அஞ்சவில்லை பேராசிரியர். நெற்றிக்கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என்பதுபோல் நாட்டின் உயர் நிலைத் தலைமை நிலையில் உள்ளவராக இருப்பினும் குற்றத்தை இடித்து உரைக்கத் தவறவில்லை அவர். தீங்குரை கேட்பின் பொங்கி எழ வேண்டும் என மக்களுக்கும் அறிவுறுத்த மறக்க வில்லை அவர். அதனால்தானே பேராசிரியர் இலக்குவனார், இருபதாம் நூற்றாண்டுநக்கீரர் என்றும் இரண்டாம்நக்கீரர் என்றும் நாட்டு மக்களால் போற்றப்படுகிறார். இதனால் அவர் பண்பாட்டுப் போராளியாகவும் திகழ்கிறார்.

சிலர் தமக்கு வேண்டாதவர் கூறிய கருத்தெனில் கடுமையாக எதிர்ப்பர். தம் அன்பிற்குரியவர் என்ன சொன்னாலும் வாய்மூடி அமைதி காப்பர். பேராசிரியர் அத்தகையவர் அல்லர். தமிழ்ப் பகைக் கருத்தை யார் சொன்னாலும், யார், எவர் என நோக்காது கடிந்துரைப்பவர். இதற்கு எடுத்துக்காட்டாகப் பலவற்றைக் கூறலாம். இரண்டை மட்டும் இந்த இடத்தில் காண்பது சிறப்பாக இருக்கும். ஒரு முறை பேரறிஞர் அண்ணா அவர்கள், அடுத்த நூற்றாண்டில் இந்தி வந்து விட்டுப் போகட்டும். இப்பொழுது வேண்டா என்றார். உடனே பேராசிரியர் அவர்கள், "வரும் தலைமுறையினருக்குரிய மொழி உரிமையை முடிவெடுக்கும் உரிமையை யார் இவருக்குத் தந்தது. இன்று நாளை என்று இல்லாமல் என்றுமே இந்தியோ வேறு பிற மொழியோ புகுத்தப்படக்கூடாது" என்றார். உடனே பேரறிஞர் அண்ணா அவர்கள் தமக்கும் இந்தக் கருத்து உடன்பாடுதான்

என்றும் ஒரு பேச்சிற்காகச் சொல்வது என்பார்களே அந்த அளவில் இந்த நூற்றாண்டில் வேண்டா எனக் கூறியதாகவும் விளக்கினார். இந்த நடுநிலைப்போக்குதான் அவருக்குச் சிறப்பைத் தந்தது.

இதுபோல் தந்தை பெரியார் அவர்கள் தொடர்ந்து பேராயக்கட்சியை(காங்கிரசை) ஆதரித்துப் பேசியது கண்டு அவருக்கு எதிராகவும் வெகுண்டெழுந்துள்ளார்.

> பெரியார் அவர்கள், தேர்தலுக்குப் பிறகு தமிழ்நாட்டுப் பிரிவினையை வேண்டப் போவதாக அறிவித்துள்ளார்கள். ஆனால், தேர்தலில் காங்கிரசுக்கட்சி வெற்றி பெற உழைத்துவிட்டுப் பின்னர்ப் பிரிவினை கேட்கப் போகிறேன் என்பது அறிவுக்குப் பொருந்துவதாக இல்லை. மொழிவழி மாநிலங்கள் உரிமையுடன் வாழ வேண்டுமானால் காங்கிரசுக்கட்சி மறையவேண்டும். காங்கிரசுக்கட்சியால்தான் மாநிலங்கள் உரிமையற்றுக் கிடக்கின்றன. ஒரே இந்தியா என்ற கொள்கையை உறுதியாகப் பற்றி நிற்கும் காங்கிரசை அகற்றினாலன்றிப் பிரிவினைக் கொள்கை வெற்றி பெறாது. ஆகவே, பெரியார் அவர்கள் காங்கிரசுக் கட்சிக்கு உதவுவதை விடுத்துத் தம் உயிர்க் கொள்கைக்கு உறுதுணையாய் நிற்போரை வெற்றி பெறச் செய்ய வேண்டுமென வேண்டுகிறேன்.
>
> பிரிவினை என்பது நாட்டைத் துண்டுபோடுவது அன்று. உரிமை ஆட்சியை ஒவ்வொரு மாநிலத்துக்கும் அளித்துப் பின்னர்க் கூடிவாழும் சூழ்நிலையை உருவாக்குதலே.
>
> *(குறள்நெறி 15.5.66)*

பேராசிரியர் நடத்திய இதழின் தலைப்பில் (திராவிடக்) கூட்டரசு இருப்பினும் முன்னர்த் தெரிவித்ததுபோல் தனி உரிமை உடைய மொழிவழி நாடுகள் அமைய வேண்டும் என்றும் அவை விருப்பத்திற்கேற்ப கூட்டரசு அமைத்துக் கொள்ள வேண்டும் என்றும் பேராசிரியர் வலியுறுத்தி வந்தார். இந்தியத்திற்கு மட்டுமல்லாமல் தனித் திராவிடத்திற்கும் எதிராகவே மொழிவழித் தேசியத்தை அன்றைய நிலையில் வேறு யாரும் வலியுறுத்தவில்லை. பேராசிரியர் தொலைநோக்கு உணர்வுடன் கூறுவது போல் இந்தியக் கண்டம் மொழி வழி அமையும் நாடுகளின் கூட்டரசாகத் திகழ்ந்தால் அக்கூட்டரசு வலிவும் பொலிவுமாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

திருவெறும்பூரில் உள்ள முக்குலத்தோர் பள்ளியை நடத்த பணியாட்சி அறிந்த கல்வியாளர் தேவை என்பதால் பேராசிரியரை அழைக்க அவரும் அங்கே சென்று முதல்வர் பொறுப்பை ஏற்றார் (30.11.52-30.09.53). கல்லூரியில் இருந்து பள்ளிக்கு வந்து விட்டோமே என எண்ணாமல் கல்விக்கூடம் யாவுமே கோயில் என எண்ணிப் பணியாற்றினார்.

திருவெறும்பூர் முக்குலத்தோர் பள்ளியின் முதல்வராகப் பேராசிரியர்

பணியாற்றிய பொழுது அங்கே எழுத்தராக இருந்த பல்குரல் மன்னன் திரு முருகு பாண்டியன் பேராசிரியர் பற்றிய நினைவைப் பின்வருமாறு போற்றுகிறார்:

> "இப்பள்ளி நிதிநிலையில் மிகவும் இடர்ப்பட்ட நிலையில் இருந்த பொழுதுதான் பள்ளிச் செம்மைக்கெனப் பேராசிரியரை முதல்வராக ஆக்கினர். அவர் வந்தபின்புதான் பாண்டியராசன் என்னும் பெயரை மாற்றி முருகுபாண்டியன் எனப் பெயர் சூட்டி, நான் தமிழ் படிக்கவும் வழி செய்து தந்தார். பள்ளியில் சம்பளத்திற்கான பொருளுதவி வராத சூழலில் பேராசிரியர் நகைகளை அடகு வைத்துப் பள்ளிச் செலவிற்கென அளித்து விடுவார். என்றேனும் ஒரு நாள் அவருக்குப் பணமுடை மிகுதியாக இருந்தால் 'என்னய்யா பள்ளிக்கு எதுவும் வருவாய் வந்துள்ளதா' என்பார். அவ்வாறு ஏதேனும் வருவாய் வந்திருக்கும் பொழுது நான் அதில் இருந்து அவர் தந்த பணத்தில் ஒரு பகுதியைத் திருப்பிக் கொடுப்பேன். இதை மறவாமல் குறித்துக் கணக்கு வைத்துக் கொள் என்பார். ஆனால், ஒரு நாளும் அவர் பள்ளிக்கு நிதி உதவிய பொழுது அதைக் கணக்கில் வைத்துக் கொள் என்று சொன்னதில்லை.
>
> அவர் இப்பள்ளியை விட்டு நீங்கி ஐந்தாண்டுகள் ஆன பின்புதான் அவருக்கு வர வேண்டிய சம்பளத் தொகை வந்தது. அதை மட்டும் தவறாமல் அனுப்பி வைத்தோம். அப்பொழுது கூட அவர், 'நான் பள்ளிக்குத் தந்த பணம் வரவில்லையா? எப்பொழுது வரும்?' என்றெல்லாம் கேட்டதில்லை."

இவ்வாறு நினைவுகூர்ந்து வியக்கும் திரு முருகுபாண்டியன் பேராசிரியர் பற்றிய மற்றொரு செய்தியையும் உணர்ச்சியுடன் தெரிவிக்கின்றார்.

> "பேராசிரியர் இலங்கைத் தமிழர் நலன் குறித்து அப்பொழுதே பேசினார். வரைபடம் ஒன்றில் இலங்கையில் தமிழர்பகுதியைத் தனியாகக் காட்டிப் புத்தகம் ஒன்றில் வெளியிட்டார். திருச்சி வானொலி உரை ஒன்றில், இலங்கையில் உள்ள தமிழர்கள் தன்னுரிமையுடன் வாழ்ந்தால்தான் அவர்கள் அங்கே உரிமையுடன் நிலைத்து வாழ முடியும் என்றார். அக்காலக்கட்டத்தில் இலங்கைக்குச் செல்ல அழைப்பு வந்தபொழுது இவர் வந்தால் இலங்கை இரண்டாகும் என்று காரணம் சொல்லி இலங்கை நுழைவுரிமையை மறுத்து விட்டது"

என்றார். ஓர் உண்மையான தலைமைப் போராளியால்தானே விடுதலை வேட்கையைத் தொலைநோக்குக் கண்ணோட்டத்துடன் கணிக்க இயலும். இந்திய அரசு தன் நாட்டு நலனுக்காக இலங்கைத் தமிழர்களைப் பலி கொடுக்கும் என்று எழுதியும் பேசியும் வந்தவரல்லவா? அவரது முன்

விழிப்புணர்வை நாம் சரியாகப் பயன்படுத்தாததால்தானே ஈழத்தில் இன்றைய இனப்படுகொலைகள் பெருமளவு பெருகி நம் ஆருயிர் தமிழர்களை இழந்து வருகிறோம்.

பணி இல்லாத பொழுதும் மனச்சான்றுக்கு ஏற்ப நேர்மையாய் வாழ்ந்த பேராசிரியரின் சால்பிற்குச் சான்றாகவும் ஒரு நிகழ்ச்சியைத் திரு முருகு பாண்டியன் தெரிவித்தார்.

> ஐந்தாம் படிவம்(பத்தாம் வகுப்பு)வரைதான் பள்ளியில் நடத்தப்பட்டது. பேராசிரியர் வந்த பின்புதான் பள்ளி இறுதி வகுப்பு எனப்படும் (ஆறாம்படிவ)பதினொன்றாம் வகுப்பிற்கான இசைவைப் பெற்றார். இதுவும் மக்கள் நலனையே நாடும் அவரது உயரிய பண்பைக் காட்டும். அப்பொழுது பள்ளிக் கல்வி இயக்குநராக இருந்த தம் நண்பர் திரு நெ.து.சுந்தரவடிவேலு அவர்களைச் சந்தித்துப் பள்ளிக்கு ஆறாம் படிவத்தின் (பதினொன்றாம் வகுப்பின்) தேவையை வலியுறுத்தினார். பேராசிரியர் கல்லூரியில் பணியாற்றுவதற்குரிய முழுத் தகுதி உடையவராக இருப்பினும் பட்டதாரி ஆசிரியர் பயிற்சி பெற்றவர்தான் தலைமை ஆசிரியராக முடியும். பதினொன்றாம் வகுப்பிற்கு இசைவு தந்தால் வேறு ஒருவரைத் தலைமை ஆசிரியராக ஆக்க வேண்டும். பேராசிரியர் இயக்குநர் என்ற முறையில் செயல்பட வேண்டும் என்று இயக்குநர் தெரிவித்தார். விதிக்குக் குறுக்கே தான் நிற்கவில்லை என்றும் பகுதி மக்களின் வளர்ச்சிக்காகக் கட்டாயமாகப் பதினொன்றாம் வகுப்பு தேவை என்றும் சொல்லி இசைவாணை பெற்று வந்தார். வந்த பின்பு பள்ளியை நடத்துவோருக்குப் பெரும் அதிர்ச்சி. பதினென்றாம் வகுப்பு இப்போதைக்குத் தேவையில்லை என்றும் பேராசிரியரே தொடர வேண்டும் என்றும் வலியுறுத்தினர். பேராசிரியரோ, இச்செயல் மாணவர் நலனுக்கு எதிரானது எனக் கூறி இதனை ஏற்கவில்லை. பள்ளிக்கல்வி இயக்குநர் கூறியவாறு பள்ளி இயக்குநராகவாவது தொடர வேண்டும் என வேண்டினர். "பள்ளியின் பொருளியல் நிலைக்கு அது வீண் செலவாகும். எனவே, பள்ளி நலனுக்கு எதிராக இச்செயல் அமையும்" என்று பேராசிரியர் மறுத்து விட்டார். தனக்கு வேண்டியவாறு விதிகளை உருவாக்கிப் பதவிகளை அடைவோர் நடுவே நடைமுறை விதிகளுக்கு இணங்கப் பதவியைத் துறந்த பேராசிரியர்போல் ஒரு மாமணியை எங்கும் பார்க்க இயலாது.

திருவெறும்பூரில் பணியைத் துறந்த பின் முன்பு விருதுநகரில் தம்மிடம் பயின்ற மாணவர் அழைப்பிற்கிணங்கப் புதுக்கோட்டை சென்றார். அங்குத் தனிப்பயிற்சிக் கல்லூரி எதுவும் இல்லை யாதலின் பேராசிரியர் அதனைத்

தொடங்க வேண்டும் என்றே அவர் அழைத்திருந்தார். அப்பணியுடன் வழக்கமான தமிழ்த் தொண்டுகளை ஆற்றவும் பேராசிரியர் தவறவில்லை.

புரவலர் அண்ணல் சுப்பிரமணியனார் அவர்களைத் தலைவராகவும் பேராசிரியரைச் செயலராகவும் கொண்ட திருவள்ளுவர் கழகம் அமைக்கப்பெற்றது. அண்ணலாரால் வள்ளுவர் பதிப்பகம் நிறுவப்பட்டுப் பேராசிரியரின் திருக்குறள் எளிய பொழிப்புரை, எல்லோரும் இந்நாட்டரசர் ஆகிய நூல்கள் வெளியிடப்பட்டன. பின்னர், நூல் வெளியீட்டுப்பணி தொடர்ந்து, தொல்காப்பிய ஆராய்ச்சி, பழந்தமிழ், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் முதலான நூல்களும் வெளியிடப்பட்டன.

திருக்குறள் கழகம் மூலம் பேராசிரியர் திருக்குறள் சொற்பொழிவுகள் நடத்தியதற்குப் பெரிதும் வரவேற்பு இருந்தது. இது குறித்துப் பாராட்டிய தந்தை பெரியார், விடுதலையில் பின்வருமாறு செய்தி வெளியிட்டிருந்தார்.

### புதுக்கோட்டைத் திருக்குறள் கழகம்

புதுக்கோட்டை - ஏப்பிரல் 4

*புதுக்கோட்டையில் திருக்குறள் கழகம் அமைக்கப்பட்டு மூன்று மாதங்களாக மக்கட்கு நல்ல முறையில் சிறந்ததோர் பணியாற்றி வருகின்றது. பேராசிரியர் சி. இலக்குவனார் எம்.ஏ., எம்.ஓ.எல்., திருக்குறள் கழகத்தின் செயலாளராக இருந்து பணியாற்றி வருகின்றார். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் காலையில் 8-30 மணிக்குத் தொடங்கி முறையாகக் குறள்வகுப்பு நடைபெற்றுவருகின்றது. நூற்றுக்கணக்கான மாணவர்களும் பெரியோர்களும் வந்து கேட்கின்றார்கள், மாலையில் 6-30 மணிக்குத் தொடங்கிச் சொற்பொழிவு நடைபெற்று வருகின்றது. ஒலிபெருக்கி அமைக்கப்பட்டுள்ளதால் ஆயிரக்கணக்கான மக்கள் ஆங்காங்கு இருந்து சொற்பொழிவைக் கேட்கின்றனர். குறளிடத்தில் மக்களுக்கு ஆர்வம் உண்டாகி ஞாயிற்றுக்கிழமை வருவதை எதிர்பார்த்திருக்கின்றனர். இதுவரை பத்துச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டுள்ளன.*

*1. திருக்குறள் நெறி 2. திருக்குறளில் நாடு 3. அரசு*

*4. கண்கள் (கல்வி) 5. அமைச்சு 6. நண்பர் 7. பகைவர்*

*8. குடிமைப்பயிற்சி 9. காதல் வாழ்வு 10. உண்மைத்தொண்டர்*

*இவ்வாறு தொடர்ச்சியாக ஞாயிறு தவறாமல் ஒலிபெருக்கியுடன் சொற்பொழிவுகள் ஆற்றியமை முற்றிலும் புதுமையாகும். இராமாயணம். பாரதம் போன்ற புராண நூல்களைத்தான் இதுவரை தொடர்ச்சியாகக் காலட்சேபம் செய்துவந்துள்ளமை அறிவோம்.*

*ஒரு நீதிநூலைத் தொடர்ச்சியாகச் சொல்லுவதும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து கேட்பதும் என்றால் எங்கும் காணாத புதுமை என்றுதான் கூறுதல் வேண்டும்.*

*14,15,16ஆம் நூற்றாண்டுகளில் மேலைநாடுகளில் கலைக்கழகங்கள் அமைத்து மக்களிடையே சொற்பொழிவுகள் ஆற்றிக் கலையறிவைப் பரப்பியதுபோல புதுக்கோட்டையில் கலை, இலக்கிய அறிவு பரப்பப்பட்டு வருகின்றது. பொதுமக்கள் குறளின்பால் ஆர்வம் கொண்டு குறள் கழகத்தில் உறுப்பினராகச் சேர்ந்துவருகின்றனர். இதற்கு ஆதரவு கொடுத்துவருகின்றவர் திருவாளர் பி.ஏ. சுப்பிரமணிய பிள்ளை ஆவார். கல்விவளர்ச்சி கழகத்தின் வழியாக தாழ்த்தப்பட்டோர்க்கும் தொண்டு செய்து வருகின்றார்.*

வள்ளுவர் கழகப் பணிகள் பற்றிய இவ்விதழ்ச்சான்று,பேராசிரியர் தாம் பணியாற்றிய நகரங்களில் எல்லாம் இலக்கியச் சொற்பொழிவுகளும் வகுப்புகளும் சிறப்பாக நடத்தியிருந்தமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இவ்வாறுதான் பேராசிரியர் இலக்கியங்களை எளிய முறையில் விளக்கி அவை மக்கள் இலக்கியங்கள் என்பதை உணர்த்தி இலக்கிய விழிப்புணர்வை ஏற்படுத்தி உள்ளார். மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்துவதும் போராளியின் கடமை அல்லவா?

பேராசிரியருக்கு உறுதுணையாக இருந்த அண்ணலார் பு.அ.சுப்பிரமணியன் அவர்கள் பேராசிரியர் குறித்துக் கூறுவன (வீ.முத்துச்சாமி : இலக்குவனார் ஆய்வுப்பண்பு):

"பேராசிரியர் இலக்குவனார் கூர்த்த அறிவு படைத்தவர்; முறையாக நூல்களைக் கற்றவர்; சிறந்த ஆராய்ச்சியாளர்; சிந்தனையாளர்; கருத்துக் களஞ்சியம் என்றால் மிகையாகாது.

தமிழே அவர்மூச்சு ; தமிழுக்காக எத்தகைய தியாகமும் அவர் செய்யத் தயங்காதவர். சிறந்த தமிழ்க்காவலர்.

அவர் குறிக்கோள் கொள்கை எல்லாம் தமிழ் வளர்ச்சியே.

ஆயுள் முழுவதுமே சிறப்பாகத் தொண்டாற்றியவர்."

பேராசிரியர் அவர்கள், தந்தை (ஈ.வெ.இராமசாமிப்) பெரியார் அவர்களுடனும் இணைந்து சொற்பொழிவுகள் மேற்கொண்டார். தந்தை பெரியார் அவர்கள், பல ஊர்களில் பேராசிரியரைத் தனி ஊர்தியில் ஊர்வலமாக அழைத்து வரச் செய்து சிறப்பித்தார்; எத்தகைய இடர் வந்தாலும் எதிர்கொண்டு தமிழுக்காகப் போராடும் ஒரே தலைவர் எனக் குறிப்பிட்டுப் பேராசிரியருக்குத் 'தமிழர் தளபதி' என்னும் பட்டத்தையும் அளித்தார். தந்தை பெரியார் அவர்களின் வேண்டுதலால் அவர் உறவினர் ஈரோட்டில் நடத்தி வந்த சிக்கையா நாயக்கர் மாசனக் கல்லூரியில்

தமிழ்த்துறைத் தலைவராகச் சூலை, 1954 இல் பேராசிரியர் பணியில் சேர்ந்தார். ஆனால், முதல்வரின் காழ்ப்புணர்ச்சியும் தமிழ்ப்பகை உணர்வும் வல்லாண்மையும் அங்கே ஈராண்டுகளுக்கு மேல் பணி தொடர இடம் தரவில்லை. தமிழ்ப் பேராசிரியர் ஆங்கிலப் பேராசிரியர் போல் உடை உடுத்துவதா? ஆங்கிலப் புலமை கொண்டிருப்பதா? பூப்பந்தாட்டம் முதலான விளையாட்டுகளை விளையாடுவதா? பொறிஉருளை (மோட்டார் பைக்)-ஐப் பயன்படுத்துவதா? (தமிழ்ப் பேராசிரியர்களில் முதன் முதலில் பொறி உருளை ஓட்டியதைக்கூடப் புரட்சியாக அக்காலத்தில் கருதினார்கள்) என்றெல்லாம் தன் படிப்பிற்கும் பதவிக்கும் பொருந்தாத எண்ணம் கொண்டிருந்த முதல்வர் பிறரை அடக்கி வைத்ததுபோல் பேராசிரியரையும் அடக்க முயன்றார். விடுமுறை நாள்களில் சொற்பொழிவு ஆற்றச் செல்லக் கூடாது என்றார். வகுப்புகளில் தமிழின் தொன்மை, நுண்மை, பெருமை, சீர்மை பற்றியெல்லாம் பேசக்கூடாது; தமிழ்ப்பற்று ஏற்படும் வண்ணம் பாடம் நடத்தக் கூடாது என்றெல்லாம் வலியுறுத்தினார். ஆசிரியர்கள் தனியாகத்தான் போக வேண்டும்; இருவராகச் செல்வதும் தவறு என்றும் கட்டுப்பாடு விதித்தார். தந்தை பெரியார் இவற்றை யெல்லாம் அறிந்து வருந்திக் கண்ணீர் விட்டுக் கல்லூரியின் தொடர்பை நீக்கிக் கொண்டார். பேராசிரியரின் பெருமையை உணர்ந்து ஆட்சிக்குழுவினர் அவருக்குத் துணை முதல்வர் பொறுப்பு கொடுக்க வலியுறுத்திய பொழுது முதல்வர் மறுத்துத், தான் விடுப்பில் செல்லும் பொழுது மட்டும் முதல்வர் பொறுப்பாகச் செயல்படட்டும் என்றார். பேராசிரியர் ஓய்வு நேரத்தில் மாலைப்பொழுதில் தமிழ்ப் பேராசிரியர் அத்தியப்பன், கணக்குப்பேராசிரியர் கருப்பண்ணன் ஆகியோருடன் பூப்பந்து விளையாடியதால் மூவரும் தனக்கு எதிராகச் சதித்திட்டம் தீட்டுவதாகக் கூறி முதல்வர் இம்மூவருக்கும் பணிநீக்க ஆணை வழங்கச் செய்தார்.

நாடு விடுதலை அடைந்ததாகக் கூறுகிறோமே தவிரச் செல்வாக்குள்ள தனி மனிதர் எண்ணினால் யாருடைய அடிப்படை உரிமைகளையும் பறிக்க முடிகின்ற துயரம் இன்றும் இருக்கத்தான் செய்கின்றது. இதனால் அன்று பேராசிரியர் பணியிழந்தார். நாட்டு மொழியை அம்மொழி ஆசிரியர் மொழிமாணாக்கருக்கு அம்மொழி மீது பற்று ஏற்படும் வகையில் கற்பிப்பதும் குற்றம் என்று சொல்லும் அவலம் தமிழ்நாட்டில் மட்டுமே உள்ளது. ஒரு வேளை அவர் பாடம் நடத்தாமல் வாசித்து விட்டு விட்டு அவரவர்களே படித்துப் புரிந்து கொள்ளுங்கள் என்று சொல்லியிருந்தால் பணி இழப்பு இருந்திருக்காது.

“தொண்டுசெய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித்தெ ழுந்தே!
புதுநாளை உண்டாக்கித் தமிழ்காப்பாய்

புத்துணர்வைக் கொணர்வாய் இங்கே
அதிர்ந்தெழுக! தமிழுக்குத் துறைதோறும்
துறைதோறும் அழகு காப்பாய்!
இதுதான்நீ செயத்தக்க எப்பணிக்கும்
முதற்பணியாம் எழுக நன்றே" (பாவேந்தர் பாரதிதாசன்)

என்னும்உணர்வினை ஊட்டுபவராக மட்டும் அல்லாமல் தாமும் முன் எடுத்துக்காட்டாக விளங்குவதால் பேராசிரியரால் எப்படி அடங்கிப் போக முடியும்? தமிழ்ப்பணி ஆற்றாமல் அமைதி காக்க முடியும்? அவரது கல்விப்பணிக்கும் தமிழ்ப்பணிக்கும் கிடைத்த பரிசு மீண்டும் பணிநீக்கம்.

தமிழ்நாட்டில் பிற மொழியினர் முதன்மையும் செல்வாக்கும் பெற்று உள்ளமையால் தமிழ் உணர்வு தங்களை வீழச் செய்து விடும் என்ற உணர்வால் அவர்கள், தமிழ் உணர்வை மழுங்கச் செய்ய முயன்று வருகின்றனர். எனவே, தாய்மொழியாம் தமிழைத் தாய்நாடாம் தமிழ்நாட்டில் உண்மையான உயர்வை உணர்த்தும் வகையில் கற்பிப்பதும் பெருங்குற்றமாகக் கருதப்படுகிறது. போற்றி வணங்கிப் பாராட்டப்பட வேண்டியவருக்குப் பரிசுகளாகப் பணிநீக்கங்களே தரப்பட்டுள்ளன. உலகில் எங்கும் இல்லாக் கொடுமை இதுவன்றோ? தன்னலம் கருதாப் பேராசிரியரின் துணிவான முயற்சிகளால் அந்த நிலை ஓரளவு நீங்கி உள்ளது. ஆனால், இந்நிலை முழுமையும் நீங்க வேண்டும். தமிழ்நாட்டில் தமிழுக்கும் தமிழர்க்கும் தலைமை இருக்கும் நாள் விரைவில் வர வேண்டும். அத்தகைய சூழலை நாம் உருவாக்குவதே பேராசிரியருக்கு நாம் செய்யும் நன்றிக் கடனாகும்.

இந்தச் சூழலில் பேராசிரியருக்கு நாகர்கோயிலில் உள்ள தென்திருவிதாங்கூர் இந்துக்கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவர் பணி கிடைத்ததால் அங்கே சென்று தம் தொண்டுகளைத் தொடர்ந்தார். முதலில் தமிழ் முதுகலை தொடங்குவதற்குரிய ஏற்பிசைவைப் பெற்றுத் தொடங்கச் செய்தார். முதல்வராக இருந்த முனைவர் பா.நடராசன் மத்திய அரசின் பொருளியல் வல்லுநராகச் சென்றமையால் முதல்வர் பணியிடம் ஒழிவிடமாயிற்று. மூத்த பேராசிரியரான பேராசிரியர் இலக்குவனாருக்கு வரவேண்டிய முதல்வர் பதவியை வேறு சாதியினர் என்பதால் வழங்க மனமின்றி முதல்வர் பொறுப்பு வழங்கினர். வழக்கம்போல் விழாக்களும் தமிழ்எழுச்சி உரைகளும் பொதுமக்களுக்கான இலக்கிய விளக்கங்களும் இங்கும் தொடர்ந்தன. திருவள்ளுவர் விழாவை மாபெரும் ஊர்வலத்துடன், யானையின்மீது திருவள்ளுவர் படத்தை ஏற்றி,மக்களிடையே நடத்தினார். கல்லூரியில் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் கொணர்ந்தார். ஆனால் கல்லூரி ஆட்சிக் குழுவினருக்கு மன நிறைவு ஏற்படவில்லை. தாங்கள் இழுத்த இழுப்பிற்கு வருவார் என எதிர்பார்த்தால் இவரோ நேர்மைப் பாதையில்தான் செல்வேன் என்கி

றாரே. மாணவர்களுக்குத்தர வேண்டிய உதவித் தொகைகளை ஆண்டு இறுதியில் தந்தால் போதுமானது; அதுவரைக்கும் அதனை வேறு வகையாகப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது ஆட்சிக்குழுவினர் கூற்று. யாரும் செய்யாததைச் செய்யச் சொல்லவில்லை என்பது அவர்கள் வாதம். பேராசிரியரோ பல்வேறு இடர்ப்பாடுகளுடனும் வறுமைச் சூழலிலும் பயிலும் மாணவர்களுக்கு அவர்களுக்கு எனத் தரும் அரசு நிதியை விரைவில் வாங்கி உடனுக்குடன் தருவதே முறை என அவ்வாறே செய்து வந்தார். முறைகேட்டிற்கு ஒத்துழைக்காத முதல்வர் நமக்கு எதற்கு என எண்ணிய ஆட்சிக்குழுவினர் வேறொரு தமிழ்ப்பேராசிரியரை வரவழைத்து முதல்வராக்க எண்ணினர். துணைவேந்தரோ தமிழ்த்துறைப் பேராசிரியராகப் பேராசிரியர் சி.இலக்குவனார் இருக்கும் பொழுது இன்னொரு பேராசிரியர் எதற்கு? அவரே முதல்வராக இருக்கட்டும் என்றார். ஆனால் முறைகேட்டிற்கு ஒத்துழைக்காதவரை நீக்குவதில் பிடிவாதமாக இருந்த ஆட்சிக் குழுவினர் பதின்நிலைப்பள்ளியின் முதல்வர் ஒருவரை இங்கே முதல்வராகக் கொணர்ந்தனர்.

இதற்கிடையில் நேர்மைக்குக் குறுக்கே இருக்கும் இக்கல்லூரியை விட்டு நீங்கப் பேராசிரியரும் முடிவெடுத்தார். அப்போதைய தமிழக முதல்வர் பெருந்தலைவர் காமராசர், பேராசிரியர் இலக்குவனார் தலைநகரில் பணியாற்ற வேண்டியவர் என்னும் கருத்தினைப் பேராசிரியரிடமே வெளிப்படுத்தி உள்ளார்; ஆதலின் "சென்னைக்கு வாருங்கள் சீரிய பணியில் அமர்த்து கிறேன்" என்று முன்பு கூறியிருந்தார். எனவே, சென்னை சென்று முதல்வரைச் சந்தித்தார். எந்தப்பணியில் அமர்த்த வாய்ப்புகள் உள்ளன எனப் பெருந்தலைவர் கேட்டதற்குப் பேராசிரியர், மாநிலக்கல்லூரியின் தலைமைப் பேராசிரியர் பதவியும் தமிழ்வளர்ச்சித்துறையில் இரு பதவிகளும் ஆளின்றி இருப்பதாகத் தெரிவித்தார். ஆனால், செயலகத் துறையினர் பேராசிரியரின் புலமைக்கும் நேர்மைக்கும் ஏற்ற பணியைத் தேடுவதாகத் தட்டிக் கழித்ததால் முதல்வர் மீண்டும் வந்து தன்னைச் சந்திக்குமாறு கூறினார். அவ்வாறு வாரம் ஒரு முறை சந்தித்து ஒரு திங்கள் ஆன பின்பும் பயனில்லை. எனவே, இனியும் காத்திருந்து மீண்டும் மீண்டும் சந்திப்பதில் பேராசிரியருக்கு விருப்பம் இல்லை. இது குறித்துப் பேராசிரியர், "காமராசர் கூறிவிட்டால் செய்யாமல் இருக்க மாட்டார். அவருடன் பலநாள் சுற்ற வேண்டும். அவருடனேயே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் வெற்றி கிட்டும் என்றனர். அவ்விதம் இருக்க இயலாது என்று ஊர் திரும்பி விட்டேன்" என்று தம் வாழ்க்கையேட்டில் குறிப்பிட்டுள்ளார்.

சில நாட்கள் கழித்துக் கூட்டம் ஒன்றிற்காகப் புதுச்சேரி வந்த பேராசிரியர் சென்னை சென்றார். நேர்மைப் பாதையில் பணிநீக்கப் படுகுழிகள் அவரைத் துன்பத்தில் தள்ளியும் மன உறுதியுடனும் எதிர்காலக் கவலையுடனும் பணிக்காக அலைந்துள்ளார். இது குறித்துப் பேராசிரியர்

பின் வருமாறு தெரிவிக்கின்றார்.

*"சென்னையிலேயே தங்கி என்ன பணி புரியலாம் எனத் திட்டமிட்டுப் பல்வேறு துறைகள் பற்றி ஆய்ந்தேன். புத்தகங்கள் எழுதிக் கொடுத்துப் பொருள் ஈட்டலாம் என்று கருதிப் பதிப்பகங்கள்தோறும் சென்றேன். பயிற்சிக் கல்லூரிகளில் பணிபுரியலாம் என்று பயிற்சிக் கல்லூரிகளை நாடினேன். செய்தி இதழ்களில் பணி தேடலாம் என்று செய்தி இதழ் நடத்துவோரைக் கண்டேன். காலையில் சிற்றுண்டி அருந்தி விட்டுப் பகலெல்லாம் பல இடங்கட்குச் சென்று அலைவதையே தொழிலாகக் கொண்டேன். எதிர்காலம் இருள் சூழ்ந்தது போல் தோன்றினும் யான் உள்ளம் தளரவில்லை. நேர்மையாக ஒழுகுபவர்க்கு இன்னல்தானே செல்வம் என்று அறிந்திருந்தேன்.*

*இன்பம் விழையான் இடும்பைஇயல்பு என்பான்*
*துன்பம் உறுதல் இலன்*

*என்னும் வள்ளுவர் வாய்மொழி நினைவுக்கு வரும்.*

*தனிமுறையில் நடத்தும் கல்லூரியாளர்கள் அறநெறிகோடி ஆசிரியர்களை வேலைவிட்டு நீக்குவதைத் தடுத்து நிறுத்தும் வழி முறை உண்டாகவில்லை. அறம்கூறவையம் சென்று முறையிடுவது என்றால் பெரும் பொருள் செலவழிக்க வேண்டிய நிலை ஏற்படுமே என்ற அச்சத்தால் பெரும்பாலோர் அங்கும் செல்வதில்லை. தொடக்கக்கல்விக் கூட ஆசிரியர்க்கும் உயர்நிலைக் கல்விக்கூட ஆசிரியர்க்கும் ஓரளவு காப்பு உண்டெனிலும் கல்லூரி ஆசிரியர்கட்கு எவ்விதக்காப்பும் இல்லை. எல்லாக் கல்வி நிலையங்களையும் அரசு ஏற்று நடத்தும் நாள்தான் ஆசிரியர் காப்பு பெற்ற நாளாகும். இவ்வாறெல்லாம் எண்ணிக் கொண்டு இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தேன்."*

இதன்மூலம் தனியார் கல்லூரிகளின் ஆசிரியர்கள் பணிக்காப்பின்மை குறித்து நாம் அறிந்து கொள்ளலாம். இதை விட நேர்மைச் செயலாலும் தமிழ்த் தொண்டுகளாலும் தம் வாழ்க்கையைப் போர்க்களமாக மாற்றிக் கொண்ட பேராசிரியரின் ஈக உணர்வையும் செம்மாப்பையும் புரிந்து கொள்ளலாம். சாதிகள் அடிப்படையில் கல்விக்கூடங்கள் உருவாவதால் ஏற்படும் மன்பதை அவலம் குறித்தும் கவலைப்படும் பேராசிரியர், அதனைப்பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

*"சாதிகள் கூடாது என்று மேடைகள் தோறும் முழங்குகின்றனர். சாதிகளை அரசு ஆவணங்களில் குறித்தல் கூடாது என்று கூறுகின்றனர். ஆனால், சாதிகளின் பேரால் கல்வி நிலையங்கள் தோன்ற உதவுகின்றனர். ஒவ்வொரு சாதியினரும் தத்தம் சாதிகள் பேரால் கல்லூரிகளை அமைத்துக்கொண்டு தத்தம்*

*சாதி ஆசிரியர்களையே பணிக்கு அமர்த்துகின்றனர். தத்தம் சாதி மாணவர்களையே பொறுக்குகின்றனர். இவ்வகையில் அரசும் குறுக்கிடுவதில்லை. உதவியும் புரிகின்றது. இவ்விரங்கத்தக்க சூழ்நிலை என்றுதான் நீங்குமோ?"*

இன்றைக்குச் சிறுபான்மையர் உரிமை என்ற அடிப்படையில் கல்விநிலையங்கள் பெரும்பான்மை தோன்றித் தமிழரைச் சிறுபான்மையர் ஆக்கிக் கொண்டு வருகின்றன. பேராசிரியர் கூறுவதுபோல், அரசே கல்வி நிலையங்களை நடத்தும் நிலை வர வேண்டும். அனைத்து நிலைகளிலும் தமிழே பயிற்று மொழியாக இருக்க வேண்டும் என்றும் அனைத்து வகையினருக்கும் இலவசக் கட்டாயக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என்றும் பேராசிரியர் வலியுறுத்தி உள்ளார். அத்தகு நிலை வரவேண்டும். அந்நாள் எந்நாளோ!

இவ்வாறு சென்னையில் வேலைவாய்ப்பு முயற்சிகளினால் அலைந்து கொண்டிருந்த பேராசிரியர், கலைத்தந்தை கருமுத்து தியாகராச(ச்செட்டியா)ர் தம்மைச் சந்திக்க விரும்புவதாக அறிந்து மதுரை சென்றார்; தமிழ்ப் புலமையும் தமிழ்உணர்வும் மிக்க கலைத்தந்தை பேராசிரியரைத் தியாகராசர் கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவராக நியமித்தார். அப்பொழுது முதல்வர் பணியிடமும் ஒழிவாகத்தான் இருந்தது. அதற்கு ஆங்கிலத்துறையைச் சேர்ந்த திரு வரதாச்சாரி என்பவரை நியமித்தார். துணை முதல்வராகவும் முதல்வராகவும் பணியாற்றி உள்ள தகுதி மிக்கப் பேராசிரியரையே அவர் முதல்வராக அமர்த்தி இருக்கலாம். தமிழார்வலருக்கே தமிழ்ப் பேராசிரியரை முதல்வராக அமர்த்த எண்ணம் வராவிடில் பிறர் எங்ஙனம் தமிழ்ப்பேராசிரியரை மதிப்பர் என்ற எண்ணம் பேராசிரியருக்குத் தோன்றியது.

தாம் பணியாற்றும் கல்விநிலையங்களில் எல்லாம் அக்கால, இக்காலப் புலவர்கள் விழாக்களை நடத்துவது பேராசிரியர் வழக்கமாயிற்றே. அதேபோல் ஒரு முறை பாவேந்தர் பாரதிதாசன் விழா நடத்தினார். மூன்றுநாள் நடைபெற்ற பாரதிதாசன் விழாவில் ஒவ்வொரு நாள் விழா இறுதியிலும் தமிழ் வாழ்த்தே பாடப்பட்டது. விரல்விட்டு எண்ணும் மாணவர்கள் நாட்டுப்பாடலைப் பாடாமல் அதற்கு அவமதிப்பு செய்து விட்டதாக எதிர்ப்பு தெரிவித்தனர். வெளியில் இருந்த பேராயக் கட்சியினர் இவர்களுக்குப் பக்கத்துணையாக இருந்து, 'தேசத்துரோகி இலக்குவனாரைக் கைது செய்' என்று ஆர்ப்பாட்டம் செய்தனர். தமிழ் என்றாலே ஒவ்வாமையாக என்றும் கருதும் பேராயக் கட்சியினர் பேராசிரியருக்குத் தொல்லைகள் தந்தமையைப் பேராசிரியர் பொருட்படுத்தவில்லை. தமிழ்நாட்டில் நடைபெறும் தமிழ் விழாவில் தமிழ்ப்பாடல் பாடுவதே முறை என உறுதியாய் நின்று அதனை எதிர்கொண்டார் பேராசிரியர்.

தமிழ்ப்பற்று மிக்க தாளாளர், தமிழறிஞர்கள் அணி செய்யும் தமிழ்த்துறை ஆகியவற்றால் நீண்ட காலம் - சூலை 1959 முதல் சூன் 1965 வரை - தியாகராசர் கல்லூரியில்தான் பேராசிரியர் பணியாற்றினார். எதிர்ப்புகளுக்கிடையே தமிழ்ப்பணி ஆற்றியவர், தமிழ்ச்சூழல் வாய்த்த பொழுது வாளா விருப்பாரா? வழக்கம்போல் பொதுமக்களுக்கான தமிழ் வகுப்புகள், இலக்கியப் பரப்புரைகள், இதழ்ப்பணிகள் எனத் தமிழ்த் தொண்டுகளில் தம் வாழ்வைச் செலவிட்டார். மதுரையில் தமிழ்க்காப்புக் கழகம் என்னும் அமைப்பைத் தோற்றுவித்தார்.

இதுவரை பேராசிரியர் நிறுவிய அமைப்புகள் நிறுவிய இடங்களில் மட்டும் தொண்டாற்றின. ஆனால், தமிழ்க்காப்புக் கழகம் நாடெங்கும் கிளைகளாய் விரிந்தது. கோலார் முதலான பிற மாநிலப்பகுதிகளிலும் காலூன்றியது.

"வாணிகர், தம் முகவரியை வரைகின்ற பலகையில்,
ஆங் கிலமா வேண்டும்?
'மாணுயர்ந்த செந்தமிழால் வரைக' என
அன்னவர்க்குச் சொல்ல வேண்டும்!
அறிவிப்புப் பலகையெல்லாம் அருந்தமிழ்ச்சொல்
ஆக்குவதே அன்றி, அச்சொல்
குறைவற்ற தொடராகக் குற்றமற்ற
சொல்லாக அமையு மாயின்
மறுவற்றுத் திகழாளோ செந்தமிழ்த்தாய்?
தமிழ்மக்கள் மகிழ்ந்தி டாரோ?
குறியுற்ற மறவர்களே! இப்பணியை
முடிப்பதற்கோர் கூட்டம் வேண்டும்."

என்றார் பாவேந்தர் பாரதிதாசன். அத்தகைய கூட்டத்தை உருவாக்கும் அமைப்பாகத் தமிழ்க்காப்புக் கழகத்தை நடத்தினார் பேராசிரியர்.

பேராசிரியர் புதுக்கோட்டையில் இருந்த பொழுது 'குறள்நெறி' என்னும் இதழை நடத்தினார் அல்லவா? இங்கு அதே பெயரில் தமிழ்த்திங்களிருமுறை இதழைத் தொடங்கினார். இது குறித்து,

> இக்காலத்தில் பத்திரிகை நடத்தி வெற்றி பெறுவது கலிங்கப் போரில் ஈடுபட்டு வெற்றி காண்பதை ஒத்ததாகும். இத்தகைய துயரை அறிந்தும்கூட திரு இலக்குவனார் தமிழின்மீதுள்ள பற்றினால் குறள்நெறியை வெளியிடும் பணியில் இறங்கியுள்ளார்கள்

என்றார் முத்தமிழ்க்காலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள் (பக்கம் 4: குறள்நெறி : 1.2.64) இவ்விதழ் தொடங்குவதற்கான காரணங்களைப் பின்வருமாறு வெளியீட்டு விழாவில் பேராசிரியரும் தெரிவித்துள்ளார்.

> இன்று வெளிவரும் பெரும்பாலான இதழ்களின் நிலை என்ன? மக்களிடம் பொறிநுகர் உணர்ச்சிகளைக் கிளர்ந் தெழும்படிச்

செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்படுகின்றன. நல்லறிவு கொடுத்து மக்களைத் திருத்தி நல்வழிப்படுத்த வேண்டிய கடமை இதழ்களுக்குண்டு. அக்கடமையைப் பலவும் மறந்து விடுகின்றன. நாட்டில் பெரும்பாலான மக்கள் வளர்ச்சியற்ற நிலையிலேயேயிருந்துவருகிறார்கள். ஆகவே, அவர்களின் நிலைக்கு இறங்கிச் சென்று தங்களின் அறிவை விற்றால்தான் பணம் சேர்க்க முடியும் என்று கருதி அவ்விதமே செய்கிறார்கள். நான் அவர்களைக் குறை கூற வேண்டுமென்பதற்காக இவற்றைக் கூறவில்லை.

செய்தியிதழ்களில் புலவர்களுக்குப் போதிய விளம்பரம் கொடுப்பது கிடையாது. அரசியல் தலைவர்களின் பேச்சுக்கும் திரைப்பட அரசிகளின் படத்துக்கும்தான் அவை பெருமதிப்பு அளிக்கின்றன. திரைப்பட அரசிகளில் பலருக்கு எழுதப் படிக்கத் தெரியாமல் இருக்கும். ஆனால், மக்களுடைய வினாக்களுக்கு அவர்கள்தான் விடை எழுதுவார்கள். மக்களிடையே இதற்கான ஆர்வம் வாழ்நாள் முழுதும் நிலைத்து நிற்காது.

*[குறள்நெறி வெளியீட்டு விழாவில் பேராசிரியர் சி.இலக்குவனார் உரை*
*குறள்நெறி (மலர்1: இதழ் 12): தை19, 1995: 1.2.64]*

இந்தி முதன்மையை எதிர்ப்பதைத் தலையாய கடமையாகக் கொண்டு குறள்நெறி வெளிவருவது குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு இதழிலும் தெரிவித்தார்:

இந்தி முதன்மையைத் தடுப்பதும் தமிழைத் தூய நிலையில் வளம்படுத்துவதும் குறள்நெறியில் மக்கள் வாழ்வதற்கு ஒல்லும் வகையால் உழைப்பதும் மக்களாட்சி முறை மாண்புற வழிகாட்டுவதுமே நம் இதழின் குறிக்கோளாகும்.

குறள்நெறியைப் பரப்பி மக்களைக் குறள்நெறியில் வாழச் செய்வதுதான் தலையாய நோக்கம். அந்நோக்க அடிப்படையில் கட்சிச் சார்பற்ற அரசியல் இலக்கியப் பண்பாட்டுத் தமிழியக்க வெளியீடாகப் பணிபுரிந்துவருகின்றது என்பதனை அறிந்து, இதழைப் போற்றி ஒல்லும் வகையால் உதவுமாறு அன்போடு வேண்டுகின்றோம்.

குறள்நெறி ஓங்குக. தமிழ் வெல்க. மக்களாட்சி மாண்புறுக.

*குறள்நெறி (மலர் 1: இதழ் 12): ஆனி 18,1995; 1.07.1964*

அவர் காலத்தில் இவ்விரண்டிலும் வெற்றி கண்டார் எனலாம். தமிழ் மக்களிடையே இந்தி எதிர்ப்பு உணர்வை உருவாக்கவும் பரப்பவும் குறள்நெறி ஆற்றிய தொண்டு அளப்பரியது. தமிழ் நாட்டில் மட்டுமல்லாமல், கருநாடகம், கேரளம், ஆந்திரா,

மகாராட்டிரம், முதலான மாநிலங்களிலும் தில்லியிலும் குறள்நெறி அன்பர்கள் உருவாயினர்.

தமிழர்களில் கற்றவர்கள் எனப்படுகின்றவர்கள் தமிழினுயர்வை நிலைநாட்ட முயலாது தம்முயர்வை நிலைநாட்டுவதிலேயே காலங்கழித்துவருகின்றனர்.

தென்மொழி, தேன்மொழியாகவும் இந்தியத் தேய மொழி யாகவும் ஆவதற்குரிய செயல்முறைகளைச் செய்திட வேண்டும்.

தமிழ்நாட்டில் தமிழுக்கே தலைமை வேண்டும். தமிழ் தலைமை பெறும் வரை தமிழர் தலைமை பெறுதல் இல்லை. பழைய வடமொழிக்கடிபணியாது வாழ்ந்த தென்மொழி புதியதொரு இந்தியெனும வட மொழிக்குத் தலை குனிந்து வாழ்ந்திடுமோ? ஒரு நாளும் இல்லை.

*குறள்நெறி (மலர்3: இதழ்10): வைகாசி19, 1997: 1.6.1966*

தமிழியக்கச் செய்திகளைப் பொதுவான இதழ்கள் இருட்டடிப்புச் செய்தன. ஆனால், தி.மு.க. அன்பர்கள் நடத்தும் இலக்கிய இதழ்கள் மூலம் அவை பற்றி அறிய வாய்ப்புகள் இருந்தன. ஆனால், ஆங்கிலத்தில் அதற்கான வாய்ப்பு இல்லாமல் இருந்தது. அந்தக் குறையைப் பேராசிரியர் நடத்திய ஆங்கில இதழ் போக்கியது. வட மாநிலங்களிலும் படைத்துறையினரிடமும் இவ்விதழுக்கு நல்ல வரவேற்பிருந்தது.

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு

என்னும் திருக்குறள் மூலம் தெய்வப்புலவர் திருவள்ளுவர் மொழியை விழியாக எண்ணிக் காக்க வலியுறுத்துவதைப் பேராசிரியர் விளக்கி உள்ளார். அந்த அடிப்படையில் மொழி உரிமை காப்பதும் குறள்நெறியே என்று 'குறள்நெறி'யை மொழிப்போர் ஆயுதமாக நடத்தினார். தொடக்க த்தில் இருந்தே இந்தி எதிர்ப்பு பற்றிய கட்டுரைகள், வினா விடைகள், கவிதைகள் என இந்தித் திணிப்பை எதிர்த்தும், தமிழ்க்காப்பையும் தமிழ்ப்பயிற்சி மொழி முதலானவற்றையும் வலியுறுத்தியும் படைப்புகள் வந்தன. தமிழ் ஆர்வலர் ஒவ்வொருவரும் படிக்க வேண்டிய இதழாகக் குறள்நெறி அமைந்தது.

மாணவர்கள் மத்தியில் குறள்நெறி பரவியது. எந்தப் புரட்சியும் திடீரென்று முளைத்து வெடிப்பதல்ல. 1965 ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போருக்கான தளத்தையும் களத்தையும் குறள்நெறி அமைத்தது. தொடக்கத் தில் இருந்தே பேராசிரியர் இந்தியை எதிர்த்து வந்தாலும், அவர் ஒருவர்தாம் முன்னின்று இந்தி எதிர்ப்பு இயக்கத்தைக் கொண்டு சென்றிருந்தாலும், 1960களில் மேலும் பரவலாக்கவும் முனைப்பாக்கவும் விரும்பினார். இதற்கு அரசியல் பின்னணியும் வேண்டும் என்பதால் அடுத்து ஆட்சி

யை அமைக்கும் எனக் கருதிய தி.மு.க. இந்தி எதிர்ப்புப் போரில் குதிக்க வேண்டும் என விழைந்தார். தியாகராசர் கல்லூரிக்குப் பேசுமாறு பேரறிஞர் அண்ணாவை அழைத்து, அவர் பங்கேற்றுப்பேசிய கூட்டத்தில்,1965 இல் இந்தி தானாகவே அரியணையில் அமர்ந்து நம்மை அழுத்தப் போவதால் முனைப்புடன் எதிர்க்க வேண்டும் என வேண்டினார். பேரறிஞர் அண்ணா அவர்களும் தம்கட்சிப் பொதுக்குழுவைக் கூட்டி பேராசிரியர் கூறும் பேரிடரை எடுத்துரைத்து மொழிப்போரில் கழகத்தவரை இறங்கச் செய்தார்.

இந்திய அரசு தமிழினப் பகை அரசாக நடந்து கொள்வதைத் தொடர்ந்து உணர்த்தி வந்தார். முழுஉரிமையுடன் கூடிய தமிழக அரசு அமைந்தால்தான் தமிழ் மொழி, தமிழ் இனம், தமிழ்க்கலை, தமிழ்நாகரிகம், தமிழ்ப்பண்பாடு முதலாயின ஓங்கவும் ஒளிரவும் இயலும் என்பதைத் தெளிவாக எடுத்துரைத்தார். இதனை விளக்கும் அவரின் படைப்பு ஒன்று வருமாறு:

> இந்திய அரசினர்க்குத் தமிழகம் என ஒன்றுகூடாது; தமிழ் இனம் எனக் கூறல் சாலாது. தமிழர் பண்டைய வரலாற்றை மறக்கச் செய்து மறைக்கத்தான் வழிகோலுவார்கள் போல உள்ளது.
>
> தமிழகத்தின் பழைய கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு வெளிப்படுத்தப்படாமல் அப்படியே மறைவுண்டு கிடக்கின்றன. கல்வெட்டுத்துறை, பழம்பெரும் ஆராய்ச்சித் துறை எனப் பல துறைகள் இந்திய அரசினர் கொண்டுள்ளனர். கொண்டிருந்தும் பயனில்லை.
>
> ஒருகால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் ஒருவர் சங்க காலச் சோழர் காலத்தில் சிறப்புற்றிருந்த காவிரிப் பூம்பட்டினம் கடலால் மறைவுண்டு புதைவுண்டு கிடக்கின்றது. கடலுக்கடியில் ஆய்வு நடத்தினால் சோழர் கால வரலாறு தெரிவதற்கு இயலும் என இந்திய அரசுக்கு எழுதினராம். இந்திய அரசு இப்பொழுது அத்தகைய ஆராய்ச்சிகளில் ஈடுபட வசதி யின்று என அறிவித்துவிட்டதாம். நமது முதலமைச்சர் இன்று வெளிப்படுத்தியுள்ள உண்மை பல ஆண்டுகட்கு முன்பே மெய்ப்பிக்கப்பட்டதாகும்.
>
> ஆகவே, இனியேனும் தமிழக அரசு விழித்தெழுந்து தமிழகப் பழம்பெருமைகளை வெளிப்படுத்த ஆவன விரைந்து செய்யும் என எதிர்பார்க்கின்றோம். புதியதற்கு அடிப்படை பழைமையே என வலியுறுத்திய தமிழக முதலமைச்சர் அவர்கள், பழைமையைக் கண்டு பிடித்து வெளிப்படுத்தவும் அதனை உலகுக்கறிவிக்கவும் முன் வருவார் என நம்புகின்றோம். இந்திய அரசு உதவாது என அறிந்து அதனை உளமார வெளிப்படுத்திய முதலமைச்சரைப்

பாராட்டுகின்றோம். இந்திய அரசு தமிழக வளர்ச்சியில் முழு ஆர்வம் காட்டாது என்பதற்கு இதுவும் ஒரு சான்று. ஆகவே முழு உரிமையோடு கூடிய தமிழக அரசைப் பெற முயல்வோமாக.

*குறள்நெறி (மலர்1 இதழ்144): ஐப்பசி 24, 1997: 9.11.1966*

மக்களிடையே நீறுபூத்த நெருப்பாக இருந்த இந்தி எதிர்ப்பு உணர்வு பேராசிரியரால் தீப்பிழம்பாக மாறியது.

ஆங்கிலம் அயல்மொழி; அதனால் பொதுமொழியாகத் தகுதியற்றது என்பாருக்கு அதேபோல் இந்தியும் பிற மொழியினருக்கு அயல் மொழியே என்பதை விளக்கினார்.

> "ஆங்கிலம் அயல்மொழி என்றால் இந்தி மொழியும் இந்தி மொழியினர் அல்லார்க்கு அயல்மொழிதானே என்று கூறுவார் கூற்றைத் தள்ளமுடியாது அன்றோ? உலகக் கூட்டரசை உருவாக்கி அனைத்துலக மக்களும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்ற கொள்கையை மேலோங்கச் செய்து வெற்றி பெறவேண்டும்."

என உலக்கூட்டரசை வலியுறுத்தினார்(குறள்நெறி). பின் வரும் நூற்றாண்டுகளில் உறுதியாக உலகக் கூட்டரசு அமையும்; அப்பொழுது பேராசிரியரின் தொலை நோக்கு உணர்வு தெள்ளிதின் புரியும்.

சமய விடுமுறைகளும் பிராமணியச் செல்வாக்கின் அடையாளமே எனக்கூறி, ஒரே சமயம், ஒரே மொழி, ஒரே இனம் முதலான ஒற்றை யாட்சிக்கு எதிர்ப்பை மக்களிடையே உருவாக்கினார்.

> "பரதகண்ட முழுவதும் ஒரே ஆட்சி, ஒரே மொழி, ஒரே மதம், ஒரே இனம் எனக் கொள்ளவைத்துப் பலமொழிகளையும், இனங்களையும், இந்து ஆட்சி எனப் பாகிசுதானுக்குப் போட்டியாக ஒன்றை உருவாக்க எண்ணுகின்றனரோ என ஐயுற வேண்டியுள்ளது.
>
> இந்து மதம் என்பது *பிராமணீயம்* என்பதும் அதனைக் காக்க எந்த நிலையில் உள்ள பிராமணரும் பின்வாங்கார் என்பதும் என்றும் நினைவில் கொள்ள வேண்டியன.
>
> சமயச் சார்பற்ற அரசில் சமயத் தொடர்பான நாட்களுக்கு விடுமுறை விடுவது எதற்கு? நில நூல் வான நூல் பெருகியுள்ள இக்காலத்திலும், திங்களில் சென்று உறைவதற்குத் திட்ட மிடும் இந்நாளிலும், ஞாயிற்று மறைப்புக்கு (Solar eclipse) விடுமுறைவிடுகின்றது எற்றுக்கு? இவையெல்லாம் பிராமணர் களின் செல்வாக்கைத்தானே சுட்டுகின்றன. சமயச் சார்பற்றது என்னும் போர்வையில் பிராமணீயமாம் இந்து மதமே ஆட்சி புரிகின்றது.

சட்டம் செய்தால் மட்டும் போதாது. உள்ளங்களும் திருந்த வேண்டும். சாதிமத வேறுபாடுகள் ஒழிந்த மன்பதையை

உருவாக்க உளமார உழைத்தல் நாட்டு நலன் நாடுவார் அனைவரின் கடனாகும். கல்வி நிலையங்கள் இத்துறையில் முன்னோடிகளாகத் தக்க வழிகாட்ட வேண்டும்."

*குறள்நெறி (மலர்2 : இதழ்22): கார்த்திகை 16,1997 : 1.12.65*

இவ்வாறு சாதி சமயமற்ற மன்பதை உருவாகக் கல்விநிலையங்களே வழிகாட்ட வேண்டும் என்றும் வலியுறுத்தினார்.

தமிழ் வகுப்புகள் மூலம் அறிவுப்பசியைத் தீர்த்து வைத்த தமிழ்க்காப்புக்கழகம், வீதிகளுக்கு வந்து தமிழ் காக்கப் போராடியது. பெயர்ப்பலகைகளில் தமிழ் இடம் பெறவும் தமிழ்ப் பெயர் சூட்டவும் தமிழ்வழிக்கல்வியை நடைமுறைப்படுத்தவும் தமிழ்வழிபாட்டையே போற்றவும் தமிழ்நெறியில் வாழவும் வலியுறுத்திய ஊர்வலங்கள் மக்களிடையே எழுச்சியை ஏற்படுத்தின. 25.8.63 இல் நடைபெற்ற தமிழ்க்காப்புக் கழக ஆண்டுவிழா ஊர்வலம் குறித்துப் புலவர்மணி இரா.இளங்குமரன் அவர்கள் பின்வருமாறு கூறுகிறார் (செந்தமிழ்க்காவர் சி.இலக்குவனார்: பக்கம் 48):

"தமிழே உணர்வான ஊர்வலம்; தமிழே முழங்கிய ஊர்வலம்; தமிழுக்காகவும் ஒரு பெரும்படை உண்டு என்பதை மெய்ப்பித்த ஊர்வலம்! கட்சிகளின் ஊர்வலமே கண்ட பொதுமக்களுக்குப் புதுப்பொலிவான - எழுச்சிமிக்க இளையரும் முதியரும் நடையிட்டு வந்த ஊர்வலம்! தெருத்தோறும் கூடியும்,மாடி தோறும் ஏறியும் பொது மக்களும் முழக்கமிட நிகழ்ந்த ஊர்வலம்!"

தமிழ்க்காப்புக்கழகச் செயல்பாடுகளாலும் 'குறள் நெறி'யாலும் இந்தி எதிர்ப்பு உணர்வும் தமிழ்க்காப்பு உணர்வும் பொது மக்க ளிடையே நன்கு பரவியது. மாணவர்கள் பெரிதும் தமிழ் உணர்வோடு தங்களை இணைத்துக் கொண்டனர். 1965 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 25 ஆம் நாள் இந்தி எதிர்ப்புப் போர் பெரிதாக வெடித்தது. அரசால் மாணவர்களை அடக்க இயலவில்லை. மாணவர்கள் தங்கள் கட்டுப்பாட்டில் இல்லை எனப் பேரறிஞர் அண்ணா முதலான தலைவர்களும் கை விரித்து விட்டனர். தி.மு.க.மாணவர்கள் மட்டும் போராட்டத்தில் இருந்தால் கட்சியால் கட்டுப்படுத்த இயலும். ஆனால், அனைத்துக் கட்சியினரும் கட்சி சாராதவர்களும் எனப் பங்கேற்கும் போராட்டத்தை நிறுத்தும் விசை மதுரையில் பேராசிரியரிடம்தான் உள்ளது எனப் பேரறிஞர் அண்ணா கூறினார். இந்தி எதிர்ப்புத் தீயை அணைக்க முடியாமல், காவல்துறையினர் பேராசிரியரை அணுகி மொழிச்சிக்கலைத் தலைவர்கள் பார்த்துக் கொள்வார்கள் எனவும் மாணவர்கள் போராட்டத்தை விலக்கி அமைதியாக இருக்க வேண்டும் என்றும் அறிக்கை விட வேண்டினர். அவ்வாறான அறிக்கை தம்முடைய ஆசிரியக் கடமைக்கு மாறுபட்டதென்றும் தமிழ்நலனுக்கு எதிரானது என்றும் கூறிப் பேராசிரியர் மறுத்துவிட்டார்.

இந்தி எதிர்ப்புப் போரை அடக்குவதற்குப் பேராசிரியர் அறிக்கை தராமையால், பேராசிரியரை அடக்கினால், இந்தி எதிர்ப்புப் போரும் அடங்கும் என அரசு கருதியது. எனவே, இந்தி எதிர்ப்புப் போரினைத் தலைமை தாங்கி நடத்துபவர் எனக்கூறிக் காவல்துறையினர் பிப்பிரவரி முதல்நாளன்று பேராசிரியரை (மதுரை திருப்பரங்குன்றத்தில் உள்ள) அவருடைய குறள்நெறி அச்சகத்தில் கைது செய்தனர். இருநாள் முன்னதாகவே மாலைமுரசுச் செய்தியாளர் ஒருவர் மூலம் கிடைத்த செய்தியால் பேராசிரியர் இதற்கு ஆயத்தமாகவே இருந்தார். அச்சகத் தில் குப்பைக் கூளங்களையும் ஆராய்ந்து, அமைச்சரவையைக் கவிழ்க்க வேண்டும் என்ற மாணவர்களின் துண்டறிக்கை முதலானவற்றையும் பேரறிஞர் அண்ணா முன்னுரை எழுதியிருந்தமையால் தொல்காப்பிய ஆங்கில மொழி பெயர்ப்பு நூலையும் அச்சுப்பொறியில் அச்சிற்கு ஆயத்தமாக இருந்த அச்செழுத்துக் கோப்பையும் எடுத்துக் கொண்டு காவலுடன் திருநகர் இல்லம் வந்தனர். அங்கும் புத்தகங்களையும் அறிக்கை களையும் ஆராய்ந்து, தங்களுக்கு விசாரணைக்குத் தேவைப் படலாம் எனக் கருதுவனவற்றுடன் நள்ளிரவு 12.00 மணிக்கு மதுரைக் காவல்துறை மைய நிலையக் கட்டடத்திற்கு அழைத்துச் சென்றனர். “இன்பத்தமிழுக்காக ஏகுகின்றோம் சிறைக்கு என்னும் பெருமித உணர்வுடன் யான் வீற்றிருக்க முன்னும் பின்னும் காவலர்கள் வீற்றிருந்த ஊர்திகள் வர, இரு பக்கங்களிலும் இரு காவல்துறை அலுவலர்கள் அமர்ந்திருக்க மகிழுந்தில் அழைத்துச் செல்லப்பட்டதாக” இது குறித்துப் பேராசிரியர் குறிப்பு எழுதி உள்ளார். மறுநாள் காலை மாவட்டக்காவல்துறைத் தலைவர் வந்து பார்த்துவிட்டுச் சென்றதாகவும் காவல்துறையினர் அன்பாகவே நடத்தியதாகவும் தமிழுக்காகச் சிறைப் படுத்தப் பட்டுள்ளார் என இரக்கத்துடன் பேணிக் காத்ததாகவும் பேராசிரியர் குறித்துள்ளார். இருப்பினும் காவல்துறையினர் வீட்டிற்கு உள்ள தொலைபேசி இணைப்பைத் துண்டித்துவிட்டனர். குற்றம் புரிந்து சிறைக்குச் செல்வோர் தங்களை ஈகியராகக் காட்டிக் கொள்வதும் உள்ளே வசதிகளைப் பெற்றுக் கொண்டாலும் சொல்லொணாக் கொடுமைகளுக்கு உள்ளானதாகச் சொல்வதும் சிறைத்தண்டனையையே அடுத்த உயர்விற்கு அடித்தளமாக மாற்றுவதையும் இன்று நாம் காண்கின்றோம். ஆனால், பேராசிரியரோ தம்முடைய இயல்பு வாழ்க்கைக்கு ஊறு நேர்ந்திருப்பினும் ஒரு முறை கூடச் சிறைக் கொடுமையில் துன்புற்றதாகக் கூறவில்லை. அதனை அடிப்படையாகக் கொண்டு ஆதாயம் அடையவும் முயலவில்லை. சான் றோர் என்றும் சான்றோர் தாமே!

பேராசிரியரின் கைதால் தமிழுலகம் மேலும் கிளர்ந்தெழுந்தது. வழக்கு மன்றத்தில், திரு தருமராசு சந்தோசம் தலைமையில் திரு இராமசுப்பிரமணியம் முதலான முப்பதுக்கும் மேற்பட்ட வழக்குரைஞர்கள் பேராசிரியருக்காக வழக்காடினர். அவர்கள் சார்பில்

திரு மலைச்சாமி பேராசிரியரைச் சந்தித்துப், பொறுப்பில் விடுவிக்க ஆவன செய்ய உள்ளதாகக் கூறினார். பேராசிரியரோ, "அரசு விரும்பிச்சிறை வைக்கும் நாள் வரை சிறையிலேயே இருக்கின்றேன். பொறுப்பில் விடுதலை பெற்று வர விரும்பிலேன்' என்று கூறி விட்டார். ஆனால், பேராசிரியருக்கு உணவு கொண்டு வந்திருந்த அவரது கெழுதகை நண்பர் திரு கோபால்(பிள்ளை) அவர்களும் திரு மலைச்சாமி அவர்களும் சில காரணங்களைக் கூறிப் பேராசிரியர் பொறுப்பில் விடுவிப்புபெற இசைய வலியுறுத்தினர். பேராசிரியர் இசைந்தார். (திரு மலைச்சாமியே பின்னர் இ.ஆ.பணியில் சேர்ந்து உயர் பதவிகள் பெற்றுத் தேர்தல் ஆணையராக ஓய்வு பெற்றவர்; நாடாளுமன்ற உறுப்பினராகவும் இருந்தவர்.) ஆனால், பேராசிரியர் வெளியில் இருந்தால் நாட்டுக்குப் பேரிடர் உண்டாகும் என அரசு கருதுவதாகக் கூறி நடுவர் மறுத்தார். பின்னர்க் கட்டுப்பாட்டுடன் கூடிய ஈட்டுப் பொறுப்பில் விடுவித்தார். பேராசிரியர் குடியிருக்கும் திருநகர் எல்லையை விட்டு வெளியில் செல்லக்கூடாது என்ற கட்டுப்பாட்டால் குடியிருக்கும் தெருவிலும் பக்கத்துத் தெருக்களிலும் அடுத்துள்ள தெருக்களிலும் எனக் காவலர்கள் பலர் நிறுத்தப்பட்டுக் கண்காணித்தனர். வீட்டிற்கு வருவோர் போவோரையும் கண்காணித்தனர். என்ற போதும் மார்ச்சு 8 ஆம் நாள் கல்விநிலையங்கள் திறக்கப்படும் என அறிவித்ததால், பேராசிரியருக்கு விதித்த நிபந்தனைகளை நீக்கி நடுவர் மன்றம் ஆணையிட்டது. ஆனால், வழக்கு தொடர்ந்தது. காவல்துறையின் மிரட்டலைப் பொருட்படுத்தாமல் நண்பர்களோ அச்சுறுத்தலைப் பொருட்படுத்தாமல் காங்கிரசு மாணவர் உட்பட மாணவர்களோ பேராசிரியருக்கு எதிராகச் சான்றுரைக்க மறுத்து விட்டனர். எனவே, அரசு வழக்குரைஞர் நீதிமன்றத்தில் வழக்கை ஆய்வுக்குக் கொண்டுவர இயலாது எனக் கூறிவிட்டார். காவல்துறையினரால் ஒன்றும் செய்ய இயலவில்லை. தீவைப்பு முதலான கலக நிகழ்ச்சிகளுக்கெல்லாம் காரணமானவர் என்றெல்லாம் பேராசிரியர் மீது சுமத்தப்பட்ட குற்றங்கள் மெய்ப்பிக்கப்படவில்லை என நடுவர் மன்றம் பேராசிரியரை விடுதலை செய்தது. ஆனால், தமிழ் விடுதலை அடையும் வரை தாம் ஓயப்போவதில்லை எனப் பேராசிரியர் தொடர்ந்து இந்தி எதிர்ப்புப் பணிகளிலும் தமிழ்க்காப்புப் பணிகளிலும் முனைப்புடன் ஈடுபட்டார்.

தமிழ்நாட்டில் தமிழே எல்லா நிலைகளிலும் நிலைத்து நிற்க வேண்டுமெனில் தமிழ்வழிக்கல்வியே தேவை; அதைப் பாமரர்களும் உணர்ந்து கொள்ளவும் அதன் மூலம் அரசு தமிழ் வழிக் கல்வியையே நடைமுறைப்படுத்தவும் தமிழ்உரிமைப் பெருநடைப் பயணம் ஒன்றை மேற்கொள்ளத் திட்டமிட்டார். அதன் குறிக்கோள்களாகப் பின்வருவனவற்றை அறிவித்தார்.

## தமிழ் உரிமைப்பெருநடை அணி

### குறிக்கோள்கள்

1. கல்லூரிகளில் தமிழைப் பாடமொழியாக ஆக்குகின்ற அரசின் திட்டத்தை உடனடியாக நிறைவேற்ற வேண்டுமென்று தமிழக அரசை வேண்டுதல்.
2. மாணவர்கட்கும் பெற்றோர்க்கும் தமிழ் வழியாகப் படித்தலின் நன்மையை எடுத்துக் கூறல்.
3. பேச்சிலும் எழுத்திலும் செந்தமிழையே பயன்படுத்துமாறு பொது மக்களை வேண்டுதல்.
4. தமிழ்நாட்டின் எல்லாத் துறைகளிலும் தமிழுக்கே முதன்மையிடம் அளிக்குமாறு எடுத்துரைத்தல்.
5. எந்த இடத்திலும் தமிழின் சமநிலைக்குத் தாழ்வு வாராது பார்த்துக் கொள்ளுமாறு வேண்டுதல்.
6. தமிழ் மறையாம் திருக்குறளின் பெருமையை எடுத்துரைத்து அதன்வழி வாழ்க்கையை அமைத்துக்கொண்டு இந்திய ஒற்றுமைக்கும் உலகக் கூட்டுறவுக்கும் ஊறு நேரா வண்ணம் உயர்ந்த பண்பாட்டுடன் வாழுமாறு அறிவுறுத்தல்.

இப் பெருநடையணி இக் குறிக்கோள்களைத்தவிர வேறு குறிக்கோளை உடையதன்று; எக்கட்சியையும் சார்ந்த தன்று. கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டது. *குறள்நெறி(மலர்2 இதழ்8): சித்திரை 1996: 1.5.65*

தமிழ்நாட்டின் அனைத்து ஊர்களில் இருந்தும் தங்கள் ஊர் வழியாக நடைப்பயணத்தை மேற்கொள்ள வேண்டும் என்று அழைப்புகள் வந்தன. அதற்கேற்ப முதன்மை ஊர்களை இணைக்கும் வண்ணம் நடைப் பயணப்பாதையை வகுத்து அறிவித்தார். மே 9 அன்று தொடங்கி ஒரு திங்களில் சென்னையில் நிறைவுறும் என்றும் தெரிவித்தார். ஆளும் பேராயக் கட்சிக்கு(காங்கிரசிற்கு)ப் பெரும் அதிர்ச்சி வந்தது. தமிழ்நாடெங்கும் அறியப்பட்ட பேராசிரியராகவும் தமிழினத் தலைவராகவும் உள்ளமை யாலும் இந்திஎதிர்ப்புப் போரைத் தலைமை தாங்கி நடத்திய அவர் வழிகாட்டுதலைப் பின்பற்ற பல்லாயிரக்கணக்கானவர்கள் உள்ளமையாலும், 'ஆட்சியை மாற்றுவோம் வாரீர்' என்னும் அவரின் அழைப்பால் பேராயக்கட்சி (காங்கிரசு)க்கு எதிர்ப்பு பெருகுவதாலும் நடைப்பயணத்தைத் தடை செய்யத் திட்டமிட்டது. முன்பு கைது செய்தும் பேராசிரியருக்கு எதிராக யாரும் சான்றுரைக்க முன்வராமையால் விசாரணையின்றி அடைத்து வைக்க எண்ணியது. எனவே, இந்தியப்பாதுகாப்புச்சட்டத்தின் கீழ்க் கைது செய்யத் திட்டமிட்டது.

பேராசிரியரைக் கைது செய்யத்திட்டமிட்டுள்ளதை அறிந்த புலவர்மணி இரா.இளங்குமரன் அவர்கள், அதனைப் பேராசிரியரிடம் தெரிவித்தார்.

சிறைசெல்லும் புலவர்சிலர் வேண்டும் இன்று
செந்தமிழின் உயர்வுதனை வேண்டி நின்று
முறைசெய்யப் பதவிதனை இழப்ப தற்கும்
முனைந்துவரும் புலவர்சிலர் வேண்டும் இன்று
குறைசெய்யும் ஆள்வோரின் கொடுமைக் காளாய்க்
குருதியுடன் உயிரீயப் புலவர் வேண்டும்
நிறைசெய்ய உயிரீயும் புலவர் தம்முள்
நிற்குமுதற் புலவன்நான் ஆகவேண்டும்

*(எழுத்தாளர் மன்றக் கவியரங்கில் முடியரசன் குறள்நெறி 15.8.65)*

எனப் பேராசிரியர், தான் முதற்பலி ஆவதில் மகிழ்ச்சியே என்றார்.

எதிர்பார்த்தவாறே காவலர்கள் தி.மு.க. கொடியேற்றப்பட்ட மகிழுந்தில் இல்லம் வந்து, காவல் நிலையத்திற்கு வாருங்கள் என அழைத்தனர். எந்தப் பொருளையும உடன் எடுத்துச் செல்லவோ, வேறு யாருடனும் தொடர்புகொள்ளவோ இடம் தரவில்லை. மதுரைக்குக் காவல்நிலையம் ஒன்றிற்கு அழைத்துச் சென்று இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்க் கைது செய்யப்பட்டதைத் தெரிவித்தனர். இதற்கு முன்னதாக இந்தியப்பாதுகாப்புச்சட்டத்தின்கீழ்க் கைது செய்யப்பட்ட கலைஞரைச் சுமையுந்தில் சென்னையிலிருந்து பாளையங்கோட்டைச் சிறைக்கு அழைத்துச் சென்று துன்புறுத்தியதால் மக்களிடையே பெரும் கண்டனம் எழுந்தது. எனவே, பேராசிரியரை மகிழுந்தில் வேலூருக்கு அழைத்துச் சென்றனர். இருந்தபோதும் இருபுறமும் காவலர்கள் நெருக்க, கால்களை நீட்ட முடியாமல் முடக்கி வைத்துக் கொண்டு பயணம் செய்தது பேராசிரியருக்குத் துன்பத்தைத்தான் தந்தது. வேலூர் மத்திய சிறை சென்றதும் அதன் கண்காணிப்பாளர், முதன்முறையாகத் தமிழறிஞர் வருவதால் மகிழ்ச்சியுடன் வரவேற்பதாகக் குறிப்பிட்டார்.

பேராசிரியரின் தமிழ்த் தொண்டிற்குப் பரிசாக அரசு சிறை வாழ்வு, பதவி நீக்கம் ஆகிய இரண்டினையும் வழங்கியது. நாடெங்கணும் இதற்குக் கண்டனம் எழுந்தது. ‘தமிழ்த்தாயைச் சிறையில் இருந்து விடுதலை செய்யுங்கள்’ எனத் தலைவர்களும் தமிழ் அமைப்பினரும் வேண்டினர். தமிழ் நாட்டு அரசின் கொள்கையை மக்களிடையே பரப்பி அதற்கு ஆக்கம் தர முயன்றதற்குப் பரிசாக உயர்வைத் தராமல் தண்டனைகளைத் தரலாமா எனக்கேட்டனர்.

துன்பமிகு சிறைக்கோட்டம் தூயதமிழ் காத்தற்கு
இன்பமிகு மாளிகையாம் எத்துணைநாள் அடைத்திடினும்

*(குறள்நெறி நாள் 15.7.65)*

எனச் சிறைத்தண்டனையைக் கருதினார் பேராசிரியர். சீராட்டப்பட வேண்டியவரைச் சிறைக்கு அனுப்பிப் பணிநீக்கமும் செய்தமை குறித்துப் பின்வருமாறு பேராசிரியரே குறிப்பிட்டுள்ளார்:

*"தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்டு பயில வாரீர்" என மாணவரை நோக்கி அன்போடு அழைக்கப் புறப்பட்டேன். தமிழ் வழியாகப் பயில தம் மக்களை ஊக்குவிக்க வேண்டும் எனப் பெற்றோரை நோக்கி உற்ற வேண்டுகோள் விடுக்க ஊர்கள் தோறும் நடக்கப் புறப்பட்டேன். தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவத் தெருக்கள் தோறும் செந்தமிழ் முழங்க வேண்டுமெனச் செய்யப் புறப்பட்டேன். நாட்டு மக்கள் கூட்டுறவுடன் நல்வாழ்வு வாழ நற்றமிழ் மறையாம் குறள்நெறியை நாளும் போற்றுமின் என நவிலப் புறப்பட்டேன். உலகக் கூட்டுறவில் உயர் பங்கு கொள்மின் என உரைக்க முற்பட்டேன். இன்றமிழ் நாட்டில் எல்லாம் தமிழ் எங்கும் தமிழ் எனும் நிலை ஏற்றம் பெற என்னாலியன்றதைச் செய்ய முற்பட்டேன். அந்தோ! தமிழால் வாழும் யான் தமிழுக்காகவும் வாழ்தல் கடன் என வள்ளுவர் நெறியில், காந்தியடிகள் காட்டிய வழியில் செயல்புரியத் திட்டமிட்ட என்னை இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்ச் சிறைப்படுத்தி விட்டனர். செந்தமிழ் காக்கப் புறப்பட்ட எனக்குச் சிறை வாழ்வு கிடைத்து விட்டது.*

*சிறை வாழ்வு மட்டுமா? என் பேராசிரியர் பதவியையும் இழக்க வேண்டி நேரிட்டுள்ளது. பேராசிரியர் பதவியால் திங்கள் தோறும் பெற்று வந்த ஏறக்குறைய எழுநூறு வெண்பொற்காசுகள் வருவாயும் நின்றுவிட்டது. என்னைக் கல்லூரியில் வைத்திருந்தால் கல்லூரிக்கு அரசினர் உதவி கிடைக்காதாம். ஆகவே, நான் கல்லூரியில் பணியாற்றுதல் கூடாதாம்.*

*இன்று என்னைக் கண்டால் எல்லாரும் அஞ்சுகின்றனர். நண்பர்கள் நகைமுகம் காட்டி இன்னுரையாடாது மறைந்தோடுகின்றனர். அன்பர்கள் ஆறுதல் கூறாது அகன்றோடுகின்றனர். உறவினர்கள் உறவாடுதலுக்கு ஓய்வு கொடுத்துவிட்டனர். அரசே என்னைக் கண்டு அஞ்சித் தற்காப்புச் சட்டத்தின் கீழ்ச் சிறைப்படுத்தும் நிலை ஏற்பட்டு விட்டதால் இவ்வச்ச நிலை; அவல நிலை.*

*இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ?*
*(தமிழ்க்)குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு*

*இவ்வளவுக்கும் நான் ஆற்ற இருந்த தொண்டுதான் என்ன? அரசின் குறிக்கோளை - கோட்பாட்டை - நாடு நன்கு கடைப்பிடிக்கச் செய்ய முற்பட்டதுதான்.*

*உதட்டளவில் தமிழ்ப்பற்றைக் காட்டிவிட்டு உலகப் புகழ் பெற நாடுகின்றீர்கள். ஆனால், உயர் தமிழைப் பின்னுக்குத் தள்ளிவிட்டீர்கள். இப்பொழுதேனும் பிழையை உணர்ந்து திருந்த முற்படுங்கள். தமிழ்ப் பயிற்று மொழித்திட்டத்தை உடனே செயற்படுத்த முனையுங்கள்.*

*குறள்நெறி (மலர் 2 இதழ் 12) ஆனி 17, 1996 : 1.7.65*

என்று குறள்நெறியிலும் எழுதினார்.

செந்தமிழ் மொழி எல்லாத் துறைகளிலும் ஏற்றம் பெறவும் திருக்குறள் நெறியில் மக்கள் எல்லாரும் செம்மையுடன் வாழவும் உழைப்பதே என் குறிக்கோளாகும். *(குறள்நெறி: ஆடி31,1996 : 15.8.65)*

என்னும் இலக்குடன் வாழும் பேராசிரியர் சிறைக்கு அஞ்சவில்லை. ஆனால், தமிழன்பர் ஒவ்வொருவருக்குமே தத்தமக்குத் தண்டனை வழங்கியதுபோல் கவலை. பேராசிரியரைச் சிறையில் அடைத்ததால், தமிழன்பர்கள் பலர், ஒரு வேளை உணவைத் துறத்தல், தாடி வளர்த்தல் முதலான நோன்புகளைப் பின்பற்றினர். பேராசிரியர் விடுதலை பெற்றதும் இதனை அறிந்து அவர்களை அந்நோன்புகளைக் கைவிடுமாறு வேண்டினார். தாம் விடுதலை பெற்றாலும் தமிழ்த்தாய் விடுதலை பெறவில்லையே எனக் கவலைப்பட்டார். ஆட்சித்துறை, கல்வித்துறை, அறத்துறை என எல்லாத் துறைகளிலும் தமிழ்த்தாய் இழந்த இடத்தைப் பெற வேண்டும் என்றார். இது குறித்த ஆசிரியருரையில் மத்திய அரசு ஆரியம் முதலான வெளிநாட்டுப் புலவர்களைப் போற்றுவது போல் தமிழ்ப்புலவர்களையும் போற்ற வேண்டும் என்றார். இன்றைக்கு ஓரளவு இது நிறைவேறி உள்ளது. தமிழுக்குரிய செம்மொழித்தகுதிக்கான அறிந் தேற்பை வழங்கியதால் செம்மொழி விருதுகள் வழங்கித் தமிழ்ப்புலவர்கள் போற்றப்படுகின்றனர். ஆனால், பேராசிரியர் விழைந்தது போல் சம உரிமையில் போற்றப்படவில்லை. ஆரியம், அரபி முதலான புலவர்களுக்குத் தரப்படும் மூத்த அறிஞர் விருதுகள் தமிழுக்கு இன்னும் வழங்கப்படவில்லை. போராடிப் போராடிப் பெற்றாலும் ஒப்புக்குச் சப்பாணி போன்ற நிலையைத்தான் மத்திய அரசு தமிழுக்குத் தருகின்றது. இதற்கெல்லாம் காரணம் உதட்டளவில் தமிழின் உயர்வைப்பேசித்தம்மை மட்டும் உயர்த்திக் கொள்வோர் எண்ணிக்கை பெருகியதுதான் என்றார் பேராசிரியர். இவை பற்றிய ஆசிரிய உரை வருமாறு:

> *இக் கொடுஞ்சிறை வாழ்வைப் பெற்றது ஏன்? இந்தி மொழி மட்டும் முதன்மை பெற்றால் ஏனைய மொழிகள் அழிந்தொழியும் என்றும் தமிழர்கள் தமிழ் மொழி வழியாகப் படித்தலே தக்கது என்றும் உரைத்ததும் இக் கொள்கைகளைப் பரப்ப ஒல்லும் வகையால் முயன்றதுமேதான் இச்சிறை வாழ்வை எனக்கு அளித் தன. யான் சிறையிலிருந்து விடுதலை பெற்றுவிட்டேன். என் இனிய தமிழ்த்தாய் இன்னும் விடுதலை பெற்றிலள்.*
>
> ஒரு மொழிக்கு உரிமை என்பது அதனுடைய நாட்டில் அது எல்லாத் துறைகளிலும் முதன்மையிடம் பெற்றிருப்பதே. தமிழ் நாட்டில் தமிழ் இன்னும் அத்தகைய இடத்தைப் பெற்றிலது. ஆட்சித் துறையிலும் பல்கலைக்கழகத்திலும் நீதி மன்றத்திலும் கோயிலிலும், தமிழ் தனக்குரிய இடத்தை இழந்துள்ளது. இழந்த இடத்தைப் பெறும் நாள்தான் தமிழ்த்தாய் உரிமை பெறும் நாளாகும்.

மக்களாட்சி முறையில் தமிழ்ப் பேராசிரியர்க்கு உள்ள கடமைக்கும் உரிமைக்கும் ஏற்பத் தமிழ் மக்களிடையே தமிழார்வத்தைப் பெருக்கும் வகையில் சொற்பொழிவுத் தொண்டாற்றப் புறப்பட்ட எனக்குக் கிடைத்த பரிசு சிறைவாழ்வும் வேலையிழப்புமாகும். எவ்விதமான குற்றமும் உள்ளத்தாலும் நினைக்காத எனக்கு இழைத்துள்ள கொடுமைகள்; குற்றமற்ற கோவலனைக் கள்வனென்று கொலை செய்ததைவிடக் கொடுமையாகும். இவ்வறஞ்சாராக் கொடுஞ்செயல் நிகழலாமா என்று கடிந்துரைக்கச் சிலரே முன் வந்தனர். நாட்டுப் பெருந்தலைவர்களில் பலர் இவ்வநீதியைக் கண்டு உள்ளம் வருந்தினரேனும் இப்படிச் செய்யலாமா? என இடித்துரையாது வாளா இருந்து விட்டதன் பொருள் விளங்கிலது. தமிழ்நாட்டில் தமிழால் வாழும் ஒருவர் தமிழுக்காக வாழ முற்படுவதும் குற்றமாகக் கருதப்படுகின்ற கொடுமையை என்னென்பது? தமிழை வாழ்விழக்கச் செய்யத் துணை போவார்க்குத்தான் இனித் தமிழ்நாட்டில் வாழ்வு போலும். பெற்ற தாயை மறக்கும் பிள்ளைகள் போல உற்ற தமிழைப் புறக்கணித்து உயர்வுபெறும் சூழ்நிலை தோன்றுவது தடுக்கப்படல் வேண்டும். உதட்டளவில் தமிழின் உயர்வு பேசி உள்ளத்தால் பதவியை நச்சி உயர்வுபெறும் ஏமாற்றுச் செயல் புரிவோர்க்கு இனி ஏற்றம் அளித்தல் கூடாது. தமிழின் பேரால் ஏமாற்றுவோர் கருதியது கிட்டாது ஏமாற்றமுறல் வேண்டும். உண்மைத் தமிழ்ப்பற்றாளரே உயர் பதவிகளில் அமருமாறு செய்தல் வேண்டும். பதவிகட்குரிய தகுதிகளில் தமிழ்ப்பற்றும் தமிழ்ப்புலமையும் இடம் பெறுதல் வேண்டியது இன்றியமையாததாகும். அடுத்து நின்று பணிபுரியும் ஆள் முதல் அமைச்சர் பதவி வரை உள்ளோர் அனைவரும் தமிழ்ப்பற்றில் ஐயத்துக்கிடமற்றவராக இருத்தல் வேண்டும் என்ற நியதி தோன்றுதல் வேண்டும்.

தமிழின் உரிமையே தமிழர் உரிமையாகும். தமிழ்நாட்டில் தமிழுக்கு முதன்மையில்லை என்றால் தமிழர்க்கு முதன்மை இல்லை என்றுதான் பொருள். அயல்மொழிகளாம் ஆங்கிலத்துக்கும் இந்திக்கும் உள்ள முதன்மைகள் தமிழையும் தமிழரையும் தாழ்த்தும். ஆதலின் தமிழ் மொழிக்கு முதன்மையளிக்கும் பணியில் ஈடுபடுதல் தமிழர்களின் பிறவிக் கடனாகும்.

இந்தி முதன்மை அகற்ற வேண்டுமானால் காங்கிரசுக் கட்சி ஆளும் நிலையிலிருந்து அகற்றப்பட வேண்டும். காங்கிரசுக் கட்சி ஆளும் நிலையிலிருந்து அகற்றப்பட வேண்டுமானால் காங்கிரசல்லாத பிற கட்சிகள் தமக்குள் ஒன்றிட வேண்டும். சாதிகளின் பேராலும் பிறவற்றின்பேராலும் புதிய கட்சிகள் தோன்றுதல் கூடாது.

## மொழிப் புலவரைப் போற்றல்

பரதகண்டத்தின் குடியரசுநாள் போன்ற சிறப்பு நாட்களில் ஆரிய மொழிப் புலவர்களையும் அரபுமொழிப் புலவர்களையும் போற்றிச் சிறப்பிக்கின்றனர். ஆனால் ஏனைய மொழிப் புலவர்களை எண்ணிப் பார்ப்பதும் இல்லை. இவ்வொருதலைப் பாராட்டு என்றும் கூடாது. கூட்டரசு மொழிகள் அனைத்திலும் புகழ்பெற்று விளங்கும் புலவர்களைத் தேர்ந்தெடுத்துச் சிறப்பித்தலே ஏற்றது. ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு புலவராகச் சிறப்புச் செய்யும் வழக்கத்தை வரும் குடியரசு நாளிலிருந்தாவது கொண்டு வருவார்களாக. மொழிகளிடையே சமத்துவ நிலையைக்கடைப் பிடிக்கின்றோம் என்பதை இச்செயல் உறுதிப்படுத்தும்; மொழிகளின் சமநிலையே மக்களின் சமநிலையாகும்.

எம் உழைப்பு வீணாகவில்லை என்பதையறிய பெருமகிழ்ச்சி கொள்ளுகின்றோம். தமிழைப் பாடமொழியாகக் கொள்ளலாம் என்றுள்ள கல்லூரிகளில் மிகுதியான மாணவர்கள் சேர்ந்துள்ளனராம். எல்லா வசதிகள் அளித்தும் இன்தமிழைப் பாடமொழியாகக் கொள்வார் யாருமிலரே எனத் தமிழ்ப்பகைவர் கூறி வந்தனர். அவர் நாணுமாறு கோயம்புத்தூர் கல்லூரியில் மட்டும் 60க்கு 48 பேர் சேர்ந்துள்ளனராம். பூண்டிக் கல்லூரியிலும் நிறையச் சேர்ந்துள்ளனராம். எம் திட்டத்தைச் செயல்பட விட்டிருப்பின் இன்று எல்லாக் கல்லூரிகளிலும் எல்லா வகுப்புகளிலும் தமிழிலேயே கற்பிக்க வேண்டிய சூழல் உருவாகி இருக்கும். அந்தோ! தமிழக அரசு தடுத்து விட்டதே! ஆயினும் ஓரளவேனும் பயன் ஏற்பட்டிருப்பதையறிந்து உவகை கொள்கின்றோம். தமிழைப் பாடமொழியாகக் கொண்ட மாணவர்களை உளமாரப் பாராட்டுகின்றோம். இன்றமிழ் வழியாகப் படித்து ஏற்றம் பெறுவார்களாக.

## நோன்பினைக் கைவிடுக

என்னைப் பாதுகாப்புச்சட்டத்தின் கீழ்ச் சிறைப்படுத்தியுள்ளமைக்காக வருந்திய சில நண்பர்கள்-இளைஞர்கள்-யான் விடுதலையாகும்வரை ஒரு வேளை உணவே கொள்ளும் நோன்பைக் கொண்டனர் என்றும் சிலர் தாடி மீசை வளர்த்துக்கொண்டனர் என்றும் அறிகிறேன். யான் விடுதலை பெற்று விட்டேன். ஆகையால் தம் நோன்பைக் கைவிடுமாறு அன்போடு வேண்டுகின்றேன்.

தமிழின்பால் கொண்டுள்ள பற்றால் தமிழ்த் தொண்டனுக்கு ஏற்பட்ட இடுக்கண் கருதித் தவநோன்பு மேற்கொண்ட அன்பர்களின் உள்ள உறுதி பாராட்டுதற்குரியது. யான் விடுதலை பெற்றபோதும் தமிழ்த்தாய் இன்னும் விடுதலை பெற்றிலள். அயல்மொழிகளின் செல்வாக்கு அகலும்வரை அவள் விடுதலை பெற்றுவிட்டதாகக்

கருத இயலாது. ஆதலின் அயல்மொழிகளின் செல்வாக்கை அகற்றி அன்னைத் தமிழின் விடுதலை பெற அயராது உழைப்போம்.

*குறள்நெறி (மலர்2 : இதழ்18): ஆவணி16,1996: 1.9.65*

இன்றைக்குத் தமிழ் விடுதலை வேண்டுவோர் எண்ணிக்கையும் பெருகி வருகிறது. எனினும் பேராசிரியர் விழைந்தவாறு தமிழ் விரைவில் விடுதலை பெற்றுத் தன்னுரிமையுடன் கோலோச்ச வேண்டும்.

பேராசிரியரின் மொழிப்போர்த் தலைமை குறித்த நல்லாவணமாகப் பேரறிஞர் அண்ணா அவர்களின் சொற்பொழிவொன்றைக் குறிப்பிடலாம். பேராசிரியரின் 55 ஆம் பிறந்தநாள் பெருமங்கல விழாவில் பேரறிஞர் ஆற்றிய உரையின் ஒரு பகுதி வருமாறு:

> பேராசிரியரைச் சிறைப்படுத்தியதால், வேலையிலிருந்து நீக்கி வாழ்வில் தொல்லை விளைவித்ததனால், தங்களின் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொண்டதாகத் தவறாகக் கணக்கு போடுகிறார்கள். முப்பதாண்டு காலமாகப் பேராசிரியர் ஊட்டிய தமிழ் உணர்ச்சி நூறாயிரக்கணக்கான தமிழர்களைத் தமிழுணர்வு கொண்ட நற்றமிழர்களாக மாற்றி இருக்கிறது என்பதை ஆட்சியாளர்கள் அறியவில்லை போலும். ஊட்ட வேண்டிய தமிழ் உணர்ச்சியை ஊட்ட வேண்டிய அளவுக்கு ஊட்டிய பிறகு, தட்டி எழுப்ப வேண்டிய அளவுத் தமிழர்களைத் தட்டி எழுப்பிய பிறகு, தமிழ்மொழி தரணிபுகழ்பெற்றுச் சிறந்தோங்க வேண்டும்; தமிழகத்தில் தமிழில் ஆட்சி அலுவல் புரிய வேண்டும்; தமிழிலே அனைத்தும் கற்பிக்கப் பெற வேண்டும்; என்ற கருத்துகளை மக்களிடையே பரப்பிய பிறகு, புலி வெளியே கிளம்பிய பின்னால், குகையைப் பூட்டுவதைப்போலப் பேராசிரியரைச் சிறைப்படுத்தி உள்ளார்கள். பேராசிரியரைச் சிறைப்படுத்தியதனால், வேலையைப் பறித்துத் துன்பத்திற்கு உள்ளாக்குவதனால், அரசினர்க்கு என்ன பயன் கிடைக்கப்போகிறதோ தெரியவில்லை. பேராசிரியரின் தொண்டால், நூறாயிரக்கணக்கான தமிழ் உள்ளங்கள், எரிமலையோ புயற்காற்றோ என்று வியக்குமளவிற்கு உணர்ச்சியூட்டப் பெற்றிருக்கின்றன என்பதை அரசினர் அறியார்போலும். பேராசிரியர் இலக்குவனார் ஊட்டிய தமிழ்உணர்ச்சி தமிழர் உள்ளங்களில் பெருந்தழலாகக் கொழுந்து விட்டெரிகிறது. ஆட்சியாளர்கள் சில சமயங்களில் ஏமாளித்தனமாக நடந்து கொள்வார்கள் என்பதற்குப் பேராசிரியரைக் கைது செய்து சிறைப்படுத்தியது ஓர் எடுத்துக்காட்டாகும். அவர் இந்த ஒரு காரியத்தில் ஈடுபட்டிருந்த தொடக்கக் காலத்திலேயே கைது செய்திருந்தால் புத்திசாலித்தனமான அரசு என்று சொல்லலாம்.

செய்ய வேண்டினவெல்லாம் செய்தான பிறகு, அவர்தம்

பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் பெறவேண்டிய தமிழ் உணர்ச்சி அனைத்தும் பெற்றுத், தமிழ் காக்கப் புறப்படும் வேளையில், பேராசிரியரைக் கைது செய்தது மேலும் தமிழார்வத்தைக் கிளறி விடுவதாகத் தூண்டி விடுவதாக அமையுமே தவிர, தமிழ் உணர்ச்சியைத் தணிப்பதாகவோ, ஆர்வத்தைக் குறைப்பதாகவோ எப்படிக் கூற முடியும்? நாட்டில் தமிழார்வம் கொழுந்துவிட்டுத் தழலாய் எரிகின்ற போது, பேராசிரியரைக் கைது செய்வதும், பெருந்தொல்லைக்கு ஆளாக்குவதும், சமையலெல்லாம் ஆன பிறகு அடுப்பை அணைத்தது போலாகுமே தவிர, அரசினர்க்கு என்ன பயன்கிட்டப் போகிறது? சமையலான பிறகு அடுப்பை அணைத்துவிட்டால் மறுபடியும் அடுப்பை மூட்ட முடியாதா? அந்த அடுப்பை இப்போது பொது அடுப்பாக மாற்றிவிட்டார்கள். யாரும் அந்த அடுப்பில் சமைக்கலாம். இலக்குவனாரைக் கைதுசெய்து சிறைப்படுத்தியதும் வேலூர்ச் சிறையில் அடைத்துக் கொடுமைப்படுத்தியதும் வேலையைப் பறிக்கத்தக்க சூழ்நிலையை உருவாக்கியதும் சிறையிலிருந்து வெளியே போகச் செய்து ஒற்றர்களைக் கொண்டு உளவறியச் செய்வதும் ஆதிக்கத்தில் ஈடுபாடு கொண்ட ஓர் அரசு ஈடுபடுகின்ற ஏமாளித்தனமான செயல்களில் ஒன்றுதான்.

மொழிப்போரில் முப்பதாண்டு காலமாக ஈடுபட்ட பேராசியர் வகித்த முன்னோடிப் பங்களிப்பைப் பேரறிஞர் அண்ணா அவர்களின் உரை தெள்ளிதின் விளக்குகிறது.

‘பேராசிரியர் இலக்குவனாரே மொழிப்போர்த் தந்தை’ என்பதை எடுத்தியம்பி ஆய்வுசெய்துள்ள திருவாட்டி து.சுசீலா பின் வருமாறு தம் ஆய்வேட்டில் குறிப்பிட்டுள்ளார்:

> தி.மு.க. கை விட்டுவிட்ட பிறகும் இந்தி எதிர்ப்புப் போராட்டங்களை மாணவர்கள் தொடர்ந்து நடத்திய செய்தி இப்போராட்டங்களைத் தலைமையேற்று நடத்தியவர்கள் மாணவர்கள் என்பதை வலியுறுத்துகிறது. அத்தகைய மாணவர்களின் பங்களிப்பிற்கு மூலக் காரணமாகவும் விலைவாசிப் போரில் ஈடுபட்டிருந்த தி.மு.க. கழகத்தினரை இந்தி எதிர்ப்புப்போரில் ஈடுபடுத்திய கோட்பாட்டாளராகவும் (Theoretician) இலக்குவனார் தமிழ்உரிமைப் போர் வரலாற்றில் அழியா இடம் பெற்று விளங்குகிறார். எனவே, இவரை 1965 மொழிப்போர்த் தந்தை எனக் குறிப்பிடல் மிகையாகாது. (பக்கம் 105-106: பேராசிரியர் டாக்டர் சி.இலக்குவனார் மொழிப்போர்த்தந்தை)

குறள்நெறி இதழுக்குப் பரவலான வரவேற்பிருந்தது. எனினும் தொழில்முறை விற்பனையாளர்கள் சரிவரத் தொகையை அனுப்பாத

இடர்ப்பாடும் இருந்தது. கல்லூரி மாணவர்கள் ஆர்வத்துடன் திரட்டிப் பணம் அனுப்பிக் குறள்நெறி இதழ்களைப் பெற்றமையே உதவியாக அமைந்தது. தமிழ் ஆர்வலர்களும் தாமே முன்வந்து முன்தொகை அளித்துக் குறள்நெறியைப் பெற்று ஊக்கப்படுத்தினர். அடுத்துப் பேராசிரியர், குறள்நெறி இதழை ஆங்கிலத்திலும் (Kural Neri) திங்கள் இருமுறை இதழாக நடத்தினார். அதற்கான தேவையைப் பின்வருமாறு கூறினார்:

> தமிழகச் செய்திகள் தமிழ்த் தொண்டு பற்றிய நிகழ்ச்சிகள், தமிழர்களின் உள்ளக்கிடக்கை முதலியன பற்றி அயல்நாட்டவர்க்கு அறிவிக்க வேண்டியது தமிழ்ப் பற்றாளரின் தவிர்க்கலாகாக் கடனாகும். ஆகவே, நமது குறள்நெறி இதழை ஆங்கிலத்திலும் வெளியிடத் துணிந்துள்ளோம்.
>
> துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
> இன்பம் பயக்கும் வினை
>
> எனும் திருவள்ளுவரின் திருவாய்மொழிக்கொப்ப, சிறைப்படினும், பதவியை இழப்பினும், தமிழ்த் தொண்டில் இன்பம் காணும் யாம் இப் புது முயற்சியிலும் ஈடுபடத் துணிந்துள்ளோம்.
>
> *குறள்நெறி (மலர் 2 இதழ் 18): புரட்டாசி15,1996: 1.10.65*

சிறை வாழ்க்கையும் பதவிப்பறிப்பும் பேராசிரியரை மாற்றி இருக்கும்; அவர், தம் கொள்கைப்பாதையில் இருந்து விலகிவிடுவார் அல்லது சற்றேனும் இறங்கித் தம் உணர்வில் நீர்த்துப் போவார்; எனவே, எளிதில் மாணவர் பட்டாளத்தையும் இளைஞர் உலகத்தையும் திசை திருப்பி விடலாம் என அரசு கணக்குப் போட்டது பிழையாயிற்று. பேராசிரியர் முன்னிலும் முனைப்பாகத் தமிழ்க்காப்பிற்கான தமிழ்த்தொண்டில் ஈடுபட்டார். பதவியில் செலவழிக்க வேண்டிய நேரத்தையும் இந்தி முதன்மை எதிர்ப்பிற்கும் தமிழ்க்காப்பிற்கும் செலவிட வாய்ப்பு கிடைத்த தாக மகிழ்ந்தார். தடைமேடுகளையும் படிமேடைகளாக ஆக்குவதுதானே போராளியின் பண்பு? பேராசிரியரும் அவ்வாறே தடைகளை உடைத்து முன்னேறினார். தமிழுக்கே முதன்மை, தமிழில்தான் எல்லாம் என்னும் நிலையை உண்டாக்க அயராது உழைப்பதே தம் வாழ்நாட்பணி என்றார். இதனைப் பின்வரும் ஆசிரிய உரைப்பகுதி விளக்கும்.

> ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் எனும் கொள்கை அடிப்படையில், உறுபசியும் ஓவாப்பிணியும், செறு பகையும் நீங்கிய மக்களினத்தை உருவாக்கவும் மொழிவழி மாநிலங்கள் முழுத் தன்னாட்சி பெற்று முழு உரிமையுடன் சாதி மத வருக்க வேறுபாடு அற்ற மக்களாட்சிச் சமநிலைக் குடியரசுகளாய் இணைந்து வாழும் வன்மைமிக்க பாரதக் கூட்டரசை உருவாக்கவும், அந்தந்த மாநிலங்களில் அந்தந்த மாநில மொழிகட்கே முதன்மை என்ற அடிப்படையில் மொழிகளின் சமஉரிமையை நிலைநாட்டவும்,

தமிழ்நாட்டில் தமிழுக்கே முதன்மை தமிழில்தான் எல்லாம் என்ற நிலையை விரைவில் உண்டாக்கவும், தமிழர் பங்குபெற உரிமையுள்ள இடங்களில் எல்லாம் தமிழும் இடம் பெறவும், காலத்துக்கேற்ப, மரபு கெடாது, தமிழை எல்லா வகையாலும் வளப்படுத்தவும் ஒல்லும் வகையால் அயராது உழைப்பதே இனி எனது வாழ்நாட் பணியாகும்.

*குறள்நெறி (மலர்2: இதழ் 12): காரி 16: 1.12.65*

‘குறள்நெறி’ இதழ்கள்தமிழிலும்ஆங்கிலத்திலும்திங்கள்இருமுறைதான் வந்தன. தமிழன்பர்கள் வார இதழாக மாற்றக்கூடாதா? பக்கங்களைக் கூட்டக்கூடாதா என்றெல்லாம் வேண்டினர். வார இதழாக மாற்றுவதை விட நாளிதழாக மாற்றுவதே தக்க பணியாகும் எனப் பேராசிரியர் கருதினார். இதழ்கள் வாயிலாக மொழிக்கொலை நடைபெறுவதால் அதைத் தடுத்து நிறுத்தத் தாமே முன்முறையாக நன்முறையாக நற்றமிழில்நாளிதழ் நடத்த வேண்டும் என்று முடிவெடுத்து ‘குறள்நெறி’ நாளிதழும் தொடங்கினார். இது குறித்த நாளிதழ் ஆசிரிய உரை வருமாறு:

நற்றமிழில் உரையாடவேண்டும், எழுத வேண்டும் என்று கருதுபவர்களால் கூட நற்றமிழைப் பயன்படுத்த முடியாத சூழ்நிலை உருவாகி விடுகின்றது.

நமக்கோ நாளும் நாளும் செந்தமிழ் சாகடிக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டு பாழும் வயிற்றை வளர்த்துக் கொண்டிருக்க இயலவில்லை. ‘மெல்லத்தமிழ் இனிச் சாகும்’ எனும் பேதை மொழியை நாம் அணுவாகச் செத்தேனும் பொய்யாக்க வேண்டும் என்று உறுதி பூண்டுவிட்டோம். உள்ளம் உடைமை உடைமை எனும் திருவள்ளுவரின் திருவாய் மொழிக்கேற்ப உள்ள நாம் செந்தமிழ் காக்கும் பணியில் இச்செய்தியிதழை ஆளாக்க முற்பட்டு விட்டோம்.

நாட்டு மக்களின் நல்லெண்ணம் நம்பால் உள்ளது எனும் துணிவுடையோம். தமிழ்க்காப்பு என்பது கட்சிகளுக்கு அப்பாற்பட்டது. அனைத்துக் கட்சிகட்கும் உரியது. ஆயினும் இன்று ஆளுங்கட்சியாம் காங்கிரசு இந்திமொழித் திணிப்புக்கு உடந்தையாய் இருப்பதனால் தமிழ்காப்புக்கு உரிமை கொண்டாட இயலாது. இந்தி முதன்மை நாளும் நாளும் சுமத்தப்பட்டு வருகின்றது. இதனை அகற்றலே தமிழ்க் காப்பின் முதற்பணியாகும். உண்மைத் தமிழ்ப் பற்றுடைய காங்கிரசுக் கட்சியினர் உள்ளத்தால் நம் பக்கமே இருப்பர்.

*குறள்நெறி நாளிதழ்: ஐப்பசி16,1997:செவ்வாய்: 1.11.1966:*

பெரும் பெரும் பணமுதலைகளுடன் போட்டிப் போட்டுக் கொண்டு நாளிதழ் நடத்த வேண்டும் என்ற முடிவே பேராசிரியரின் பெரும்

துணிவையும் தமிழ்க்காப்பிற்காக எத்தகைய இழப்பையும் எதிர்கொள்ள ஆயத்தமாக இருந்த அவரின் தமிழ்ச்சால்பையும் வெளிப்படுத்தின எனலாம். தமிழ் நாளிதழ் என்றாலும் உலகச்செய்திகளைத் தமிழக மக்கள் அறிய வேண்டும் என்பதற்காகப் பன்னாட்டுச் சிக்கல்கள் பற்றியெல்லாம் கருத்துகளை வெளியிட்டார். மாணவ நிலையிலேயே ஆழ்ந்து படித்தச் சிறந்த படிப்பாளராயிற்றே பேராசிரியர். ஆகவே, படிப்போருக்காக எட்டுத் திக்கும் அறிந்து செய்திச்செல்வங்களைக் கொணரும் ஆற்றலுடன் நாளிதழை நடத்தியமையால் பெரிதும் வரவேற்பு பெறலாயிற்று. செய்திகளைத் தெரிந்து கொள்ளும் துடிப்பும் நல்ல தமிழை அறிந்து கொள்ளும் ஆர்வமும் மாணவர்களிடையே பெருகியமையால் குறள்நெறி அவர்களிடையே செல்வாக்கு பெற்றது. பின்னர்க் குறள்நெறி நாளிதழ் நின்று போனாலும் அதன் தேவை இன்றைக்கு மிகுதியாக உள்ளது. கடந்த கால வரலாற்றை உணராமல் மொழிக்கொலை புரியும் ஊடகத்தில் நாளிதழ்கள் முதன்மைப் பங்கு வகிக்கின்றன. நல்ல தமிழில் நடத்த வேண்டும் என்ற நோக்குடன் வெளிவரும் தமிழோசை இதழைத் தான் நாம் பாராட்ட வேண்டும். ஆனால், அவ்விதழினரும் விற்பனைக் குறைவிற்குக் காரணம் தமிழ்நடை எனத் தவறாகப் புரிந்து கொண்டு செய்தித் தலைப்புகளிலும் கட்டுரைகளிலும் அயற் சொல்லிற்கு இடம் கொடுத்து வருகின்றனர். தமிழ்உணர்வுச் செய்திகளையும் நல்ல தமிழில் எழுதுவதற்கான தொடரையும் வெளியிடும் தினமணியிலும் கலப்பற்ற நல்ல தமிழ்நடைக்கு முதன்மை கொடுக்காத போக்கே உள்ளது. நாம்தமிழர் உணர்வை விதைத்த பெரியார் ஆதித்தனாரின் குடும்ப இதழ்களான மாலைமுரசு போன்றவற்றில் இன உணர்வுச் செய்திகளும் கட்டுரைகளும் முதன்மையாக இடம் பெற்றாலும் மக்களிடம் நல்ல தமிழ்நடையைக் கொண்டு செல்ல வேண்டிய அரும்பணியை ஆற்றாதது வருந்தத்தக்கதே. குமரி மாவட்டத்தைத் தமிழ்நாட்டுடன் சேர்க்க வேண்டும் என்று போராடிய பெருந்தகை இராமசுப்பு அவர்கள் நிறுவிய தினமலர் இதழ்கூட மக்கள் சிக்கல்களில் கருத்து செலுத்துவது போல் மொழிச்சிக்கலும் மக்களுக்கான சிக்கல் என உணராமல் நல்ல தமிழை மறந்து விடுவதும் தமிழுக்கு எதிரான கருத்துகளுக்கு முதன்மை அளிப்பதும் வருத்தத்திற்குரியதே. தமிழின விடுதலைக்காகக் குரல் கொடுக்கும் தந்தை பெரியாரின் விடுதலை இதழில் ஒற்றுப்பிழையில்லா ஒரு தொடரைக்கூடக்காண இயலவில்லை. இவை மட்டுமல்ல, அனைத்து இதழ்களும் ஊடகங்களும் நல்ல தமிழே மக்களுக்கானது என்பதை உணர்ந்து தங்களைத் திருத்திக்கொள்ள வேண்டும். இதற்கான பணிகளைத் தமிழ் அமைப்புகள் மேலும் முனைப்பாக ஆற்றி வெற்றி பெற வேண்டும். அன்று பேராசிரியர் இலக்குவனார் விதைத்த தமிழ்உணர்வு இன்றும் மங்காமல் தமிழ் ஆர்வலர்களிடம் உள்ளது. அவர்கள் இப்பணியில் வெற்றி பெறுவதே நாம் பேராசிரியருக்குப்படைக்கும்

காணிக்கையாகும் என்பதை உணரவேண்டும்.

குறள்நெறி ஆங்கில இதழுக்கு இருந்த வரவேற்பாலும் தமிழ்நாட்டில் இருந்துவெளிவரும் ஆங்கில நாளிதழ்கள்கூடத் தமிழுக்கும் தமிழர்க்கும் முதன்மை அளிக்காததாலும், பின்னர்க் 'குறள்நெறி'/'Kuralneri' ஆங்கில நாளிதழ் நடத்த முடிவெடுத்தார். சில முன்முறை இதழ்களையும் வெளியிட்டார். ஆனால், எண்ணம் ஈடேறவில்லை.

1967 பொதுத்தேர்தல் வந்தது. பேராசிரியர் தமிழன்பர்கள், மாணாக்கர்கள் விருப்பத்திற்கிணங்கவும் தமிழ்ப்புலவர்கள் அரசியலில் ஈடுபட்டு மொழி இனக் காப்பில் அரசைச் செலுத்த வேண்டும் என்ற தம் விழைவிற் கேற்பவும், தேர்தலில் போட்டியிட விரும்பினார். கட்சிப்பின்னணியே வெற்றியை எளிதாக்கும் என்பதால் தி.மு.க.சார்பில் போட்டியிடலாம் எனக் கருதினார். பேராசிரியர் தி.மு.க.வில் சேர்ந்தால் தி.மு.க. முத்திரையால் எதிர்பார்த்த ஆதரவு கிடைக்காது என்றும் அதே நேரம் அவர் இப்பொழுதுபோல் கட்சி சார்பற்று இருந்தால் அவரது இயக்கப் பணிகளால் நடுநிலை வாக்காளர்கள் ஆதரவும் தமிழன்பர்கள் ஆதரவும் பேராயக்கட்சிக்கு (காங்கிரசிற்கு) எதிர்ப்பாகச் செயல்பட்டுத் தங்களுக்கு நன்மை பயக்கும் என்றும் தி.மு.க. தலைவர்கள் நம்பினர். பேராசிரியர் தி.மு.க.வில் சேர்ந்தால் அவர் வெற்றி உறுதியானாலும் பிற தொகு திகளில் பிறரின் வெற்றி இல்லாமல் போகும்; பொதுவான நிலையில் இருந்து பேராசிரியர் பரப்புரை மேற்கொண்டால் தி.மு.க.வின் வெற்றி எளிதாகும் என்று கணித்தனர். இது குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு குறள்நெறியில் எழுதினார்:

**தேர்தலில் நிற்கவில்லையா?**

> உள்ளூரிலும் வெளியூரிலும் உள்ள நண்பர்கள் நேரிலும் கடித வாயிலாகவும் "வரும் 67ஆம் ஆண்டுத் தேர்தலில் நிற்கவில்லையா? தவறாது நின்று வெற்றி பெறவேண்டும். அதற்குரிய செயல்முறைகளில் இன்னும் ஈடுபடக்காணோமே!" என உசாவிய வண்ணம் உள்ளனர்.
>
> தமிழ் காக்கும் பணியில் ஈடுபட்டுள்ள யாம் சட்ட மன்றத்திற்குச் சென்றும் தமிழைக் காக்கும் ஆக்கப் பணிகளை உருவாக்கப் பெரு விருப்புடையோம். இந்தி முதன்மை இன்னும் நீங்கியபாடில்லை. இந்தி முதன்மையை அகற்றப் பெரும் அறப்போரைத் தொடங்க வேண்டியிருக்கும்போல் உள்ளது. சட்ட மன்றத்தையும் அதற்குரிய களனாகக் கொள்ள வேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டுள்ளது.
>
> தமிழ்க்காப்புத் தொண்டில் ஈடுபட்டுள்ள எம்மைத் தி.மு.கழகத் தைச் சார்ந்தவனென்றே கருதியுள்ளனர். தி.மு.கழகம் இந்தியை எதிர்த்துத் தமிழ்க்காப்புப் பணியில் ஈடுபட்டுள்ளமையால் அதனை வலுப்படுத்தும் முயற்சியில் உழைத்து வருவதனால், அவ்வாறு

மக்களும் அரசும் கருதுவதில் வியப்பில்லை. ஆயினும் யாம் இன்னும் தி.மு.க.வில் உறுப்பினராகவில்லை. ஏனெனில் தி.மு.க. மேலிடத் தலைவர்கள் நீங்கள் தனியே இருந்து தொண்டாற்றுவது தான் எங்கட்கு வலிவு. எம் கட்சியில் உறுப்பினராகச் சேர வேண்டியதின்று என்று கூறினர். இக் காலத்தில் எக் கட்சியையும் சாராது தனித்து நிற்பதால் அரசியல் தொண்டு ஆற்ற முடியாது என்பதை யாவரும் அறிவர். ஆகவே தமிழ்க்காப்பு இயக்கம் ஒன்றைத் தோற்றுவித்துத் தொண்டாற்றிவரும் நான், அதன் சார்பிலேயே தேர்தலுக்கு நிற்க முடிவு செய்துள்ளேன். சிலர் பாராளுமன்றத்திற்கு நிற்குமாறு அறிவுரை கூறுகின்றனர்.

பாராளுமன்றத்தில் தமிழுக்கு உரிமையில்லை. தமிழுக்கு உரிமையில்லாவிடத்தில் தமிழர்க்கு வேலையில்லை என்பது என் கொள்கை. ஆதலின் பாராளுமன்றத் தேர்தலுக்குத் தமிழகத்தில் இருந்து யாருமே போட்டியிடுதல் கூடாது. தமிழுக்கு அங்கு உரிமை கிடைத்த பின்னரே தமிழர்கள் செல்ல வேண்டும். தமிழர்கள் அதனைப் புறக்கணிப்பதன் வாயிலாகத் தமிழுரிமையைப் பெறுதல் வேண்டும் எனும் கடப்பாட்டை உடையோம். ஆகவே, பாராளுமன்றத் தேர்வுக்குப் போட்டியிடாது சட்டமன்றத் தேர்தலுக்குப் போட்டியிட எண்ணியுள்ளோம்.

அதுவும் யாம் தங்கியிருந்து அலுவல் புரியும் திருப்பரங்குன்றத் தொகுதியிலிருந்தே போட்டியிட எண்ணியுள்ளோம்.

தேர்தல் என்பது இக்காலத்தில் நம் நாட்டில், பல ஆயிர உருபாய்களைச் செலவழிக்க வைப்பது. பொருளில்லார்க்குத் தேர்தலில் இடமே இல்லை. ஆகவே அன்பர்கள் அவரவர்களால் இயன்ற பொருளுதவியைச் செய்து எல்லா வகையாலும் உதவுமாறு தமிழின் பேரால் வேண்டுகின்றோம்.

தனிப்பட்ட முறையிலும் கட்சிச் சார்பிலும் தமிழுக்கு அனைத்துப் பக்கங்களிலிருந்தும் உதவி வரும் என்று எதிர்பார்க்கிறோம். தமிழ் வெல்க! வணக்கம்.

*குறள்நெறி நாளிதழ் : கார்த்திகை 1, 1997: 16.11.66* புதன்

பேராசிரியர் திருப்பரங்குன்றம் தொகுதியில் நிற்பதாக அறிவித்ததால், வாக்குகள் பிரிந்து ஓரிடத்தை இழக்க வேண்டி வரும் எனத் தி.மு.க.தலைவர்கள் அஞ்சினர். பிற இடங்களிலும் பேராசிரியர் ஆதரவின்றி வெற்றி வாய்ப்பை இழக்க நேரிடும் என்று கவலைப்பட்டனர். எனவே, போட்டியிடும் அறிவிப்பைத் திரும்பப் பெறுமாறும் தம் பரப்புரையால் நாடு தழுவிய வெற்றியைத் தி.மு.க.விற்கு ஈட்டித் தருமாறும் வேண்டினர். பேராசிரியர் தி.மு.க. தன்னை ஆதரிக்கட்டும் என்றார். தேர்தல் இல்லாமலேயே பேராசிரியரை

நாடாளுமன்ற (மாநிலங்களவை) உறுப்பினர் ஆக்குவதாகவும் அவர் போட்டியிடக்கூடாது என்றும் வேண்டினர். "தமிழுக்குச் சமஉரிமை தராத இந்தியஅரசின் நாடாளுமன்றத்தைப் புறக்கணிக்க வேண்டும் என்பது தம் கொள்கை என்பதால், மாநிலங்களவை உறுப்பினராக உடன்படவில்லை" எனப் பேராசிரியர் தெரிவித்து விட்டார். (பின்னாளில் நாடாளுமன்ற உறுப்பினராகவும் பேரவைத்தலைவராகவும் அமைச்சராகவும் திகழ்ந்த) சேலம் க.இராசாராம் அவர்களே மூன்றுமுறையேனும் வந்து இது குறித்துப் பேசியிருப்பார். எனினும் தி.முக.தலைவர்களின் தொடர் வேண்டுகோள்களால் பேராசிரியர் சட்ட மன்றத் தேர்தலில் போட்டியிடும் திட்டத்தைக் கை விட்டார். தம் சொந்தச் செலவில் வந்து பரப்புரை மேற்கொள்வதாகப் பலர் தெரிவித்த பொழுதும் மாபெரும் வெற்றி பெறலாம் என மாணவர்கள் நம்பிக்கையுடன் வேண்டிய பொழுதும் பேராசிரியர் தமிழ்நலன் கருதித் தேர்தலில் போட்டியிடவில்லை என உறுதியாகத் தெரிவித்தார். இது குறித்துப் பேராசிரியர்,

> "தேர்தலில் தி.மு.க.வை எதிர்த்து நிற்க விரும்பவில்லை. அவ்வாறு நிற்பதற்குப் பலர் தூண்டியதுண்டு. தி.மு.க.வின்பால் கொண்டிருந்த ஆழ்ந்த பற்று அதனை வெறுக்க இடம் கொடுத்திலது. தி.மு.க.வின் வெற்றிதான் தமிழின் வெற்றி என்று கருதிப் பல தொகுதிகட்குச் சென்று தி.மு.க.வுக்கும் கூட்டணிக்கும் சார்பாகச் சொற்பொழிவாற்றினேன்."

எனக் குறிப்பிட்டுள்ளார்.

தி.மு.க.தலைவர்களுக்கு எதிர்பாராப் பரிசாக ஆனால், உணர்வாளர்களும் மாணவர்களும் எதிர்பார்த்தபடியும் பேராசிரியர் அடுத்து ஆட்சி அமைக்கப்போகும் தி.மு.க. என்று அடிக்கடி குறித்தவாறும் தி.மு.க. ஆட்சியைப் பிடித்தது. 'ஆட்சியை மாற்றுவோம் வாரீர்' என அழைத்துப் பாட்டரங்கம் வெளிவந்து கொண்டிருந்ததற்கு ஏற்ப, தமிழ்ப் பகையாட்சி மாற்றப்பட்டுத் தமிழ்க் காப்பு ஆட்சி அமைந்து விட்டது. (குறள்நெறியும் ஓய்வு பெற்றது.) ஆனால், அவர் உழைப்பால் அறுவடை செய்த ஆட்சிப் பரிசைப் பெற்றிருந்தும் அவருக்கு உயர்வான பதவிகள் தரவேண்டும் என்ற எண்ணம் தி.மு.க.வினருக்கு எழவில்லை; பதவி பறிக்கப்பட்ட பேராசிரியருக்கு மீண்டும் பதவி வழங்கப்பட வேண்டும் என மாணவர்கள் வேண்டினர்; தமிழ்நாட்டின் வெவ்வேறு கல்வி நிலையங்களில் மாணவர்கள் கூட்டம் கூட்டிப் பேராசிரியருக்கு உடனே பதவி தர வேண்டும் எனத் தீர்மானம் இயற்றி அரசிற்குத் தெரிவித்தனர். முந்தைய பதவியைத் தருவதே சிறப்பு என எண்ணிய மூத்த தலைவர்கள் மீண்டும் தியாகராசர் கல்லூரியிலேயே அவரைப் பணிமர்த்தம் செய்ய வேண்டும் எனக் கூறினர். பேரறிஞர் அண்ணா, அரசிடம் பல பதவிகள் இருக்கும் பொழுது தனியாரை ஏன் நாட வேண்டும் என்றார். துணைவேந்தராக வேனும் அவரை அமர்த்தியிருந்தால் தமிழ்வழிக் கல்வியை எப் பொழுதோ நடைமுறைப்படுத்தி இருப்பார்; தமிழன்னை அகம்

குளிர்ந்திருப்பாள். ஆனால், ஆட்சிக்குப் புதுமுகங்கள் என்பதால் எதை எவ்வாறு செய்ய வேண்டும் என்ற பட்டறிவின்மையால், தக்கன செய்யத் தடுமாறினர்.

பேரறிஞர் அண்ணா பேராசிரியரிடம் பேசி அவருக்குத் தமிழ் வளர்ச்சி இயக்குநர் முதலான ஏதேனும் ஒரு பணியைத் தர முதலில் எண்ணினார். பெருந்தலைவர் இருந்த பொழுதே தடைநோக்கில் இருந்த அதிகாரக் கூட்டத்தார் கடும்போட்டி இருப்பதால் இவரை அமர்த்த இயலாது எனக் கூறினர். எத்தனைப் போட்டியாளர் இருப்பினும் தமிழுக்காகப் போர்க்களங்களைக் கண்டு சிறைவாழ்க்கையும் பதவி இழப்புகளும் உற்ற பேராசிரியருக்கு இணையாக அவர்கள் வருவார்களா என எண்ணவில்லை. ஆட்சிக்கு வந்த புதிது என்பதால், பேரறிஞருக்குத் தவறு எதுவும் நடந்துவிடக்கூடாது என்ற அச்ச உணர்வு மேலோங்கி இருந்தது. எனவே, அதிகாரிகளை மீறி எதுவும் செய்ய விரும்பவில்லை. சென்னை மாநிலக்கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவர்-முதன்மைப்பேராசிரியர் பணியைப் பேராசிரியருக்கு வழங்க முடிவெடுத்தனர். இதிலும் காலத்தாழ்ச்சிதான். மே 28,1967 இல்நடைபெற்ற பேராசிரியரின் மூத்த மகன் பொறி.இ.திருவேலன் அவர்களின் திருமணப் பரிசாக மணமகன் தந்தைக்குப் பணியமர்த்த ஆணை தர விரும்பியும் அதிகாரக்கூட்டத்தார் காலத்தாழ்ச்சி செய்வதாகப் பேரறிஞர் அண்ணா கடிந்துரைத்தார். சூன் 19 அன்றுதான் கோடை விடுமுறைக்குப்பின் கல்லூரி திறக்கும் என்றும் அதற்குள் ஆணை வழங்கப்பட்டு விடும் என்றும் கல்வியமைச்சர் தெரிவித்தார். தமிழுக்காகப் போராடிச் சிறைவாழ்க்கை உற்றுப் பதவி இழந்த ஒருவருக்கு அவரது உழைப்பால் ஆட்சியில் அமர்ந்தவர்கள் உடனே ஆணை பிறப்பித்திருக்கலாம். அடுத்த கல்வியாண்டு வரை காத்திருக்கத் தேவையில்லை. ஆனால், சிக்கன நடவடிக்கையாக இவ்வாறு ஒத்திப்போட்டனராம் மேதைகள்! சூன் 16 வரை ஆணை கிடைக்கப் பெறாமல் முதல்வரைச் சந்திக்கச் சென்றார் பேராசிரியர். முதல்வரின் செயலர், பேராசிரியர் முதல்வரைச் சந்தித்தால் சிலருக்குப் பாதிப்பு ஏற்படும் என்றும் எனவே, கல்விச் செயலரைச் சந்திக்கச் செல்லுமாறும் கூறினார். கல்விச் செயலர், முதலமைச்சர் அலுவலகத்திலிருந்து இசைவாணை கிடைத்து விட்டது என்றும் இன்றே பணியில் சேரலாம் என்றும் கூறினார். கல்லூரிக் கல்வி இயக்குநரிடம் தொலைபேசி வழியாக அன்றைக்குப் பேராசிரியர் பணியில் சேர ஆயத்த நடவடிக்கை எடுக்குமாறு வேண்டினார். ஆனால், ஆணை வழங்குவது தொடர்பாகச் செயலர் உசாவிய பொழுது உரிய கோப்பு எங்கே இருக்கின்றது என்றே தெரியவில்லை. பேராசிரியர்பால் அன்பு கொண்ட செயலகப் பணியாளர் ஒருவர் கோப்பினைக் கண்டு பிடிக்க உதவினார். பேராசிரியரும் அவருடன் சென்றார். தொடர்புடைய எழுத்தரிடம் தொடங்கி அங்கே, இங்கே, இங்கே, அங்கே என்று எங்கெங்கோ, பற்பல

இடங்களில் சுற்றிய பின்னர், உரிய எழுத்தரே அக்கோப்பினைக் கீழே போட்டு வைத்திருந்ததைக் கண்டனர். நாடறிந்த ஒருவருக்கே, அதுவும் முதல்வர் அலுவலகத்தில் இருந்து அவசரம் எனக் குறிப்பிட்டுவந்த கோப்பிற்கே இந்நிலை என்றால், அரசின் சிவப்பு நாடா முறையால் எளியோர் எத்தகைய இன்னலுக்கு ஆளாவர் எனப் புரிந்து கொள்ளலாம். அக் கோப்பினைக் கண்டறிந்த பின்னர் ஊதியம் குறிப்பிடாமல் ஆணை வழங்கினர். இதற்கிணங்க 18.06.67 இல் சென்னை மாநிலக்கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவராகப் பொறுப்பேற்றார். என்றாலும் சிக்கல் தொடர்ந்தது. துறைத்தலைவர் பணியை ஆற்றவேண்டும் என்றாலும் துறைத்தலைவருக்குரிய முதல்நிலைப் பேராசிரியருக்கான சம்பளம் தர இயலாது என்றனர். இரண்டாம்நிலைப் பேராசிரியர் பணி நிலை முதல்வரின் பணிநிலைக்கு இணையானது. அதனினும் மேம்பட்டது முதனிலைப் பேராசிரியர் பணியிடம். முதனிலைப் பேராசிரியர் பணிநிலையில் மேல்வரம்பில் சம்பளம் வரையறுப்பதாகக் கல்வி அமைச்சர் ஒப்புக் கொண்ட பின்னும் அவ்வூதிய நிலையைத் தரவில்லை. பல்வேறு போராட்டங்களில் சில திங்கள் கழிந்த பிறகே முதன்மைப் பேராசிரியர் நிலையிலான துறைத்தலைவர் பணியிடச் சம்பளம் தர அரசு அதிகாரிகள் முன் வந்தனர். பேரறிஞர் அண்ணா அவர்கள் விழைந்தவாறு 5 ஆண்டுகால ஒப்பந்த அடிப்படையில் அல்லாமல் ஓராண்டு மட்டுமே பணியாற்றும் வகையில் ஆணை பிறப்பித்தனர். இதிலும் வேதனை தரும் போக்குதான்.

பேராசிரியர் எங்குப் பணியில் சேர்ந்தாலும், அங்குச் சிறப்புத் தமிழில் தேவைக்கேற்ப இளங்கலை, முதுகலை முதலான வகுப்புகளை அறிமுகப் படுத்துவார். இது போல் சென்னை மாநிலக்கல்லூரியில் இளங்கலையில் தமிழ் இல்லாமல் இருந்தது. அங்குத் தமிழ் வகுப்பு கொணர்ந்தது குறித்தும் தமிழுணர்வு ஊட்டியது குறித்தும் அங்குப்பணியாற்றிய முனைவர் மெ.சுந்தரம் அவர்கள் பின்வருமாறு தெரிவிக்கிறார்(வீ.முத்துச்சாமி: இலக்குவனாரின் ஆய்வுப்பண்பு):

> “மாநிலக்கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த பொழுது பேராசிரியர் இலக்குவனார் அவர்கள் முதன்முதலில் இளங்கலைவகுப்பில் (B.A.) தமிழ்ச் சிறப்பு வகுப்பைக் கொணர்ந்தார். இவருக்கு முன் மாநிலக் கல்லூரியில் இவ்வகுப்பு இல்லை. முதன்முதல் புலவர் விழாவை நடாத்தி மாணவர்களுக்குத் தமிழ் உணர்வை ஊட்டினார். சிறந்த முறையில் சிறப்புத்தமிழ் பயிலும் மாணாக்கர் உதவித்தொகை பெற ஏற்பாடு புரிந்தார். ஆசிரியப் பெருமக்களிடையேயும், மாணாக்கரிடையேயும், ஆராய்ச்சி உணர்வும் திறனாய்வுப் புலமையும் பெருகக் கருத்தரங்குகள் நடத்தினார். இளங்கலை முதுகலை மாணாக்கர் தமிழ் உணர்வும் புலமையும் முற்றிச் சிறக்க ஆண்டுதோறும்

ஆய்வுக் கட்டுரை ஏடுகள் உருவாக்கும் திட்டத்தைக் கொணர்ந்தார். துறைப் பணிகள் அனைத்தையும் தமிழிலேயே நடாத்தினார். அடிக்கடித் தமிழ் விழாக்கள் நடத்தி ஆசிரியர்களிடையேயும் மாணவர்களிடையேயும் தமிழ் இன உணர்ச்சியையும் தமிழ் மொழி உணர்வையும் உருவாக்கினார்.

பேராசிரியர் இலக்குவனார் அவர்கள் தமிழ் இன உணர்ச்சியும், தமிழ் மொழி உணர்வும் சான்ற மூதறிஞர் ஆவார். தமிழினத்தின் வரலாற்றுத் தொன்மையிலும், தமிழ்மொழியின் வளமான தன்மையிலும் அசைக்க முடியாத பெரு நம்பிக்கை கொண்டிருந்தார். தனித்தமிழ்க் கொள்கை அவருள்ளத்தே இறுதிவரை ஒலித்துக் கொண்டிருந்தது. தமிழ்நாடு மீண்டும் பண்டைய பொற்காலத்தை அடையவேண்டுமென்று அயராது தொண்டாற்றினார். குறள்நெறிக் காவலராகவும் விளங்கினார். அடையாத இன்னல்கள் அடைந்திட்டபோதும் உடையாத உள்ளத்தோடு உயர்ந்து நின்றவர் பேராசிரியர் இலக்குவனார். வாழ்வு வளத்திற்காகத் தன்மானம் குன்றாத் தமிழ்ச்சிங்கம் அவர்; வறுமையிலும் செம்மை காத்த தண்டமிழ்ச் சான்றோர்.

தாய்த்தமிழை அழிக்க வந்த இந்தி எதிர்ப்பு அறப்போரில் முன் நின்று பாசறை அமைத்துப் பரணிபாடிச் சிறைக்கோட்டம் சென்று அச்சிறைக் கோட்டத்தைச் செந்தமிழ்க் கோட்டமாக்கிய செம்மல் அவர். கல்லூரிகளில் தமிழ் கற்பிக்கும் மொழித்திட்டம் வெற்றி பெறக் கால்நடைச் செலவு மேற்கொண்ட கன்னித்தமிழ்ச் சான்றோர் அவர். தமிழே ஆட்சிமொழியாகவும், நீதிமன்ற மொழியாகவும் வேண்டும் என்ற குறிக்கோளில் உறுதியாக நின்று அதன் வெற்றிக்காகப் பாடுபட்டார். அனைத்தும் தமிழிலேயே நடைபெறவேண்டும் என்ற வேணவா மிக்குடையவராக விளங்கினார். குறள்நெறிப்படி ஆட்சி நடைபெற வேண்டும் என்பது அவர்தம் தலையாய குறிக்கோள். உலக மொழிகளில் தமிழ்தான் முதன்மொழி என்பது அவர்தம் ஆராய்ச்சியின் திரண்ட முடிபாகும்."

இவ்வாறு பேராசிரியர் தமிழ்க்கடமையே கண்ணாகப் பணியாற்றினாலும் பணியிலும் சிக்கல்கள் தவறாமல் தொடர்ந்தன. ஆனால், முதல்வரான பேரறிஞர் அண்ணாவின் கருத்திற்கு இதைக் கொணரப் பேராசிரியர் விழையவில்லை. பேரறிஞர் அண்ணா அவர்கள் ஆளும்கட்சியாய்த் தி.மு.க.மாறியதுமே 'எங்களில் ஒருவர் நீங்கள்' எனக் கூறினார்கள். இவ்வாறு அமைச்சரவையில் பேராசிரியர் சேர வேண்டும் என்பதைப் பேரறிஞர் குறிப்பாக உணர்த்தினார். ஆனால் மூத்த தலைவர்கள் நீங்கள் அமைச்சர்களுக்கெல்லாம் அமைச்சராக விளங்குகிறீர்கள்; உங்களுக்குக் கட்சி அரசியல் ஒத்து வராது என வலியுறுத்தினர். ஆகவே, பேராசிரியர்

கட்சித்தலைவர்களே அமைச்சர்களாக ஆகட்டும் என, அதனை நாடவில்லை. பேரறிஞரைச் சந்திக்க ஒருமுறை பேராசிரியர் தலைமைச் செயலகத்திற்குச் சென்றிருந்த பொழுது அவர் தம்மைச் சந்திக்க வரிசையில் காத்திருப்பதைப் பார்த்த முதலமைச்சர் பேரறிஞர் அண்ணா அவர்கள் அதிர்ச்சி உற்றார். தன்னைச் சந்திக்கப் பிறரைப் போல் அலுவலகம் வந்து காத்திருக்கக்கூடாது என்றும் எப்பொழுது சந்திக்க விரும்பினாலும் வீட்டிற்கு இரவு 10.00மணிக்கு மேல் வந்தால் தானே வெளியே வந்து அழைத்துப் பேராசிரியருக்குச் செவிமடுப்பதாகவும் கூறினார். தமிழுக்குச் செய்யவேண்டியனவற்றை என் செவியில் சொல்லுங்கள் நான்செய்து முடிக்கின்றேன் என்றும் சொன்னார். இத்தகைய பெருந்தன்மையும் தமிழ்உணர்வும் கெழுதகைநட்பும் கொண்ட முதல்வர் பேறறிஞரிடம் பேராசிரியர் பணிச்சிக்கல் குறித்து எதுவும் தெரிவிக்கவில்லை. மக்கள் தலைவராக இருந்து முதல்வராக வந்த பேறறிஞரிடம் எந்த ஒரு வேலையும் இன்றி அன்பினால் அவரைக் காண நாள்தோறும் ஆயிரக்கணக்கில் வந்து அவரைச் சூழ இருந்தமையால் இல்லத்தில் சந்திப்பதே ஏற்றது என்பதைப் பேராசிரியர் புரிந்து கொண்டார்.

சென்னை மாநிலக்கல்லூரியில் பேராசிரியர் பணியாற்றும் பொழுதுதான் சென்னையில் உலகத்தமிழ்மாநாடு நடைபெற்றது. உலகத்தமிழ் மாநாடுகளில் பேராசிரியரைப் பங்கு கொள்ளச் செய்திருப்பின் தமிழின் பெருமையை உலகெங்கும் பரப்பியிருப்பார். கட்சிக் கண்ணோட்டத்துடன் நடந்து கொள்ளும் அரசுகள் அதற்கான உரிய வாய்ப்பை வழங்கவில்லை. பேராயக்கட்சி வழங்கும் என்று எதிர்பார்க்க இயலாதுதான். எனவே, முதலாம் உலகத்தமிழ் மாநாட்டில் அவருக்கும் பங்கேற்கும் வாய்ப்பு கிட்டவில்லை. இது குறித்து முன்னர்ப் பின்வருமாறு பேராசிரியர் எழுதியிருந்தார்:

**தமிழ் ஆராய்ச்சி மாநாடா? அரசியல் மாநாடா?**

> கோலாலம்பூரில் கூடவிருக்கும் உலகத் தமிழறிஞர் மாநாடு பற்றி முன்பொரு தடவை எழுதியிருந்தோம். முற்றிலும் தமிழுக்கு முதன்மை கொடுக்கும் தமிழ் ஆராய்ச்சி மாநாடாக விளங்குவதற்குரிய கருத்துகளையும் வெளியிட்டிருந்தோம்.
>
> அம்மாநாட்டுக்குத் தமிழகத்திலிருந்து செல்வோரையும் அதற்குத் தலைமை ஏற்றிருப்போரையும் நோக்குமிடத்து அது ஒரு தமிழ் ஆராய்ச்சி மாநாடாகுமா என்று வினவத் தோன்றுகின்றது. இங்கு எல்லா நிகழ்ச்சிகளிலும் அமைச்சர்களே முன்னிற்பது போல் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டுக்குச் செல்லும் குழுவுக்கும் முதலமைச்சரே தலைமை ஏற்றுள்ளார். இக்குழுவில் இடம் பெற்றுள்ளோரை நோக்கும்போது அரசியல்கட்சி அடிப்படையில் பொறுக்கி எடுக்கப்பட்டுள்ளவராகவே காணப்படுகின்றனர்.

செல்வோர் நாற்பதுக்கு மேற்பட்டவர் எனினும் செய்தி இதழ்களிலும் வானொலியிலும் அரசியல் தலைவர்கள் பெயர்களே முழங்கப்பட்டன. தமிழறிஞர் (டாக்டர்) மு.வ.வும் இக் குழுவில் செல்கின்றார். அவரை இக்குழுவுக்குத் தலைவராக அமைத்திருந்தால் தமிழுக்கு முதன்மை கொடுத்ததாகக் கருதப்பட்டிருக்கும்.

தமிழறிஞர்கள் எனப்படுவோர் தந்நலம் ஒன்றையே கருதி நாட்டு நலத்தையும் மொழி நலத்தையும் புறக்கணிக்கும்வரை தமிழறிஞர்கள் மதிக்கப்பட மாட்டார்கள். ஆதலின் தமிழறிஞர்கள் அரசியலில் பங்குகொண்டு நாட்டுப் பணிபுரிய முன்வரல் வேண்டும்.

பண்டைத் தமிழ் நாட்டில் தமிழ்ப் புலவர்கள் அரசியலில் முதன்மையிடம் பெற்று ஆட்சி செம்மையாக நடைபெறத் துணைபுரிந்தனரே! ஏன் இக்காலப் புலவர்களும் அவர்கள் வழியைப்பின்பற்றி வாழ்வியலின் ஒரு பகுதியாம் அரசியலில் ஈடுபடுதல் கூடாது? தமிழறிஞர்கள் அரசியலில் ஈடுபட்டுத் தலைமையிடம் பெற்றாலன்றித் தமிழ் முதன்மையிடம் பெறாது.

*குறள்நெறி : 15.4.66*

பேராசிரியரின் உழைப்பால் மக்களிடையே ஏற்பட்ட தமிழுணர்வை அறுவடை செய்து ஆட்சிக்கட்டிலில் ஏறிய தி.மு.க. ஆட்சியிலும் இதே அவலம்தான் தொடர்ந்தது. 1968இல் சென்னையில் நடைபெற்ற உலகத்தமிழர் மாநாட்டிலும்,

தமிழ்மொழிப்பற்றும் தாங்கிய புலமையும்
இல்லோரெல்லாம் இனிதிடம் பெற்றனர்
எம்போன்றோரை எள்ளியே தள்ளினர்

எனப் பேராசிரியர் வருந்தும் அளவிற்குத் தமிழ்ப்பகைவர்க்கு முதன்மை அளிக்கப்பட்டது. பகைவரையும் நட்பாக்க வேண்டும் என உணர்ந்தவர்கள் அன்பர்களின் சிறப்பைப் புறக்கணிக்கும் போக்கு இருந்தது. இருப்பினும் கட்டணம் செலுத்திப் பேராளராகப்பங்கேற்றுத் தமிழுக்கு எதிரான கருத்துகளைத் தமிழ்ப்பகைவர்கள் ஒலிக்கும் பொழுதெல்லாம் எதிர்த்து முழங்கிய அரிமாவாகப் பேராசிரியர் திகழ்ந்தார்.குறிப்பாகப்பிரான்சு நாட்டின் பேராசிரியர் ழீன் பிலியோசா இந்தியா முழுவதும் ஆரியம் பொதுமொழியாக இருந்ததாகத் தவறான கருத்து தெரிவித்தபொழுதும் ஐராவதம் மகாதேவன் கி.மு. முதல் நூற்றாண்டில்தான் தமிழ் எழுத்து வடிவம் கண்டது என வடிகட்டிய பொய்யை உதிர்த்த பொழுதும் பேராசிரியரின் கருத்துச் சம்மட்டிகள் அவற்றைத் தவிடுபொடியாக்கின எனலாம். தமிழ் மாநாடுகளின் நிலை குறித்த பேராசிரியரின் படப்பிடிப்பு வருமாறு:

இன்தமிழ் பற்றி எவரும் எதனையும்

துணிந்து கூறுவர்; பணிந்து கேட்டிடத்
தமிழரும் உண்டு, தமிழறி வின்மையால்.
தமிழ் பழித்தோனைத் தாய் தடுத்தாலும்
விடேன் எனும் வீறுவிட்டே வாழ்வோர்.
உண்மை வரலாறு ஓர்ந்து அறியாப்
புல்லறி வுடையோர், புதிய கருத்தென
இன்றமிழ் நூல்கள் எழுந்த காலத்தைப்
பின்னே தள்ளிப் பெருமை அடைவர்!
பட்டமும் பதவியும் பாரில் பெறுவர்!
சான்றுகள் காட்டி ஆன்ற உண்மையைச்
சாற்றும் புலவரைத் தூற்றி ஒதுக்குவர்!

இன்றைக்கும் இந்த நிலையே மேலோங்கி உள்ளமையால்தான் தமிழுக்காகக் குரல் கொடுப்போர் யாருமிலர் என்னும் அவலமும் மேலோங்குகிறது.

இதற்கிடையில் கல்வியமைச்சராக இருந்த நாவலர் நெடுஞ்செழியன் தமிழ்ப்பயிற்று மொழிக்கு எதிராகப் பேசியதால், அவர் தமிழ் நாவலரா அல்லது ஆங்கிலக்காவலரா எனப் பேராசிரியர் கேட்டது அவரிடம் நடுநிலை பிறழும் உணர்வை ஏற்படுத்தியது. நாவலர் உரைகளை ஆங்கில இதழிலும் வெளியிட்டு அவர் கருத்தைப் பரப்பிய பேராசிரியர் தமிழ்நலம் சார்ந்து கூறிய கருத்தைத் தனக்கு எதிரானதாக எண்ணி அவருக்கு இடையூறு தந்தார். பேராசிரியர் மதுரைத்தியாகராசர் கல்லூரியில் பணியாற்றிய பொழுது அங்குள்ள மாணவர்கள் நாவலரை விழா ஒன்றிற்கு அழைக்க இருந்தனர். கல்லூரி முதல்வர் இசைவு தராமல் தடுத்து விட்டார். பேராசிரியர் அவர்கள் கருத்தைக் கேட்கும் உரிமையைப் பறிக்கக் கூடாது என்றும் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்பதால் எல்லா வகைச் செய்திகளையும் கேட்கும் வாய்ப்பை மாணவர்களுக்கு வழங்க வேண்டும் என்றும் நல்ல பேச்சாளர்கள் அரசியல்வாதிகளாக உள்ளமையால் அவர்களைப் புறக்கணிக்க இயலாது என்றும் கூறி நாவலரைக் கல்லூரிக்கு அழைக்கச் செய்தார். யார் வருகைக்கான தடையை நீக்கப் பேராசிரியர் முனைந்து வெற்றி கண்டு வரச் செய்தாரோ, அந்த நாவலர்தாம் பேராசிரியர் தமிழகக் கல்லூரிகளில் பணியாற்றுவதை விரும்பவில்லை. அவர் எண்ணியிருந்தால் ஒருநாளிலேயே பேராசிரியரின் பணிச்சிக்கல் தீர்ந்திருக்கும்.

தமிழன்பர்கள் சிலர், மொழிபெயர்ப்பு நூல்களுக்குப் பரிசளிக்கும் திட்டம் அல்லது நிதிஉதவித்திட்டம் மூலம் ஐந்தாயிரம் உரூபாய் நிதி உதவி கிடைக்கும் என்று பேராசிரியரிடம் கூறி விண்ணப்பிக்க வேண்டினர். பேராசிரியர், தாம் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த தொல்காப்பிய நூலுக்கான நிதி உதவி வேண்டினார். உரிய பரிந்துரையுடன்

கல்வியமைச்சருக்குக் கோப்பு சென்றது. நிதி உதவி கிடைக்கும். நூல் வெளியீட்டுக் கடனை அடைக்கலாம் என எண்ணினார் பேராசிரியர். விதி வகை இல்லாவிட்டாலும்கூட இத்தகைய மொழிபெயர்ப்பை ஊக்கப் படுத்தித் தமிழின் பெருமையை அயல் மொழிகளில் எடுத்துரைக்கப் புலவர்களை ஊக்கப்படுத்த வேண்டும் அரசு. ஆனால், கல்வியமைச் சரோ, 'நம்மைக்கேட்டா எழுதினார்? அவரே நூலகங்களில் வைத்திட முயலட்டும். அவர்க்கு உதவி தேவையில்லை' எனப் பரிந்துரையை ஏற்காமல் மறுத்து எழுதியதால் அத்தொகை கிடைக்கவில்லை.

பேராசிரியரின் தொல்காப்பிய ஆங்கில மொழி பெயர்ப்புத் திறனாய்வு நூலுக்குப் பேரறிஞர்தான் அணிந்துரை வழங்கியிருந்தார். சென்னையில் உலகத்தமிழ்மாநாடு நடைபெற்ற பொழுது இதற்கெனத் தனி அமர்வை ஒதுக்கினார். (ஆனால் இந்நிகழ்ச்சியுடன் தமிழகப்புலவர்குழு வரவேற்பையும் இணைத்ததால் நிகழ்ச்சி திட்டமிட்டவாறு அமையாமல் திசை திரும்பியது.) ஒருபுறம் முதல்வர் இந்நூலைச் சிறப்பிக்கும் வகையில் தாம்போகும் வெளிநாடுகளில் இதனை வழங்குகின்றார். மறு புறம் அனைத்துக் கல்வி நிலையங்களையும் நூல்நிலையங்களையும் வாங்குமாறு ஆணையிடும் அதிகாரத்தில் உள்ள அமைச்சரோ மொழி பெயர்ப்பு நூல்களுக்கு உள்ள நிதிஉதவியைக்கூடத் தர மறுக்கிறார். இவ்வாறு, தமிழின் பேரைச் சொல்லித் தகுதிகள் பெற்றவர்கள் தமிழ்நலம் நாடாமலும் நன்றி கொன்றும் நடக்கும் போக்கால் வருந்திய பேராசிரியர் இந்நிகழ்வு குறித்துப் பின்வருமாறு நாட்குறிப்பில் குறித்துள்ளார்:

இன்னா செய்தாரை இனிமைச் செயல்களால்
ஒறுத்தல் நன்றென உரைத்த பொருளுரை
படித்து மேடையில் பாங்காய்ப் பொழிந்தும்
தமிழ்நலம் நாடிய தகைசால் உரையைப்
பொறுக்கலா ற்றாது வெறுக்கும் இயல்பால்
அரசின் சார்பில் அளிக்க இருந்த
பரிசைத் தடுத்த பரிசை என்னென
நற்றமிழ்நாடே நவில்க! நற்றமிழ்த்
தொண்டு புரிதல் துயர்க்கே கூட்டும்
தமிழ்ப் பகைத்தோர் தள்ளினர் சிறையில்
தமிழின் பேரால் தகுநிலை அடைந்தோர்
தமிழ்ப் புகழ்பாடினும் தமிழை அடக்கி
வாழவே முனையும் வன்கண்மையால்
இழக்கச் செய்தனர் எய்துறு பரிசை.
நன்றே! நன்றே! நற்றமிழ்த் தொண்டு!
யாரே பகைவர்! யாவரே நண்பர்!
எவர்வரின் இன்றமிழ் செழிக்கும் என்று
உடல்பொருள் உயிர் இழப்பையும் எள்ளி

தொண்டு செய்தோ மோதுயர் நலிந்திட
அவரே மாறுறின் அன்னைத் தமிழ்தான்
வாழ்தல் எங்ஙனம்? வையக மதனில்
ஆகுல நீரரே அடைவர் பதவிகள்!
உண்மையாளர்கள் ஒடுங்கி மாள்வரே!

பிறருக்கு முறைப்படி கிடைக்க வேண்டிய உதவி மறுக்கப்பட்டாலோ காலத்தாழ்ச்சி செய்தாலோ சண்டையிட்டு வாங்கிக் கொடுக்கும் பேராசிரியர் தமக்கான உதவி என்றதும் வேறு முயற்சியில் ஈடுபடவில்லை; முதல்வரின் கவனத்திற்கும் கொண்டு செல்லவில்லை. தமிழ்ப்பகைவர்கள் உயர் பதவிகள் பெறுவது விரைவில் பெருகி இன்றைக்கு அவர்கள் மட்டுமே பதவிகளும் பரிசுகளும் பெறும் தீங்கான நிலை உள்ளது. தமிழ் நாட்டில் தமிழர் தலைமையும் முதன்மையும் பெறுவது என்றோ?

இச்சூழலில் ஐதராபாத்திலுள்ள உசுமானியப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவர் பதவிக்குத் தகுதியானவர் யாரும் தமிழ்நாட்டில் இல்லை என்று அரசு தெரிவித்தது. "யாருமில்லை என்று ஏன் சொல்கிறிர்கள்? நான் செல்ல ஆயத்தமாக உள்ளேன்" எனப் பேராசிரியர் அப்பணியிடத்திற்கான இசைவைத் தெரிவித்தார். தமிழ்நலப் போராளியின் உழைப்பால் பயன்பெற்றவர்கள், அவரது வழிகாட்டுதல் தேவை எனக் கருதி இங்கேயே வைத்துக் கொள்ளாமல் அப்பணியில் அமர்த்த வகை செய்தனர். இது குறித்த பேராசிரியரின் வேதனை வரிகள் பின்வருமாறு:

அமைச்சகம் அன்பாய் என்னை அழைத்து,
"நம்முடை அரசில் நற்பணி யாற்றிப்
பல்புகழ் பெற்றிடும் பாங்குகள் இலையோ?
இன்தமி ழரசின் இனிய துணையாய்
இருத்த லின்றி ஏகுதல் ஏனோ?
விருப்பம் தவிர்க; மேவுக இங்கென"
அடுத்து மொழிந்து தடுத்து விடாமல்
கொடுத்தது இசைவு உவகை கொண்டே!

மாணவர்களும் தமிழன்பர்களும் "தமிழ்ப்பகைவர்கள் உங்களைச் சிறையில் தள்ளினர்; தமிழ்ப்பற்றாளர்கள் நாடு கடத்துகின்றனர். நீங்கள் செல்ல வேண்டா" என அன்புடன் வேண்டினர். பேராசிரியர் அவர்களை எல்லாம், "அயலகம் செல்வது தமிழ்ப்பணிக்காகத்தான்" என அமைதிப்படுத்தி விட்டு உசுமானியப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக (சூன்20, 1968 இல்) பணிப்பொறுப்பை ஏற்றார்.

ஆந்திர மாநிலத்திலும் பேராசிரியரின் தமிழ்ப்பணி தொடர்ந்தது. தமிழ் மக்கள் மிகவும் எளிய நிலையில் இருப்பதை அறிந்து அவர்களுக்கேற்ப கல்வி நேரத்தை மாற்றியமைத்துத் தமிழ் படிக்கச் செய்தார்.

இடையில் பேறறிஞர் அண்ணாவின் மறைவு (பிப்.2,1969) அவரைப் பெரிதும் பாதித்தது. இருவருக்குமே ஒருவர்மீது மற்றொருவருக்குப் பெருமதிப்பும் பேரன்பும் இருந்தன. பேரறிஞர் அண்ணா அவர்களின் வெளிநாட்டுப்பயணங்களை

ஆயிரக் கணக்கில் அமெரிக்கா சென்றுள்ளனர்
தமிழராய்ச் சென்று தமிழ்ப்புகழ் அறிந்திட
ஒல்காப் புகழுடைத் தொல்காப்பியத்தையும்
உலகப் பொதுமறை உயர்திருக்குறளையும்
நெஞ்சையள்ளும் நீள் புகழ்ச் சிலம்பையும்
தம்முடன் கொண்டே தமிழ்உரு வெடுத்துச்

சென்றதாகப் பாராட்டினார். தொல்காப்பியம் எனக் குறிப்பிடுவது பேராசிரியரின் ஆங்கில மொழிபெயர்ப்பையே ஆகும். வெளிநாடுகளுக்குச் செல்லும்பொழுது அங்குள்ள பல்கலைக்கழகங்களுக்கு இந்நூலை அளித்தார். குறிப்பாக ஏல் பல்கலைக்கழகத்தில் அளித்து அங்குள்ள மாணாக்கர்களுக்கு இதன் அடிப்படையில் வகுப்பும் எடுத்தார். போப் ஆண்டவரைச் சந்திக்கும் பொழுதும் தமிழ் நாகரிகத்தின் பெட்டகமாகத் திகழும் இந்நூலை அளிப்பதாக எழுதி அளித்தார். தம் மீதும் தமிழின் மீதும் பற்று கொண்டிருந்த பேரறிஞர் அண்ணாவின் மறைவு குறித்துக் கையறுநிலைப்பாடலும் பாடினார்.

பேரறிஞர் அண்ணாவின் மறைவிற்குப்பின், ஆட்சியாளரின் பதவியை நிலைப்படுத்திக்கொள்வதற்கான விட்டுக் கொடுத்தல் களும் ஒத்துப்போதல்களும் எதிர்பார்த்த தமிழ்ப் பயன்களைத் தரவில்லை. இதனால் பேராசிரியர் வேதனை உற்றார். உசுமானியாப் பல்கலைக்கழகத்திலோ, தமிழில் இருந்து பிறந்தனவே தெலுங்கு முதலான தமிழ்க்குடும்ப மொழிகள் என்னும் உண்மையை ஏற்காத தெலுங்குத் துறையினர் தெலுங்கின் மகள் தமிழ் என்றும் தெலுங்கின் தங்கை தமிழ் என்றும் உண்மைக்கு மாறான கருத்துகளைப் பரப்பி வந்தனர். அவர்களிடம் தமிழின் தொன்மையையும் தாய்மையையும் விளக்கினார். உள்ளம் ஒருபுறம் தமிழ்த் தொண்டில் ஈடுபட்டுக் கொண்டிருந்தாலும் மறுபுறம் நாடுகடத்தப்பட்டதாக எண்ணி வருந்தியது. தமிழ்க்கனவுகளை நிறைவேற்றும் ஆட்சி வந்த பின்பு தாம் இருக்க வேண்டிய இடம் தமிழ்நாடுதானே. ஆனால், அயலவர் நாட்டில் வாழும் சூழல் வந்து விட்டதே என வேதனை உற்றார். தமிழன்பர்களும் தமிழ்த்துறையினரும் இதே போன்ற எண்ணம்கொண்டு எழுதியும் பேசியும் வந்தனர். பேராசிரியருக்குத் தாய்மண் நாட்டம் மிகுந்ததால், தாம்முன்பு பணியாற்றிய தெ.தி.இந்துக்கல்லூரியினர் அழைப்பை ஏற்று அங்கே 1.6.70 இல் முதல்வராகப் பணியில் சேர்ந்தார்.

நாகர்கோயில் தெ.தி.இந்துக்கல்லூரியில் முதல்வராகப் பணியில்

சேர்ந்ததும் பேராசிரியரால் கல்லூரி பொலிவு பெற்றது குறித்தும் அவரது பண்புநலன் குறித்தும் அங்குப் பணியாற்றிய முனைவர் ச.சுப்பிரமணியன் பின்வருமாறு தெரிவித்துள்ளார் (வீ.முத்துச்சாமி: இலக்குவனாரின் ஆய்வுப்பண்பு):

> "பேராசிரியர் இலக்குவனார். . . முன்னறிவிப்பில்லாதபடிப் பேசச் சொல்லினும் நன்கு பேசும் நல்லாற்றல் படைத்தவர்கள். பகுத்தறிவோடு எதிர்நீத்தம் செய்யவல்ல புலமையாளர்.
>
> வகுப்பில் சென்று ஓய்வெடுக்கும் பழக்கம் பேராசிரியர் இலக்குவனார் அவர்களிடம் யான் கண்டதில்லை. அஞ்சாது சென்று, எப்பாடத்தையும் கற்பிக்கும் இயல்பினர். பலவாண்டுப் பயிற்சியால் முன் தயாரிப்புக்கூட வேண்டாதபடிக் கற்பிப்பார். சிலபோது புதிய சிந்தனைகளையும் புகுத்துவார். நாநலம், பரந்த செய்தியினை அவர் வகுப்பில் காணலாம்.
>
> பேராசிரியர் இலக்குவனார் அவர்களைப் போல் ஆசிரியர் குலத்தில் அஞ்சா நெஞ்சத் தலைவரை நான் பார்த்ததில்லை. பிற நிலையிலும் அவர்கள் அவ்வாறே. அன்புக்கு மிக்க அன்பாவார். பண்புக்குப் பண்பாவார். பகைக்குப் பகையாவதற்குத் தயங்கார். பொருளால் அவர்களுக்குச் செலவு மிகவுண்டு. வரவு அதற்குத் தக்கவாறில்லை. ஆயினும் கொடைக்கும், ஏழைக்கிரங்கிப் பொருளுதவி புரிவதற்கும் தயங்கார். தந்நிலை தெரிந்தும் செலவிற்கஞ்சிச் சிறியராகார். ஏழை என்று தெரிந்தால் எவ்வகையினும் உதவ முயல்வார். முற்போக்கு எண்ணமுடையவர். தவறு என்று கண்டால் யாரையும் எதிர்க்கத் தயங்கார். அவர் ஆற்றல் அளவிடற்கரியதாகும்.
>
> தமிழ் அவர்க்குயிர். திருக்குறள் அவர்க்குத் தேன். இவ்விரண்டையும் யாரும் குறைகூறக் கேட்டால் அவர் முகம் அவர்நாவிலிருந்து பின்வரும் சொல்லுக்கு முன்னோடியாகும்.
>
> ...குடும்பப் பாரத்தால் பொருள்தேவை மிகவிருந்தும் தம் தரத்தில் குறையவில்லை பலநிலையில்."

சிறப்பான கல்வியையும் தமிழுணர்வையும் ஊட்டி வழக்கம்போல் சிறப்பாகப் பேராசிரியர் பணியாற்றுகையில் அடுத்த உலகத்தமிழ்மாநாடு பற்றிய அறிவிப்பு வந்தது. இதற்கிணங்கப் பிரான்சில் நடைபெற்ற (சூலை 15-18,1970) மூன்றாவது உலகத்தமிழ் மாநாட்டில் பேராசிரியர் பங்கேற்பார் என்றே அனைவரும் எதிர்பார்த்தனர். அந்த நம்பிக்கையை அப்போதைய முதல்வர் விதைத்திருந்தாலும் மாநாட்டுப் பேராளர்கள் அறிவிப்பில் பேராசிரியர் பெயர் இல்லை. உலகத் தமிழ் மாநாட்டில் ஏன் பங்கேற்கவில்லை எனப் பேராசிரியரிடம் செய்தியாளர்கள் கேட்ட பொழுது, தமிழறிஞர்களைப் பங்கேற்கச் செய்ய வேண்டும்

என்னும் திட்டம் இருப்பின் என்னையும் அனுப்பியிருப்பர். ஆனால், கட்சிகளின் சார்பாளர்களாக அனுப்பப்பட்டிருப்பதால் எக்கட்சியையும் சாராத தான் அனுப்பிவைக்கப்படவில்லை என்றார். இது குறித்து அப்போதைய முதல்வரிடம் செய்தியாளர்கள் வினவிய பொழுது, அக்கால மன்னர்கள் புலவர்களாகவும் இருந்துள்ளனர். அதுபோல் இப்போதைய ஆட்சியாளர்கள் புலவர்களாகவும் திகழ்வதால் பங்கேற் கின்றனர் என மழுப்பினார். எனினும் (உலகத் தமிழ் மாநாடு முடிந்த பின்னர்) பேராசிரியர் வராமையால் வருந்திய அறிஞர்களால், பிரான்சு நாட்டிற்கு வருமாறு அழைப்பு வந்தது. அவர்களின் செலவேற்பாட்டில் அழைப்பதாகவும் ஆனால், பிரெஞ்சு அல்லது தமிழ் தவிர ஆங்கிலம் போன்ற வேறுமொழியில்பேசுவதாக இருப்பின் பேராசிரியர் தம் சொந்தச் செலவில் மொழிபெயர்ப்பாளரை அழைத்து வர வேண்டும் என்றும் தெரிவித்து இருந்தனர். பிரான்சு நாட்டினரின் மொழிப்பற்றைப் பேராசிரியர் வியந்து போற்றினார். எனினும் தாம் பின்னர் வருவதாகத் தெரிவித்தார். ஆனால், அத்தகைய வாய்ப்பு அமையவில்லை.

பேராசிரியர் சி.இலக்குவனார் நிறுவிய குறள்நெறி இதழை அவர் இரண்டாம் மகன் பேரா.மறைமலை(அப்பொழுது மாணாக்கராக இருந்தார்) நடத்தி வந்தார். எனினும் எதிர்பாரா நேர்ச்சிக்கு ஆளானமையால் 1969 இல் இதழை நிறுத்த வேண்டிய சூழல் ஏற்பட்டது. தமிழகம் திரும்பிய பேராசிரியர் தமிழால் அமைந்த அரசால் தமிழ்ப்பகைவர்கள் பயன்பெற்றுத் தமிழுக்கு எதிர்பார்த்த நன்மை விளையாதது கண்டு உள்ளம் வெதும்பினார்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்

என்பது தெய்வப்புலவர் திருவள்ளுவர் அருள் நெறி அல்லவா? எனவே, மீண்டும் இதழ்ப்பணியில் ஈடுபட விழைந்தார். தமிழ் முனை, தமிழ் உலகம், என்பனபோல் தமிழ் எனத் தொடங்கும் பெயர்களைக் கொடுத்து அவற்றில் ஒன்றிற்கு இதழ்இசைவு தர வேண்டினார். ஆனால் இசைவு கிடைக்கவில்லை. ஒருமைப்பாடு, ஒற்றுமை என்ற பெயர்களை அளித்தார். இவை யாவும் இந்திய ஒருமைப்பாடு அல்லது ஒற்றுமைக்கு எதிரான தமிழக ஒருமைப்பாடு அல்லது தமிழர் ஒற்றுமையைக் குறிப்பன என அதற்கும் மறுப்பே விடையாக வந்தது. தூய்மை என்ற பெயரை வேண்டியதற்குத் தனித்தமிழ் என்ற போர்வையில் தனித் தமிழ் நாடு கேட்பதற்கான இதழ் என மறுத்தனர்.

மாநிலத் தன்னாட்சி என்றெல்லாம் பேசுகின்றோம். இன்றைக்கும் இதழ்களின் பெயரை முடிவெடுக்கும் அதிகாரம் மத்திய அரசிடமே உள்ளது. ‘தமிழ்த்தென்றல்’ எனப் பதிவு வேண்டியவர்க்கு மாருதம் என்றால் யாவருக்கும் தெரியும்; ‘தமிழ் மாருதம்’ என வையுங்கள் எனக்

கூறி அதை ஒப்புக் கொண்ட பின்பே இசைவு தந்தனர். 'செந்தமிழ்' இதழிற்கான அஞ்சல் இசைவாணை விவரம் கிடைக்காததால் புதியதாகப் பதிவு முயற்சி மேற்கொண்ட பொழுது 'செந்தமிழ்' என்னும் பெயரை மாற்றுமாறு தெரிவித்தனர். மாறி மாறி ஆட்சியில் இருப்பவர்களும் இருந்தவர்களும் ஏதேனும் ஒரு சமயம் மத்தியில் பங்கு வகிப்பதால் அதைப் பயன்படுத்தி மாநில உரிமைகளை மீட்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் வேறு நோக்கில் செயல்படுவதால் நம் உரிமைகள் பறிக்கப்படுகின்றன. இந்நிலை என்று மாறும் எனத் தெரியவில்லை.

இறுதியில் முன்பு நடத்திய குறள்நெறிப் பெயரையே தருவதாகக் கூறினர். அதனையே ஏற்றுப் பேராசிரியர் குறள்நெறி இதழைத் தொடங்கினார். அதன் தேவை குறித்துப் பின்வருமாறு ஆசிரியருரையில் தெரிவித்தார்:

> "இப்பொழுது தூய தமிழ்ப் பற்று மக்களிடையே குறைந்து வருகின்றது. வண்டமிழ்க் காப்புக்குரிய மாணவர் அணியும் திசைமாறிச் செல்லத் தொடங்கியுள்ளது. தமிழ்ப் பகைவர்கள் ஆங்காங்குத் தலை காட்டத் தொடங்கியுள்ளனர். தமிழ்ப் பற்றாளர் போல் நடித்து தமிழக அரசால் பயனும் பெறத் தொடங்கியுள்ளனர். இந்தி வல்லாண்மை இன்னும் ஒழிந்த பாடும் இல்லை. ஆகவே, குறள்நெறியின் தொண்டு மீண்டும் வேண்டப்படுகின்றது. இதழ் ஒன்றை வெளியிடுவதனால் ஏற்படும் இடர்ப்பாடுகளை நன்கறிவேன். பல முறை எண்ணி எண்ணி மீண்டும் வேண்டாம் இந்தத் தொல்லை என்று வாளாமை பூண்டதும் உண்டு. ஆயினும் தமிழ் நாட்டுச் சூழ்நிலை குறள்நெறியின் தொண்டை வேண்டி நிற்கின்றது என்ற உணர்வு என் உள்ளத்தில் மேலோங்கி எழுந்துள்ளது. ஆங்காங்குள்ள அன்பர்கள், குறள்நெறியை மீண்டும் தொடங்குங்கள் என்று அன்பாணை பிறப்பிக்கின்றனர். தமிழ்ப் பணி புரிவோர்க்கு ஒரு கருவியும் வேண்டப்படுகின்றது. ஆதலின் குறன்நெறியை மீண்டும் தொடங்குகின்றேன்."

*குறள்நெறி (மலர் 4 : இதழ் 1) : புரட்டாசி 25, 1995 : 11.10.70*

உலகத் தமிழ் மாநாட்டில் பேராசிரியரை எதிர்பார்த்து ஏமாற்றமுற்ற பிற நாட்டுஅறிஞர்களும் தத்தம் நாட்டுப் பல்கலைக்கழகங்களுக்குப் பேராசிரியரை அழைத்தனர். பேராசிரியரும் ஐரோப்பிய நாடுகள், ஆசிய நாடுகள் என ஒவ்வொரு பகுதியாகச் சுற்றுப்பயணம் மேற்கொண்டு மொழிகளின் தாயாம் தமிழின் சிறப்பைப் பரப்பத் திட்டமிட்டார். முதலில் திசம்பர் 1970 இல் பயணம் மேற்கொள்வதாக இருந்தார். இது குறித்து 11.10.70 குறள்நெறியில் வந்த செய்தி வருமாறு:

> பேராசிரியர் சி.இலக்குவனார் அவர்களுக்கு உலகச் சுற்றுப்பயணச் செலவுச் சீட்டுகிடைத்துள்ளது. உலகப் பெருநாடுகளின்

பல்கலைக்கழகங்களின் மொழி ஆராய்ச்சித் துறையினரிடமிருந்து அழைப்புகள் வந்துகொண்டிருக்கின்றன.

தொல்காப்பியம், திருக்குறள், சங்க இலக்கியம் முதலியன பற்றி விரிவுரையாற்றவும் இதுவரை வடமொழிப் பற்றாளரால் பரப்பப்பட்டுவந்துள்ள தவறான கருத்துகளைச் சான்றுகளுடன் மறுத்துரைக்கவும் இப்பயணத்தை மேற்கொள்கின்றார். இவருடன் இந்துக்கல்லூரி ஆட்சிக்குழுத்தலைவரும் புகழ்பெற்ற வழக்குரைஞருமான கிருட்டின பிள்ளையும் செல்லுகின்றார். இப்பயணம் திசம்பர் மாதத்தில் மேற்கொள்ளப்படலாம்.

பணி நிறைவு தொடர்பாகத் துணைவேந்தர் சிக்கலை எழுப்பி நெருக்கடி அளித்தமையால் அப்பொழுது அயலகப் பயணம் மேற்கொள்ளவில்லை. நாகர்கோயிலில் இந்துக்கல்லூரி முதல்வராக 1971 மேத்திங்கள்வரை அதாவது 70-71 ஆம் கல்வி ஆண்டுமுழுமையும் பேராசிரியர் பணியாற்றுதற்கு உரியவர். ஆனால், துணைவேந்தர் தெ.பொ.மீ. நடைமுறை ஆண்டிலேயே ஓய்வு பெற வேண்டும் எனக் கட்டாயப்படுத்தி 25.12.1970 இல் ஓய்வு பெற வைத்தார். மாற்றான் தோட்டத்து மல்லிகையைப் போற்றத் தெரிந்தவர்களால் முற்றத்து முல்லையைக் காக்கத் தெரியாமையால் தமிழ், தமிழ், தமிழ் எனத் தமிழாக வாழ்ந்து வதைபடுபவருக்கு உரிய சிறப்புகளைச் செய்யத் தெரியவில்லை. எனவே, பணி விடுவிப்பு வழங்கப்பட்டகொடுமை நிகழ்ந்தது.

தமிழ்நாடெங்கும் தம் சொந்தச்செலவில் பரப்புரை மேற்கொண்டு தமிழ்மொழி, இனப் பண்பாட்டுப் பற்றை விதைத்துத் தமிழ்உரிமை உணர்வைக் கிளர்ந்தெழச் செய்த பேராசிரியர் போதிய பொருள் வளம் பெற்றிருப்பின் தேமதுரத்தமிழோசை உலகெலாம் பரவும் வகை செய்திருப்பார். அவ்வப்போது அமைந்த பணி நீக்கங்களும் தம்வருவாயை இதழ்ப்பணிகளிலும் பிற வகையிலும் எனத் தமிழ்நாட்டிலேயே செலவிட்டதும் அயலகப் பரப்புரையை மேற்கொள்ள இடம்தரவில்லை. எனினும் கீழை ஆசிய நாடுகளுக்குத் தமிழ்த்தூதராகச்சென்று வந்தார். அதை முன்னிட்டு மதுரைத் தமிழ்ச்சங்கம் சார்பாக 10.9.71 இல் பாராட்டி வழியனுப்பும் விழா நடைபெற்றது. அதில் நிறைவாகப் பேராசிரியர் நன்றிஉரையாற்றினார். அவ்வுரையின் ஒரு பகுதிச் செந்தமிழ் இதழில்(செப்தம்பர் 1971: பக்கம் 63)வந்துள்ளது. அது வருமாறு:

கீழை நாடுகளில் எனக்குத் தெரிந்த நண்பர்கள் பலர் இருக்கின்றார்கள். எனவே, அங்கு முதலில் செல்கிறேன். மேலும் வாய்ப்பு ஏற்படும்போது,மேற்கு நாடுகளுக்கும் செல்வேன். வெளி நாடுகளில் தமிழ்மொழியின் உண்மையான வரலாறு பரவவில்லை; தமிழின் மெய்ப்புகழ் தெரியவில்லை. அவற்றைத் தெளிவாகவும்

விளக்கமாகவும் அங்கு எடுத்துச் சொல்வேன்.

உலகில் பல மொழிகள் தோன்றுவதற்குமுன் இங்குத் தமிழ் பிறந்தது; வளர்ந்தது. மதுரை மாநகரில் தமிழ்ச்சங்கம் தோன்றியது. மாங்குடி மருதன் தலைமை தாங்க ஆயிரக்கணக்கான புலவர்கள் அங்குத் தங்கித் தமிழ் ஆராய்ந்தார்கள். அதற்குச் சான்றாக,

உலகமொடு நிலையஇய, பலர்புகழ்சிறப்பின்,

மாங்குடி மருதன் தலைவனாக

என்ற புறநானூற்றுப் பாடலையும் எடுத்துக் காட்டினார்கள்.

மேலும் டாக்டர் அவர்கள் பேசும்போது எனக்கு இறைநம்பிக்கை உண்டு. 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்ற கொள்கையில் நிற்பவன் நான். தெய்வ நம்பிக்கை வேறு. புராணக் கதைகள் வேறு. புராணக் கதைகளை நாம் ஒப்புக் கொள்ள வேண்டியதில்லை.

நாம், இன்று நமக்குப் புரியாத வடமொழியில் அருச்சனைகள் செய்கின்றோம். இறைவனைப் போற்றுகின்றோம். வாழ்த்துகின் றோம். நல்ல தமிழால் நாளும் இறைவனை வணங்க வேண்டும். தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் தமிழ்மொழியில் அருச்சனை நடைபெறவேண்டும்.

தமிழ்மொழியில் அருச்சனைக்குரிய பாக்கள் நிறைய உள்ளன. மாணிக்கவாசகர் பாடிய, போற்றித் திரு அகவல் என்ற இலக்கியமே போதுமானதாகும். நான் வெளிநாடு சென்று வந்தபின் தமிழ் அருச்சனை தமிழ்நாட்டில் நடைபெறாவிடில், அதற்காகப் போராட்டம் ஒன்று தொடங்குவேன். அப் போராட்டத்தில் தமிழ் அன்பர்கள் அனைவரும் கலந்து கொள்ளுமாறு அழைக்கின்றேன் - என்று அறிவித்தார்கள்.

அதுபோன்று மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் 49 தமிழ் அறிஞர்களை மதிப்பியல் புலவர்களாகச் சேர்த்து ஒரு மன்றம் இச்சங்கத்தில் அமைக்க வேண்டும். அப்புலவர் மன்றம் தமிழ் நாட்டில் வெளியாகும் நல்ல நல்ல நூல்களை நாடி அறிந்து அவற்றிற்குப் பரிசளித்துச் சிறப்பு செய்தல் வேண்டும். பயிற்சிமொழி என்ற தமிழ்நாடு அரசினரின் கொள்கையினைத் தமிழ்ச்சங்கம் பலவகையிலும் முயன்று பரப்புதல் வேண்டும். தனித் தமிழ் இயக்கத்தை இச்சங்கமே முன்னின்று நடாத்துதல் வேண்டும். இன்ன பிற நற்செயல்களை இத்தமிழ்ச்சங்கம் ஏற்று நடத்துமாயின் தமிழ்நாட்டின் முதலமைச்சர் டாக்டர் கலைஞர் அவர்களின் உதவி இச்சங்கத்திற்கு உறுதியாகக் கிடைக்கும். பொதுமக்களின் ஆதரவும் இச்சங்கத்திற்குப் பெருகும்.

வடநாட்டிலுள்ள சாந்திநிகேதன், விசுவபாரதி போன்று இத்தமிழ்ச் சங்கம் வளர்தல் வேண்டும்.

பேராசிரியர் வழி நின்று மேற்குறித்த அவர்தம் கனவுகளை மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் நனவாக்க வேண்டும்.

தமிழ்ப் பயிற்று மொழியை விரும்பாத ஒருவரைத் தலைவராகக் கொண்ட வல்லுநர்க் குழுவை நியமித்தது. அதன் பயனாய் பயிற்று மொழி உரிமை கொடுத்து விட்டோம் என்று கூறி விட்டது.

எந்த நாட்டிலும் இந்த உரிமை கிடையாது. அங்கெல்லாம் இவ்வாறு வேற்று மொழியில் பயில உரிமை கேட்டால், நாட்டுப் பற்றற்ற தன்மையாகக் கருதப்பட்டு, மிகவும் வெறுக்கப்படும். இங்கு உரிமை கிடைத்து விட்டது. இன்று ஆங்கிலத்தில் பயில உரிமை கிடைத்ததைக் கருதி, நாளைக்கு இந்தியில் பயில உரிமைக் கிளர்ச்சி செய்வோரும் தோன்றுவர். பின்னர், தெலுங்கர், மராத்தியர், குசராத்தியர் போன்றோரும் கிளர்ச்சி தொடங்கக் கூடும்.

கல்லூரியில் இவ்வுரிமை கிடைத்தவுடன் உயர்நிலைக் கல்விக் கூடங்களிலும் இவ் வுரிமை வேண்டும் என முழங்கத் தொடங்கி விட்டனர். உயர்நிலைக்கல்விக் கூடங்களில் தமிழ் பயிற்றுமொழி நிலை பல ஆண்டுகள் ஆகிவிட்டன. மீண்டும் அதனை விடுத்து ஆங்கிலத்தைப் பயிற்றுமொழியாகக் கொள்ள உரிமை யளித்தால், ஆங்கிலேயர் ஆட்சியையே மீண்டும் கொள்ளும் அடிமை நிலைக்கு ஒப்பாகும். உயர்நிலைப் பள்ளிகளில் ஆங்கிலம் பயிற்றுமொழியாவதற்கு ஒரு நாளும் இசைதலே கூடாது. கல்லூரிகளிலும் ஆங்கிலம் பயிற்றுமொழித் திட்டத்தை அகற்ற ஆவன செய்ய வேண்டும். எல்லாக் கல்லூரிகளிலும் ஆங்கிலப் பயிற்றுமொழி இருக்குமேல் மாணவர்கள் இன்றுள்ள சூழ்நிலையில் அதனையே ஏற்பர்; ஏற்குமாறு தள்ளப்படுவர். தமிழ்ப் பயிற்றுமொழி வெறுக்கப்படும். ஒதுக்கப்படும்.

மதுவிலக்குச் சட்டத்தைப் புறக்கணித்து மது அருந்த உரிமை கேட்டால், மறுக்கப்படுவதுபோல், தமிழ்ப் பயிற்றுமொழித் திட் டத்தை வெறுத்து அயல்மொழி வழியாகப் படித்தலுக்கு உரிமை கேட்பதையும் மறுக்கும் துணிவு அரசுக்கு வேண்டும். தமிழ்நாட்டில் தமிழ்தான் எல்லா நிலைகளிலும் பயிற்றுமொழி என்பதனை ஏற்றுக் கொண்ட கொள்கையை உறுதியாக்குவது தமிழக அரசின் தவிர்க்கலாகாக் கடமையாகும்.

அரசியல் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட வேண்டாத கிளர்ச்சி வென்றதனால், தமிழ் உரிமை பறி போயிற்று; கல்வி நிலை யங்களில் இருந்து தமிழ் விலகும் நிலை வந்து விட்டது. தமிழ்ப் பற்றாளர்களே விழிமின்! எழுமின்! தமிழைக் காக்க விரைந்து செயல்படுமின்! ஊர்கள்தோறும் தமிழ்க்காப்புத் தொண்டர்படை அமையுமின்! உயிர் கொடுத்தேனும் உயிரனைய தமிழைக் காக்க வம்மின்!

*குறள்நெறி (மலர் 4: இதழ் 3): தை 18, 2002: 31.1.71*

மதுரைப்பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பதவி ஒழிவிடமாயிற்று. பேராசிரியர்தான் அடுத்த துணைவேந்தர் என அனைத்துத் தரப்பாரும் எதிர்பார்த்தனர். துணைவேந்தர் பணியமர்த்தத்திற்கான பெயர்ப்பட்டிப்பில் (panel) பேராசிரியர் பெயரும் இடம் பெற்றது. பேராசிரியர் பெயர் துணைவேந்தராக அறிவிக்கப்பட்டதாகச் செய்தி வந்து பல தரப்புகளிலும் இருந்து வாழ்த்துகள் குவிந்தன. ஆனால், செல்வாக்கு உள்ளவர்களின் சொல்வாக்கிற்கு இரையானதால் பேராசிரியர் துணைவேந்தராக அமர்த்தப்படவில்லை. முதல் பட்டிப்பில் அவர் பெயர் இருந்ததாகவும் இரண்டாவது பட்டிப்பில் அவர் பெயர் இல்லை என்பதால் பணியமர்த்த இயலவில்லை என்றும் மழுப்பலான கருத்து தெரிவிக்கப்பட்டது. இத்தகைய மற்றொரு பட்டிப்பு (panel) என்பது முதலும் கடைசியுமாக அப்பொழுது மட்டும்தான் இடம் பெற்றது. பாவாணர், பெருஞ்சித்திர னார் முதலான தமிழறிஞர்கள் அரசிற்குக் கண்டனம் தெரிவித்தனர். மாணவர்கள், தமிழன்பர்கள் என அணி அணியாக வந்து பேராசிரியரைச் சந்தித்துத் தங்கள் குமுறலைக் கொட்டினர். பேராசிரியர் அமைதியாகத் தமிழ்ப்பேராசிரியரைத்தானே அரசு துணைவேந்தராக அமர்த்தி உள்ளது. மகிழ்ச்சி கொள்வோம் என அமைதிப்படுத்தினார். முதலில் வந்த செய்தியால் பேராசிரியரே மதுரைப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தர் என்னும் கருத்து பலரின் உள்ளங்களில் பதிந்து விட்டது. இன்றும் கூட அவரைப்பற்றிப்பேசுபவர்கள் மதுரைப்பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக இருந்தார் என்று கூறும் அளவிற்கு ஆழமான கருத்துப் பதிவாக அமைந்து விட்டது. தமிழுக்காக வாழும் போராளி, பல்வேறு போராட்டங்களுக்கிடையே தமிழ்க்கனவுகளை நிறைவேற்றும் போராளி, துணைவேந்தரானால், பயிற்சி மொழிக்கனவை நிறைவேற்றித் தமிழக மறுமலர்ச்சிக்கு வித்திட்டிருப்பார் எனக் கருத வேண்டிய அவர் மாணவரே, யார் துணைவேந்தராக இருந்தால் என்ன என்று தடுமாறியதன் விளைவே தமிழுக்குப்பின்னடைவை ஏற்படுத்தி விட்டது. எல்லாம் தமிழில், கல்வியின் உச்ச நிலை வரை தமிழில் என்றெல்லாம் நடைமுறைப்படுத்த கனவு கண்ட பேராசிரியருக்கு அதற்கான வாய்ப்பு இல்லை என்றதும் வருத்தம் வந்தது. ஆனால், பதவியை எதிர்நோக்கி வாழ்பவரல்லரே அவர். எனவே, இதனை மறந்து விட்டுத் தம் போர்ப்பணியில் மீண்டும் ஈடுபட்டு விட்டார்.

தமிழ்நாடு பட்டதாரி ஆசிரியர் தொகுதிக்கான மேலவைத் தேர்தல் வந்தது. சட்ட மன்றத்தில் போட்டியிடுவதாக இருந்த பேராசிரியரிடம் பாராளுமன்றத்திற்கு அனுப்புவதாகக் கூறியவர்கள் மேலவைக்காவது அனுப்பி இருக்கலாம். கழகத்தின் ஆதரவைப் பேராசிரியர் கேட்ட பொழுது நடுநிலை வகிப்பதாகக் கூறி மற்றொருவருக்கு ஆதரவான நிலையை எடுத்தனர். தமிழுக்காக அனைத்தையும் இழந்தவருடன் மற்றொருவரையும் இணையாக எண்ணி நடுநிலை வகிப்பதாகக் கூறியதை நாடகம் என்று சொல்வதல்லாமல் வேறு என்ன சொல்வது? இருப்பினும் பேராசிரியர் முனைப்பாக ஆதரவு திரட்டினார். ஆனால் வாக்களித்தவர்கள் தமிழ் உழைப்பைக்கருதாமல் கட்சிக் கண்ணோட்டத்தில் செயல்பட்டதால் வெற்றி வாய்ப்பை இழந்து இரண்டாம் நிலைக்கு வந்தார்.

அ.தி.மு.க தோன்றியபின் நடைபெற்ற திண்டுக்கல் இடைத் தேர்தலில் மக்கள் திலகம் மா.கோ.இரா.அவர்கள் பேராசிரியரைத்தான் வேட்பாளராக அறிவிக்க இருக்கிறார் எனத் 'தினமலர்' முதலான நாளிதழ்கள் குறிப்பிட்டிருந்தன. அறிஞர்களையும் துறை வல்லுநர்களையும் ஆட்சியில் பங்கேற்கச்செய்ய வேண்டும் என்னும் பேரவாவில் இருந்தமையால் மக்கள் திலகம் அங்ஙனம் எண்ணியது உண்மைதான். எனினும் கடைசிநேரச் சூழலால் அவ்வாறு அறிவிக்கவில்லை. இந்திய நாடாளுமன்ற அமைப்பில் பேராசிரியருக்கு நம்பிக்கை இன்மையால் இது குறித்துக் கவலைப்படவில்லை. எனினும் பேராசிரியர் நாடாளுமன்றத்தில் இடம் பெறும் வாய்ப்பு அமைந்திருப்பின் தமிழுக்கும் ஏற்றத்திற்கான வாய்ப்பு அமைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

தமிழர் திருமணங்கள் தமிழ் முறையில் தமிழில் நிகழ்த்தப்பட வேண்டும் என வலியுறுத்திய தலைவர்களில் பேராசிரியரும் ஒருவர். பிராமணர் அல்லாதார்க்கான இயக்கங்களால் இக்கருத்து வலிமை பெற்றது. பேராசிரியர் ஆயிரக்கணக்கில் தமிழ் முறைப்படித் திருமணங்களை நிகழ்த்தி உள்ளார். அத்திருமண நிகழ்வுகளிலும் தம் நூல்களிலும் தமிழ்த் திருமணங்கள் பற்றிய கருத்தை வலியுறுத்தி உள்ளார். தமிழர் திருமண நெறி இன்ப நெறி எனவும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே எழுத்துச் சான்றுடன் திருமணங்கள் நிகழ்த்தப்பட்டன என்றும் உணர்த்தி உள்ளார்.

பேராசிரியர் பிறர் உரைக்காத புதிய கருத்துகளைத் தம் நூல்கள், கட்டுரைகள், சொற்பொழிவுகள் வாயிலாக விளக்கி உள்ளார். உரையாசிரியர்கள் நால்வருண விளக்கங்கள் தொல்காப்பியர் கொள்கைக்கு முரண் பட்டன; அரிசுட்டாடில் காலத்திற்கு முன்பே தமிழ் இலக்கியக் கொள்கைகள் வகுக்கப்பட்டன; தொல்காப்பியர் குறிப்பிடும் ஐயர் வேறு-பிராமணர் வேறு; உரையாசிரியர் தாம் அறிந்தவற்றையெல்லாம் நூலினுள் புகுத்த முயலுதல் பெருந்தவறு; நச்சினார்க்கினியர் தமிழர் வாழ்வியல் நெறியை மறைத்து விட்டார்; நச்சினார்க்கினியர் வட நூல்களைத் தழுவி உரைத்துள்ளார்; மெய்ப்பாட்டியல் ஆராய்ச்சி வேறு எம்மொழிகளிலும் இல்லை; தொல்காப்பிய மரபியல் 71 முதல் 85 முடிய உள்ள பதினைந்து நூற்பாக்களும் இடையில் நுழைக்கப்பட்டனவே; மரபியலில் நூறு முதல் நூற்றுப் பன்னிரண்டு முடிய உள்ள நூற்பாக்களும் ஆசிரியருடையனவல்ல; மொழி பெயர்க்குங்கால் நாட்டின் மரபுக்கேற்பத் தழுவி இயற்றப்படல் வேண்டும்; உலக ஆராய்ச்சிக்குக் கால்கோளிட்டவர் ஆசிரியர் தொல்காப்பியர்; அறநெறியைக் கூறாதன இலக்கியம் ஆகா; இசைப் பாடல்கள் இனிய தமிழாகவே இருத்தல் வேண்டும்; மொழியின்றி மக்களுக்கு வாழ்வு இல்லை; இலக்கிய இலக்கணம் (Science of Literature) தமிழில்தான் உண்டு; இந்திய மொழிகளின் தாயே தமிழ்தான்; உலக மொழிகளுக்கும் தாய் தமிழ்தான்; திராவிடம் என்ற சொல்லின் தோற்றம் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பிந்தியது; தொல்காப்பியம் கி.மு.1000 ஆண்டுப் பேரெல்லையை உடையது; தொல்காப்பியத்திற்கு முன்னரே எண்ணற்ற இலக்கியங்கள் தமிழில் இருந்துள்ளன; மொழியை இழந்தால் நாட்டையும் இனத்தையும்

இழந்தவராவோம்; என்பன போன்ற பேராசிரியரின் நூற்றுக்கணக்கான முடிவுகள் தமிழுக்குத் தூய்மையும் வளமையும் சேர்த்தன.

இந்தியத்துணைக்கண்டம் முழுமையும்பேசப்பட்ட தமிழ்மொழி இன்றைக்குச் சுருங்கிய அளவில் மாறிப்போனதன் காரணம் பிற மொழிச் சொற்களுக்கு இடம் கொடுத்துப் பேசுவதுபோல் எழுதுவதற்கு முதன்மை அளித்ததே. இவ்வரலாற்றை உணராமல், பேசும் மொழியே உயிர் மொழி எனக் கூறிக்கொண்டு தமிழை மேலும் சிதைப்போர் பெருகி வருகின்றனர். மொழியியல் படித்தவர்களும் ஆழமான எண்ணம் இன்றி இதற்குத் துணை போவதுதான் வருத்தத்திற்கு உரியது. பேராசிரியர் திருத்தமான தமிழ்நடையை வலியுறுத்திப் பேசியும் எழுதியும் வந்துள்ளார். தெ.பொ.மீ. மதுரைப்பல்கலைக்கழகத்தின் துணைவேந்தரானதும் 'தமிழக வரலாறும் பண்பாடும்' என்னும் பாடத்தை நீக்கி விட்டு 'இக்கால இலக்கியம்' என்பதைக் கொணர்ந்தார். இக்கால இலக்கியம் என்னும் போர்வையில் கொச்சைத் தமிழ்நடைகள் உடைய படைப்புகள் கோலோச்சுகின்றன. இதனால் தமிழுக்கு மேலும் கேடுகள்தாம் விளைகின்றன. எழுத்து மொழியை வலியுறுத்திய பேராசிரியரின் கருத்துகளில் ஒன்றைக் காண்போம்.

> "இன்று நம்மில் சிலர், 'மொழியின் உயிர் வழக்கு மொழியில்தான் உள்ளது. வழக்கு மொழியேதான் எழுத்து மொழியாகவும் கொள்ளப்படல் வேண்டும்' என்று கூறிக் கொச்சை வழக்குகளை எழுதி மொழியைச் சிதைத்து வருகின்றனர். வழக்கு மொழி என்பது இலக்கணம் அற்றது அன்று. அதுவும் திருத்தமுடையதாகவே இருக்க வேண்டும் என்பது தொல்காப்பியர் கொள்கை. அன்றியும் பேசுவதுபோல் எழுத வேண்டுமா எழுதுவதுபோல் பேச வேண்டுமா என்ற ஆராய்ச்சியும் இன்று நிலவுகின்றது. பேச்சு வழக்கு வேறு எழுத்து வழக்கு வேறு என்றாலும் இரண்டும் இலக்கண நெறிக்குக் கட்டுப்பட்டன என்பதே தொல்காப்பியர் கூற்று. மொழியை உருவாக்குவதில் கற்றோர்க்கும் கல்லார்க்கும் பங்குண்டு. கற்றவர்கள் தொகை குறைவு. கல்லாதவர் தொகை மிகுதி. இது பெரும்பான்மையோர் காலம். ஆதலின் கல்லாரைப் பின்பற்றிக் கற்றார் மொழியை வளர்த்தல் வேண்டும் என்பர் சிலர். ஆனால், தொல்காப்பியர் கருத்தோ அற்றன்று. எல்லாத்துறைகளிலும் கற்றோர் வழியே மற்றையோர் செல்ல வேண்டும் என்பது. உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே. நிகழ்ச்சி அவர்கட்டாகலான என்று கூறியுள்ளார். கற்றோர் கையாளும் நூன்மொழிதான், இனிமை, தூய்மை, வளமை, செம்மை, ஒண்மை, நுண்மை முதலிய பண்புகளைக் கொள்ள முடியும். செந்தமிழ் என்னும் பெயரே சான்று பகரும். எழுத்துமொழிதான் பேச்சு மொழியைத் திருத்திச் செம்மைப்படுத்தி இனிமையாக்கி வளமுறச் செய்து நிலைக்கச் செய்யும்." *(பேச்சுமொழியும் எழுத்து மொழியும் : குறள்நெறி 1.8.68)*

ஊடகங்கள் வாயிலாகத் தமிழ்க் கொலை நடைபெற்று

வரும் இக்காலக்கட்டத்திலாவது, நாம் விழித்தெழுந்து எழுத்து நடையைப்போற்றித் தமிழை வாழ வைக்க வேண்டும். கலப்பும் சிதைவும் அற்ற தமிழ்நடை குறித்துப் பேராசிரியர் (கையெழுத்தில் அமைந்த) தம் வாழ்க்கைப் பாவியத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

“தலைநகர் சென்னையில் தமிழின் வாழ்வு
கற்றோ ராலும் கல்லா ராலும்
சிதைவுற்றதுவே;செந்தமிழ் மொழியில்
அயல்சொல் கலந்தே அளவளாவுதல்
கற்றவர் என்பவர் நற்றொழிலாயது.
சொற்களைச் சிதைத்துச் சொல்லாடுதலைக்
கல்லார் இயல்பாய்க் கைக் கொண்டனரே
அன்றியும்
மறுமலர்ச்சிதனை வண்டமிழ்க் களித்திட
முனைவோர் போன்று முத்தமிழ் மொழியில்
வேற்றுமொழியின் வேண்டாச் சொற்களை
நூலறிவில்லார் நுவலும் கொச்சையைப்
புகுத்தி எழுதி புதுமை படைத்தனர்
இலக்கணம் எதற்கு எழுத்தாளர்க்கு
இலக்கணம் அறிந்தோர் எழுத்தாளராகார்
என்று செம்மாந்தெங்கும் இருந்தனர்.
மரபு நெறியில் வளர்வதே செம்மொழி
இன்றும் தமிழ்மொழி நின்று நிலவுதல்
தொல்காப்பிய நெறி தொடர்ந்து செல்வதே
ஆதலின் அந்நெறி அனைவரும் போற்ற
நற்றமிழ் மரபில் நன்னூல் பெருக்கிட
புலவர்கள் படையைப்பெருக்கிடச்செய்”க

என்பதே பேராசிரியர் வேண்டுகோள். அழிவிலிருந்து தமிழன்னையை மீட்டெடுக்க நாம் ஒவ்வொருவரும் இலக்குவனார் கூறும் வழியில் தமிழ்நெறி காக்கும் படைஞராக மாற வேண்டும்! தமிழ் மொழியையும் தமிழினத்தையும் தமிழுலகையும் காக்க வேண்டும்!

தம்உடல் நலனைக்கருதாமல் தமிழ் நலனைக் கருதி வாழ்ந்த பேராசிரியருக்குத் திடீர் நலக்குறைவு ஏற்பட்டது. செருப்புக் கடியால் காலில் ஏற்பட்ட புண் உடனே கவனிக்கப்படாமையால் முற்றி விட்டது; மருத்துவமனையில் சேர்ந்தார். பேராசிரியருக்கு நீரிழிவு நோய் உண்டு. அதனால் புண் புரையோடிப் போனதை மருத்துவர்களே கவனிக்கவில்லை. முருகன் தம்மைக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கையில் இருந்த பேராசிரியர் நம்பிக்கை இழந்தார். தமிழுக்காக ஆற்ற வேண்டிய பணிகள் இன்னும் உள்ளனவே எனக் கருதினார். தம் மரண வாக்கு மூலம்போல் தமிழ் விடுதலை குறித்து அறிக்கை விட எண்ணினார்.

தாம் கூறும் அறிக்கையை எழுதுமாறு வேண்டியபொழுது அருகிலிருந் தோர் அவர் நலம் அடைந்து வருவார், ஆதலில் இப்பொழுது அறிக்கை வேண்டா என மறுத்தனர். பின்னர் இந்தியாவிலிருந்து தமிழ்நாடு விடுபட வேண்டும் என அறிக்கை விட்டால் சிறையில் அடைப்பர் என்றனர். தாம் நோயாளியாக இருப்பதால் இங்கே காவலுடன் இருக்கப் போகிறேன். வேறு வேறுபாடு இருக்காது என்றார். சிறையில் அடைத்தாலும் சிறையில் உயிர் போவதால் பிறருக்கு எழுச்சியாவது ஏற்படும் என்றார். ஆனால், அவரது அறிக்கையைப் பின்னர் எழுதலாம் என ஒத்திப் போட்டதால் அவர் கருதிய கருத்துகள்வெளிவராமல் போயிற்று. இதற்கிடையில் பேராசிரியரின் உடல்நலக்கேடு அறிந்து கலைஞரும் இனமானப் பேராசிரியரும் சென்னைக்கு வந்து மருத்துவம் பார்த்துக் கொள்ள வேண்டினர். அதற்கான ஏற்பாடுகளுக்கு அவர்கள் முன் வந்தாலும் மதுரை மருத்துவர் மதுரையிலேயே பார்த்துக் கொள்ளலாம் என்று கூறி விட்டார். பேராசிரியர் சேர்க்கப்பட்டிருந்த மருத்துவமனை இயங்கும் தெருவில் முதல்வர் கலைஞர் உரையாற்ற வந்தார். அப்பொழுது தம்மைக் காண அவர் வருவார் எனப் பெரிதும் பேராசிரியர் நம்பினார். ஆனால், அவர் வரவில்லை. அப்படி வராமல் போனது பெரிதும் ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் பேராசிரியருக்கு அளித்தது. இந்த அதிர்ச்சி அவர் உடல்நிலையில் சீர் கேட்டை உண் டாக்கிற்று. இதுவரை அவர் உடலில் உறங்கிக் கொண்டிருந்த நோய்கள் ஒவ்வொன்றாக விழித்து எழுந்து அவரை வாட்டின. ஒரு நோய்க்குரிய மருந்து மற்றொரு நோய்க்கு ஒவ்வாமையாக மாறியது. வாழ்க்கை முழுவதும் போராடிய பேராசிரியர் வாழ்வின் இறுதியில்கூட நோயுடன் போராடியே உலக வாழ்வை (3.9.73 அன்று) நீத்தார். ஓயாத உழைத்த உலகப் போராளி மீளா உறக்கத்தில் ஆழ்ந்து விட்டார். தமிழுலகம் அழுதது.

“இந்தியை எதிர்க்கு முன்பே ஏனைய மொழிக்க லப்பைச்
சிந்திய தமிழ்வ ளர்ப்புச் செயலிலக் குவனார்க் காணோம்
.. .. ..
பல்கலைக் கழக ஆட்சிப் பதவியின் தகுதி யெல்லாம்
மல்கிய புலவ ரேனும் மதுரையில் ஏமாறுண்டார்
.. .. ..
இந்தியை எதிர்த்து வீழ்த்தி இருந்தமிழ் மீட்டுக் காக்கும்
செந்தமிழ்ப் படையின் மானச் செம்மலை இழந்தோம் என்போம்
.. .. ..”

என மொழி ஞாயிறு பாவாணர் அழுது அரற்றினார்.

பேராசிரியர் இலக்குவனார் கனவு கண்ட ஆட்சி அமைந்தும்கூட அவரின் தமிழ்க்கனவுகள் நனவாகாமலேயே கனவுருவாய் மாறிவிட்டார். தமிழர்களின் நீடுதுயிலை நீக்கப் போராடிய உலகப் போராளியை நீ டுதுயில் தழுவிக் கொண்டது. ஆரிய நோயைப் போக்கிய மன்பதை மருத்துவர் தம் நோயைக் கவனிக்காமையால் நோய்க்கிரையானார்.

தமிழ்த்தாய் தன் தவமகனை அழைத்துக் கொண்டாள்.

இந்நிலை ஒருவர் உண்டோ இலக்குவ னாரை ஒப்பார்
இன்னலே தமிழ்க்கு நேரில் இன்னுடல் ஈய வல்லார்

என்னும் பாவாணரின் வரிகளே, பாரில் உள்ளோரின் அவலக்குரல் ஆனது.



## 5. ஞாலப் போராளி

தாழும் தமிழர்களை மீட்பதற்காக வாழும் வரை போராடிய பேராசிரியரே ஓர் இயக்கம் என்றும் வலிமை மிக்கப் படை என்றும் இன்றும் நினைவில் போற்றப்படுகிறார். இவ்வாறு, தமிழ்ப்பேராசிரியர் சி.இலக்குவனார் உலகப் போராளியாக உயர்ந்து நிற்பதை அறிஞர்கள் பலரும் உரைத்துள்ளனர். "பேராசிரியர் இலக்குவனார் தமிழ் காக்கப் பிறந்த பிறவி! அதற்கு ஊறு நேரும் எனின் தம் தலை தந்தும் காக்க முந்தும் போராளி!" என்கிறார் முதுமுனைவர் இரா.இளங்குமரன் (பக்கம் 9: செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்) பேராசிரியர் தம் பெயருக் கேற்பவே வாழ்நாளெல்லாம் வாழ்ந்தார் என்றும் அவர் பின்வருமாறு தெரிவிக்கின்றார்: "குறிக்கோளைப் பெயராகக் கொண்ட பெருமகனார், தம் வாழ்வாகவே அதனைக் கொண்டமைக்கு, அவர் புரிவு தெரிந்த நாள் முதல் பிரிவு நேர்ந்த நாள் முடிய உள்ள வரலாற்றின் எவ்வொரு பகுதியும் சான்றாக விளங்குதல் கண்கூடு." (பக்கம்1: செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்)

"வாழ்க்கைப் போர் இல்லாமை, இலக்குவனார் வாழ்வில் ஊடே ஊடே இருந்த காலமும் உண்டு. ஆனால்,மொழிப் போர் இல்லா நாள் அவர் வாழ்வில் இருந்ததே இல்லை!" என்று கூறும் முதுமுனைவர் இரா.இளங்குமரன், "மெய்யான மொழிப் போராளி ஒருவர் எப்படி இருப்பார் என்பதை வரைந்து காட்ட வேண்டும் என்றால், அவர் இலக்குவனார் வரைவாக இருப்பார் என்பதில் ஐயமில்லை. அவரை அறிந்தார் அவரோடு பழகினார் எவரும் இதனை மெய்யாக அறிவர்." என அறுதியிட்டு உரைக்கின்றார். (பக்கம்1: செந்தமிழ்க்காவலர் சி.இலக்குவனார்)

படிப்பது அறிவு வளர்ச்சிக்காக என்று சிலரும் பணியில் அமருவதற்காக எனப் பலரும் கருதுகின்றனர். ஆனால், பேராசிரியரோ படிப்பின் பயன் உரிமைகாக்கும் போராளியாகத் திகழ்வது என்று கூறியுள்ளார்.

> "தமிழகத்தின் உரிமைக்கும், தமிழ் மொழியின் உயர்வுக்கும் உழைப்பதே எனது உறுகடனாம் என்று உறுதி கொள்ளச் செய்தது. தமிழ்ப் போரே எனது வாழ்க்கைப் போர் என்னும் குறிக்கோளை வாழ்வின் உயிராக ஏற்றுக் கொண்டேன். புலவர் படிப்பால் பெற்ற பயன் இஃதேயாம்"

என்று பேராசிரியர் தம் வாழ்க்கைப் போர் நூலில் குறிப்பிடுகின்றார். எனவே, பேராசிரியரிடம் இயல்பாக இருந்த குறை களையும் பண்பும் தீங்கினை எதிர்க்கும் உணர்வும் புலவர் படிப்பால் அவரைப் போராளியாக்கியது எனலாம்.

பேராசிரியர் எண்ணம், செயல் யாவும் தமிழர் நலன் சார்ந்ததே. எனவேதான், தாம் எழுதிய 'கருமவீரர்காமராசர்' நூலின் முன்னுரையில் பின்வருமாறு குறித்துள்ளார்:

> "தமிழ் எமது உயிர்; தமிழன் உயர்வே தமிழ்நாட்டின் உயர்வு. தமிழ்நாட்டில் தமிழுக்குத்தான் உயர்வு உண்டு. தமிழ்நாடு ஏனைய நாடுகள் போல் உரிமையாட்சி பெற்றுத் தமிழர்களால் ஆளப்பட வேண்டும். குலமும் குடியும் ஒன்றே, வழிபடும் கடவுளும் ஒன்றே. யாதும் ஊரே யாவரும் கேளிர். குறள் நெறியோங்கினால் குடியரசோங்கும். - இக் கொள்கைகளே எம் வாழ்வை இயக்குவன. யாம் ஒரு புலவர், எழுத்தாளர். ஆகவே யாம் யாவர்க்கும் பொதுவான நிலையில் உள்ளோம். கட்சி காரணமாக விருப்போ வெறுப்போ கொள்ளவேண்டிய நிலையில் இல்லோம். ஆனால், தமிழ்ப்பகைவர் எமது பகைவராவர். தமிழ் நண்பர் எமது நண்பராவர்."

பிற போராளிகள் வாழ்வில் குறிப்பிட்ட களத்தில் நின்று மக்கள் நலம் காத்தார்கள். ஆனால், பேராசிரியர் சந்தித்த போர்க்களங்கள் மிகுதி. இவரைப்போல் வேறு யாரும் இத்தனைப் போர்க்களங்களைச் சந்தித்ததில்லை எனலாம்.

> ஆய்வுரைப் போர்வையில் தமிழுக்கு எதிராகப் பரப்பும் கருத்துகளுக்கு எதிரான போர்! கால ஆராய்ச்சி என்ற பெயரில் முந்தைத் தமிழின் காலத்தைப் பின்னுக்குத் தள்ளுவோருக்கு எதிரான போர்! தாய்மொழித் தமிழைப் படிப்பிப்பதால் தமிழாசிரியர்களுக்கு மறுக்கப்படும் உரிமைகளை மீட்பதற்கான போர்! என்றும் தமிழ் எங்கும் தமிழ் துலங்க வேண்டும் என்பதற்கான போர்! அயல் மொழிகளில் மறைக்கப்படும் உயர்தனிச் செந்தமிழ்ச் சிறப்புகளை வெளிக்கொணருவதற்கான போர்! தமிழால் வாழ்ந்தும் தமிழையே தாழ்த்துவோருக்கு எதிரான போர்! சங்கத்தமிழின் மங்காச் சிறப்பை மறைப்போருக்கு எதிரான போர்! இதழ்களில் தமிழ் இலங்க வேண்டும் என்பதற்கான போர்! கலப்பு நடையைக் கலங்க வைப்பதற்கான போர்! தமிழ்ப்பயிற்றுமொழிச் செயலாக்கத்திற்கான போர்! ஒல்காப்

புகழ்த் தொல்காப்பிய இடைச் செருகல்களுக்கு எதிரான போர்! குறள்நெறிக் காப்பிற்கான போர்! தமிழர் இனநலங் காக்கப் போர்! தேமதுரத் தமிழோசையைஉலகெங்கும் பரவச் செய்வதற்கு எதிரான தடைகளை எதிர்த்துப் போர்! தமிழ்நாட்டின் தமிழ்த் தெருவில் தமிழ்தான் இல்லை என்ற நிலையை மாற்றுவதற்கான போர்! எனத் தம் வாழ்க்கையையே தமிழ்க் காப்புக்கான போர்க்களமாக ஆக்கிக் கொண்டவர் தமிழ்க்காப்புத்தலைவர் பேராசிரியர் சி.இலக்குவனார். தமிழ்த் தேசியம் பற்றியும் கூட்டாட்சி பற்றியும் தமிழாட்சி பற்றியும் இன்றைக்குப் பேசுவனவற்றை அன்றைக்கே தமிழ்க்காப்புத்தலைவர் பேராசிரியர் சி.இலக்குவனார் எண்ணிச் செயல்பட்டதுதான் அவருக்குரிய பெருஞ்சிறப்பு. *(பன்னாட்டுத் தமிழ் நடுவம் இரண்டாவது தமிழ் மாநாட்டு மலர் 2003:பக்கம் 130)*

நாம் பேராசிரியர் போல் போராளியாகத் திகழாவிட்டாலும் உரிமையுள்ள தமிழ் மாந்தராகவாவது வாழ வேண்டுமல்லவா? அதற்குப் பேராசிரியரின் பின் வரும் அறிவுரைகளை அவர் நமக்கு இட்ட கட்டளைகளாகக் கொண்டு ஒழுக வேண்டும்:

*மொழியைக் காத்தவர் விழியைக் காத்தவர்!*
*மொழியைச் சிதைத்தவர் விழியைச் சிதைத்தவர்!*
*மொழிக்கும் விழிக்கும் வேற்றுமை இல்லை!*
*'மொழியே விழி! விழியே மொழி!' என்று கிளர்ச்சி கொள்ளுங்கள்.*
*தமிழ் எங்கள் உயிருக்கு நேர்! என்று அறைகூவுங்கள்.*
*தமிழ் வாழ்க! தமிழ் வாழ்க!*
*தமிழ் ஓங்குக! தமிழ் உயர்க!*
*என்று வாழ்த்துங்கள்.*
*தமிழில் எழுதுக! தமிழில் பேசுக!*
*தமிழில் பெயரிடுக! தமிழில் பயில்க!*
*என்று முழங்குங்கள்.*
*மொழி வாழ்வுக்கு முயற்சி செய்யுங்கள்...*
*உங்கள் முயற்சி வாழ்க!*
*தமிழ் வாழ்ந்தால் தமிழர் வாழ்வர்!*
*தமிழர் வாழ்ந்தால்தமிழ்நாடு வாழும்!*
*தமிழ் வாழ்வே தமிழர் வாழ்வு! (குறள்நெறி:15.08.1965)*

நாம் ஒவ்வொருவருமே மொழிநலம், இனநலம் காக்கப் பின்வரும் பேராசிரியர் முனைவர் சி.இலக்குவனார் அவர்களின் பாடலை அன்புக் கட்டளையாக ஏற்றுப் பின்பற்றுவோமாக.

## இன்றமிழ் காமின்

பொன்னும் பொருளும் புவியும் புகழும்
புன்னுறு செல்வம் அனைத்தும் பாரில்
பெற்றுள தமிழர் சற்றும் தமிழினை
எண்ணிப் போற்றா திருப்பரேல் எல்லாம்
கொன்னே கழிய கூற்றுக் கொருநாள்
நல்லிரை யாகி நடுங்கி மறைவர்.
இன்தமிழ் எம்மொழி என்னும் நினைப்பால்
உள்ளம் மகிழார் உயிருடை யரேனும்
நடைப்பிணமாக நாளைக் கழிப்பரே.
ஆதலின்
நற்றமிழ் மாந்தரே நாடு வணங்கிட
தமிழ்ப் புகழ் பரப்புமின்! தந்நலம் அகற்றுமின்!
பிறரைக் கெடுக்கும் பேதைமை ஒழிமின்!
வளவிய வான்பெருஞ் செல்வமும் பதவியும்
நில்லா வென்பதை நினைவில் கொண்மின்!
அஞ்சி வாழும் அவலம் போக்குமின்!
கரந்த வாழ்வு கடவுள் முனின்றென
எல்லாம் அளித்தும் இன்தமிழ் காமின்!

“தமிழ்த்தாயைப்பார்க்க வேண்டும் என்பவர்களுக்கு இலக்குவனார் படத்தைக் காட்டலாம். இலக்குவனாரை மனத்தில் வைத்து வரைந்தால்தான் தமிழ்த்தாய்ப்படம் வரையமுடியும். இலக்குவனாரே தமிழ்! தமிழே இலக்குவனார்!” என்கிறார் பேரா.கண. சிற்சபேசன்.(ஒய்.எம்.சி.ஏ.பட்டிமன்ற உரை, நட்பு இணைய இதழ்) தமிழாய் வாழ்ந்த பேராசிரியரின் எஞ்சிய கனவுகளை நனவாக்குவதைக் குறிக்கோளாகக் கொண்டு வாழ்வோம்.

இலக்குவனார் வழி நின்று இன்தமிழ் காப்போம்!

போராளி இலக்குவனாரைப் போற்றி வணங்குவோம்!

★ ★ ★

## அறிமுகம்

தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் அண்மைக் காலத்தில் நேர்ந்துள்ள கடுமையான நெருக்கடிகளைச் சுட்டிக் காட்டுவதற்காகவும் நெருக்கடிகளுக்கான தீர்வு உண்டா என்பது பற்றிய சிந்தனைகளைத் தூண்டுவதற்காகவும் 1998 முதல் தமிழ்நேயம் இதழ் இன்று வரை செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

இறுதியாக, சென்ற ஆண்டின் தொடக்கத்திலிருந்து கடந்த 25 ஆண்டுகளுக்கிடையில் நடைபெற்ற தமிழியல் ஆய்வுகளைத் தமிழ் மாணவர்களும் ஆய்வாளர்களும் தெரிந்து கொள்ளும் முறையில் தமிழறிஞர்கள், பேராசிரியர்கள் எழுதும் விரிவான கட்டுரைகளைத் தமிழ்நேயம் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது.

தமிழையும் தமிழ் வாழ்வையும் தமிழ் வரலாற்றையும் நமக்குள் தக்கவைத்துக் கொள்வதென்றால், தமிழ்நிலத்தையும் தமிழ்நாட்டின் இயற்கை வளங்களையும் தமிழர்களின் தொழில் முதலியவற்றையும் அந்நியர்களின் ஆதிக்கத்திலிருந்தும் உள்நாட்டு கொள்ளையர்களிடமிருந்தும் காக்கும் முறையில் நாம் செயல்பட்டாலன்றி நமக்கு எதிர்காலமில்லை. ஈழத்தமிழகத்திற்கு நம்மவர் செய்த இரண்டகத்தை நம் வரலாற்றிலிருந்து துடைத்தெறிய முடியாது. ஈழத்தமிழகத்தின் அழிவுக்கென செயல்பட்ட இந்திய அரசு நம்மையும் விட்டுவைக்குமெனத் தோன்றவில்லை. கூடங்குளம் அணுமின்நிலையச் சிக்கல் முதலியவை இந்த உண்மையைத்தான் நடக்குச் சுட்டிக் காட்டுகின்றன.

இத்தகைய சூழலில்தான் நூறாண்டு கண்ட பேராசிரியர் இலக்குவனார் அவர்களின் சீரிய வாழ்வையும் காலம் முழுவதும் அவர் தமிழுக்காகவும் தமிழரின் தன்னுரிமைக்காகவும் நடத்திய போராட்டங்கள் பற்றியும் நாம் நினைவுபடுத்திக் கொள்வது தேவையாகின்றது. தமிழ் உணர்வாளர்களும் தமிழறிஞர்களும் பேராசிரியர் இலக்குவனார் அவர்கள் தம் வாழ்வின் மூலம் முன்னிறுத்திய தமிழ்த்தேசிய உணர்வை இன்று முழு அளவில் பெறுவதும் இன்றியமையாத தேவையும் ஆகிறது. இலக்குவனார் அவர்களை, அவர் வாழ்ந்த காலமெல்லாம் நெருக்கடிக்குள்ளாக்கிய தீய சக்திகள் இன்றைக்கும் நமக்குள்ளும் வெளியிலும் செயல்பட்டுக் கொண்டுதானிருக்கின்றன. இவை குறித்தெல்லாம் நம் உணர்வைத் தூண்டும் முறையில் திருவள்ளுவரின் செரிவான கட்டுரையை மிகுந்த மகிழ்ச்சியோடு, அவரது இல்லத் திருமணத்தையொட்டி இந்தச் சிறப்பிதழை தமிழ்நேயம் வெளியிடுகிறது. மணமக்களுக்கு எங்கள் நெஞ்சம் நிறைந்த வாழ்த்துகள்.

எத்தனையோ நெருக்கடிகள் தம்மைத் தாக்கிய நிலையிலும், தொல்காப்பிரும் திருவள்ளுவரும் தமக்குள் உரமேற்றிய தமிழ் அற உணர்விலிருந்து சிறிதும் தவறாமலும் தமிழ் வாழ்வின் பெருமித உணர்விலிருந்து தளராமலும் இன்றைக்கும் நம்மோடு வாழும் தமிழறிஞர்களின் மனச்சான்றைத் தட்டியெழுப்பும் முறையில் வாழ்ந்த அந்தப் பேராறிஞர் தமிழ் உள்ளளவும் குன்றாத ஒளிவிளக்காய் நம்மோடு வாழ்வார் என்பதில் ஐயமில்லை.

*நன்றி!*

***15-02-2012*** — ஞானி

ஆசிரியரும் வெளியிடுபவரும்

கி.பழனிச்சாமி (ஞானி)

*24, வி.ஆர்.வி நகர், ஞானாம்பிகை ஆலை (அஞ்சல்)*

கோயம்புத்தூர் - ***641 029.*** தொலைபேசி : ***0422 - 2648119***

மயூரா அச்சகம், கோயம்புத்தூர் *641 009.* தொலைபேசி : *9360 789 001 / 002*